ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார்

திருவாய் மலர்ந்தருளிய

# திருவாய்மொழி

## ஒன்பதாம்பத்து

இதற்கு

* தெள்ளாரும் ஞானத் திருக்குருகைப்பிரான்
அருளிச்செய்த ஆறாயிரப்படியும்.

* அன்போடழகிய மணவாளச்சீயரருளிச்செய்த
பன்னீராயிரப்படி உரையும்

* தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறி தன்னை
வள்ளல்வடக்குத்திருவீதிப் பிள்ளை அருளிச்செய்த
ஈடு முப்பத்தாறாயிரம்
வ்யாக்யாநமும்

---

ஸபாபண்டிதரான
ஸ்ரீமான், புதுப்பட்டு-திருவேங்கடாசார்யரால்
பரிசோதிக்கப்பட்டு

---

ஸ்ரீவைஷ்ணவ கிரந்த முத்ராபக சபையாரால்
சென்னை:
ஸ்ரீநிகேதந முத்ராக்ஷர சாலையில்
அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்பட்டது.
ஸ்ரீமுக ௵

1933



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.



# திருவாய்மொழி

## ஒன்பதாம்பத்து.

### முதற்றிருவாய்மொழி—கொண்டபெண்டிர் ப்ரவேஶங்கள்.

ப:—ஒன்பதாம்பத்தில், கீழேழாம்பத்திலு மெட்டாம்பத்திலும் விரோதிஸ்வரூபத்தையும் தந்நிவ்ருத்தி ப்ரகாரத்தையு மருளிச்செய்து, மேலிரண்டுபத்தாலும் ப்ராப்திபலாவாப்தியை யருளிச்செய்வதாக, இப்பத்திலே பலஸ்வரூபத்தை நிரூபிப்பதாகக்கொண்டு பலபூதனான ஈஶ்வரனுடைய நிருபாதிகதையையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்திதயா நித்ய ப்ரார்த்த்யத்வத்தையும், நிரதிஶயபோக்ய ஶீலாதிகுணயோகத்தையும், நித்யாபூர்வ போக்யதையையும், ஸ்மரணதசையிலே ஸௌஶீல்யஜநகமான போக்யகுணவத்தையையும், ஸ்ம்ருதிஸௌஶீல்ய முடையாரை புஜிப்பிக்கையிலுண்டான ப்ரதமோத்யோகவத்தையையும், அத்யர்த்தாதரணீய கடக கம்யத்வத்தையும், பத்நீபரிஜநாதிபூர்த்தியையும், அல்ப காலவிளம்பத்திலும் அதிக்லேஶாவஹத்வத்தையும், பக்திகாரிதமான கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும் அருளிச்செய்து, அவனுடைய பலரூபத்வத்தை யருளிச்செய்தருளுகிறார்; முதலிரண்டுபத்தாலே நிரூபித்த ப்ராப்ய ஸ்வரூபத்தினுடைய ப்ரயோஜநரூபத்வ மிங்கே நிரூபிக்கப்படுகிறது.

முதற்றிருவாய்மொழியிலே, ததீயஶேஷத்வ போக்யதா ப்ரதிபத்திபிறக்கும்படி ஸமஸ்தவிரோதி நிவ்ருத்தி பிறந்தபின்பு, அந்த ததீயஶேஷத்வ போக்யதாமூலமான தத்போக்யதையை அநுஸந்தித்து, அவனுடைய ஸர்வப்ரகாரபலத்வத்துக்கு உபபாதகமான ஸர்வவிதபந்துத்

வத்துக்கு ப்ரகாஶகமான ஆபத்ஸகத்வத்தையும், அவிஶ்வாஸநிராஸகத்வத்தையும், அநிஷ்ட நிராஸக க்ருபாயோகத்தையும், அவதாரப்ரயுக்த குணோத்தரதையையும், அநிஷ்டத்வம்ஸகத்வமடியான அபிகமநீயதையையும், கீர்த்தநீயகுணவத்த்வத்தையும், சிந்தாமாத்ரஸுலபத்வத்தையும், உஜ்ஜீவநஹேதுத்வத்தையும், போக்யவிக்ரஹவிசிஷ்டதையையும், பூபார நிராஸகத்வத்தையு மநுஸந்தித்து. "ஏவம்பூதனான ஸர்வேஶ்வரனே நிருபாதிகபந்துவானவன்; அல்லாதார் உபாதிநிபந்தநபந்துக்கள், ஆதலால் அவர்களைவிட்டு, நிருபாதிகபந்துவான விவனையே பற்றி உஜ்ஜீவியுங்கோள்" என்று தாமறுதியிட்டவர்த்தத்தை தம்மைப் பற்றினார்க்குத் தஞ்சமாக வுபதேசித்தருளுகிறார். *

ஈடு;—ஒன்பதாம்பத்தில் முதற்றிருவாய்மொழி, கீழ்திற்றிவாய்மொழியிலே, பாகவதஶேஷத்வபர்யந்தமாக நிரதிஶய புருஷார்த்தத்தை நிகிலவிரோதிநிவ்ருத்திபூர்வகமாக அவன்காட்டிக்கொடுக்க அதிப்ரீதியோடே அந்த மஹோபகாரத்தை அநுஸந்தித்து "சயமேயடிமைதலைநின்றார்" என்றும், "நீக்கமில்லாவடியார்" என்றும் "கோதிலடியார்" என்றும் பாகவதரை விரும்பினாரா நின்றார்.

ஆப்பான் திருவழுந்தூரரையர் ஆஶ்ரயித்ததும், திருவாய்மொழி கேட்டதும் - ஆழ்வானோடேயிறே; "'சயமேயடிமை தலைநின்றார்' என்றது ஸ்ரீபரதாழ்வான்போல்வாரை; 'நீக்கமிலலாவடியார், என்றது இளையபெருமாள்போல்வாரை; 'கோதிலடியார்' என்றது ஸ்ரீஶத்ருக்நாழ்வான் போல்வாரைக்காணும்" என்று ஆழ்வான் பணித்தாகைப் பணிப்பர்.

"இப்படிப்பட்ட பாகவதஶேஷத்வமாகிற புருஷார்த்தத்தினெல்லையை நமக்குத்தந்த ஸர்வேஶ்வரனே நிருபாதிகபந்து, அல்லாதாரடங்க ஸோபாதிகபந்துக்கள். அவனே நிருபாதிக ஸுஹ்ருத்து, அல்லாதார்பக்கல் தோற்றுகிற ஸௌஹார்த்தம் ஸோபாதிகம்; என்று ப்ராப்யாபாஸங்களைத் தவிர்த்து, அவனே ப்ராப்யனென்றும், ப்ராபகாபாஸங்களைக்கழித்து அவனை ப்ராபகனென்றும், அறுதியிட்டுப் பிறந்தலாபத்தாலுண்டான ஹர்ஷத்தாலே சேதநரைக்குறித்து, "நீங்கள் ஸோபாதிகபந்துக்களான வல்லாதாரை விட்டு நிருபாதிகபந்துவான அவனையேபற்றி உஜ்ஜீவிக்கப் பாருங்கோள்" என்று பரோபதேசே ப்ரவ்ருத்தராகிறார்.

(௧) ஸர்வேஷாமேவலோகாநாம் - ஸர்வேஷாமேவலோகாநாம்" இத்யாதி; (௨) "அவ்யய:பிதா - அவ்யய:பிதா" அல்லாதார், தாய் தமப்பனென்றுபோராய், நாலுநாளிருந்து மணற்கொட்டகம் போலே கழிந்துபோவார்கள், அங்ஙனன்றிக்கே அழியாதே யென்று மொக்க ரக்ஷகனும் பிதா அவனேயாயிற்று; தனக்கு ஹிதஞ்சொன்ன விபீஷணனை (௩) "த்வாந்து திக்" - த்வாந்துதிக்" என்று புறப்படவிட்டானிறே ராவணன்; அவன் தம்பியையொழியச் செல்லா தென்றாரிறே பெருமாள். மஹாராஜர் ஜ்யேஷ்டனாலே நோவுபட்ட தனிமையிலேவந்து உதவினாரிறே; பெருமாள். பெற்றதமப்பன் பகையாக, அவனிலுமண்ணியனாய்வந் துதவினாரிறே ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானுக்கு; மாதாபிதாக்கள் கைவிட்டஜயந்தனுக்கு, ப்ரஹ்மாஸ்த்ரந்தொடுத்துக் கொடுநிற்கிறவர்தாமேயிறே புகலானார்; (௪) "ஸவித்ராவ-ஸபித்ராச" இத்யாதி. [ஸ:] நீரிலேபுக்கழுந்துவாரைப்போலே தாரகரானவரே பாதகராய் அம்புதொடுக்கும்படி சூழ்த்துக் கொடுநின்ற அவன். ஶேஷம்பூர்வவத்.

த்ரௌபதி, தர்மப்ரதாநரான பர்த்தாக்களைவரும் வெறுந்தரையைக்கீறியிருக்க, அவர்களையொழிய தூரஸ்த்தனான க்ருஷ்ணனையேநினைக்க, "அவள் ஆபந்நையாய் நம்மை நினைக்க, நாமுதவப் பெற்றிலோம்" என்று (௫) "க்ருஷ்ண" - "ருணம்ப்ரவ்ருத்தமிவமே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி யத்கோவிந்தேதி சுக்ரோஶ-க்ருஷ்ணாமாம்தூரவாஸிநம்" என்று புண்பட்டானவனிறே. அர்ஜுனன் "என்னபிமதமென்னால் தலைக்கட்டிக்கொள்ளவரிது" என்றுஶோகிக்க; "உன்னைத்தொற்றி வருவதொன்றுபேற்றுக்குடலாமன்றிறே உனக்கு ஶோகிக்கவேண்டுவது, உன்னுடைய ஸர்வபாரங்களையும் நம் தலையிலேபொகட்டு, நாமே கடவோமென்றிரு, உன்னுடைய விரோதிவர்க்கத்தை யடைய நாமே போக்கித்தருகிறோம்" என்றானிறே. இப்படிகளாலே "அவனே நிருபாதிகபந்து, அவனையேபற்றப்பாருங்கோள்" என்று தாமறுதியிட்டவர்த்தத்தைத் தம்மைப் பற்றினார்க்குத் தஞ்சமாக வுபதேசித்தருளுவதாக பரோபதேச ப்ரவ்ருத்தராகிறார். *

---

(௧) பார-உத்யோ (௨) ஸஹஸ்ரநாம

(௩) ரா-யு-௧௬-௧௫- (௪) ரா-ஸு-௩௮-௩௩.

(௫) பார-

# முதற் பாட்டு.

கோண்டபெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர்பிறரும் * கண்
டதோடேபட்டதல்லால் காதல்மற்றியாதுமில்லை * எண்டிசையுங்
கீழும்மேலும் முற்றவமுண்டபிரான்*தோண்டரோமாயுய்யலல்லா
லில்லைகண்டீர்துணையே. (௧)

ப:—முதற்பாட்டில், ஔபாதிகபந்துக்களான, தாரபுத்ராதிகளா லொருப்ரயோஜநமில்லை; அசேஷஜகத்தையும் வயிற்றிலேவைத்துநோக்கின ஆபத்ஸகனானவனுக்கு அடியராமதொழிய வேறுதுணையில்லையென்கிறார்.

(இ-ள்.) கொண்ட - ஸம்பந்துக்களாக நெஞ்சிலேகொள்ளப்பட்ட பெண்டிர் - தார, மக்கள் - புத்ராதி, உற்றார் - ஸம்பந்தி, சுற்றத்தவர் - பார்ந்தவர்களும், பிறரும் - மற்றும் மித்ரப்ருத்யப்ரப்ருதிகளும், கண்டதோடு - தங்கையிலே ப்ரயோஜநங்கண்டபோது, பட்டதல்லால்-உடன்படுமதொழிய, மற்று - ப்ரகாராந்தரத்திலே, யாதும் - ஏகதேசமும், காதலில்லை - ஸ்நேஹமுடையாரலலர். ஆதலால், எண்டிசையும் ஸமஸ்ததிக்குக்களோடேகூடின, கீழும் - பூமியையும் பாதாளங்களையும், மேலும் - ஊர்த்வலோகங்களையும், முற்றவும் - எல்லாவற்றையும், உண்ட-ப்ரளயங்கொள்ளாதபடி யமுதுசெய்துநோக்கின, பிரான் - மஹோபகாரகனுக்கு தொண்டரோமாய் - அடியோமாய், உய்யலல்லால் உஜ்ஜீவித்தலல்லது, வேறுபத்துக்கு. இல்லைதுணை - துணையில்லை. (௧)

ஆறு—(கோண்டபெண்டிர்) இந்தபாகவதகைங்கர்யரூப ஸம்பத்தை பாகவதகைங்கர்யரதிகளாயிருப்பாரோடே புஜிக்கையிலே அபேக்ஷையுடையரான வாழ்வார், ததாவிதரை இந்தலோகத்திலே காணாமையாலே இந்த லோகத்திலுள்ளாரையே பாகவதசேஷதைகரதிகளாக்கிக்கொண்டாகிலும் அவர்களோடே இப்போகத்தை புஜிக்கைக்காக, பாகவதசேஷதைகரதித்வத்துக்கு உபாயமாக, அவர்களைப்பார்த்து, உங்களுக்கு ஸோபாதிக ஸ்நேஹரான களத்ராதிகளோடுள்ள வுறவைவிட்டு, அகாரணஸுஹ்ருத்தாய் ப்ரளயகாலத்திலெல்லாரையும் தன்திருவயிற்றிலேவைத்துப் பரிஹரித்தருளின மஹோபகாரகனான வெம்பெருமானுக் கடியோமாயுய்கையொழிய வேறுரக்ஷகரில்லையென்கிறார். (௧)

ஈடு; அவ;—முதற்பாட்டில். “ஔபாதிகபந்துக்களான தாரபுத்ராதிகளாலொரு ப்ரயோஜநமில்லை, நிருபாதிகபந்துவானவனே ஆபத்ஸகன். அவனையேபற்றி யுஜ்ஜீவியுங்கோள், வேறு துணையில்லை” என்கிறார்.

(கொண்டபெண்டிரித்யாதி) தான் தன் ஹ்ருதயத்திலே பந்துக்களாக நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல், (கொண்டபெண்டிர்) நிருபாதிகமாகவந்ததன்றிக்கே த்ரவ்யாத்யுபாதிகளாலே பரிக்ரஹித்தஸ்த்ரீகள். அன்றிக்கே மாதாபிதாக்களைச் செங்கற்சீரை கட்டவிட்டு, தானார்ஜித்ததநத்தை யடையக்கொடுக்கும்படி தஞ்சமாக நெஞ்சிலேகொண்ட பெண்டிரென்றுமாம். ஆசார்யனும், பரதேவதையும், ஐஶ்வர்யாதிகளுமெல்லா மிவளேயாகக் கொண்டபெண்டிரென்றுமாம். இவளுண்டாகையிறே யெல்லாமென்றிருக்கை. அன்றியே, இது ஸர்வவிஶேஷணமாய், பந்துக்களாகத்தான் நினைத்திருக்கும் பார்யாதிகளென்னுதல்.

(மக்கள்) அப்படிப்பட்டவளுடைய யௌவநத்தையழிய மாறிப்பெறும் ப்ரஜைகள். (உற்றார்) தனக்கும் ஸத்ருஶவிஷயமென்று ஆதரித்தஸம்பந்திகள். (சுற்றத்தவர்) அவர்கள் மதிக்கும்படியான ஜ்ஞாதிகள். (பிறரும்) அந்யரும், முன்புசொன்னவர்களும், இவர்களிற்காட்டில் வாசிபெரிதன்றென்கை (பிறரும்) மித்ரப்ருத்யாதிகளென்றுமாம்; (கண்டதோடுபட்டதல்லால்) ஸந்நிதியிலே ஸ்நேஹிக்குமதொழியவென்னுதல், கையிலே த்ரவ்யங்கண்டபோது அத்தைப்பற்ற ஸ்நேஹிக்குமதொழியவென்னுதல், (காதல்மற்றுயாதுமில்லை) ப்ரயோஜநங்கண்டபோது உடன்படுமதொழிய, ப்ரகாராந்தரத்தி லேசதேஶமும் ஸ்நேஹமுடைய ரல்லரென்னுதல், காணாதபோது மெய்யானஸ்நேஹமொன்றுமில்லை யென்னுதல், கண்டதுக்குமற்று - காணாதபோதிறே. (காதல்மற்று) ஸ்நேஹமும், அதுக்கெதிர்த்தலையான த்வேஷமுமில்லையென்னுதல், ஸ்நேஹமுமதுக்கடியான பந்தமுமில்லை யென்னுதல்.

(எண்டிசையுமித்யாதி) பத்துதிக்கிலுமுண்டான ஸகலசேதநரையும் பிரிகதிர்ப்படாமே திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தவன், இவற்றின் பக்கலொன்றுமில்லாதவன்று ரக்ஷிக்குமவன். ப்ரளயாவஸ்த்தையில் ரக்ஷிக்கைக்கு ஸாதநமுமில்லை, அர்த்தித்வமுமில்லை

யிறே. ரக்ஷிக்கைக்குத்தானறிந்தவாபத்தும் ஸம்பந்தமுமிறே வேண்டுவது; அப்போது விலக்குகைக்குப் பரிகாரமில்லையே. (பிரான்) உபகாரசீலனானவன். (தொண்டரோமாயுய்யலல்லால்) அவனுக்கு நம்மதாயிருப்பதொன்று கொடுக்கவேண்டுவதில்லை - அடியோமாய் உஜ்ஜீவிக்கு மதொழிய.

சேஷத்வம் ஸ்வரூபமானபின்பு அத்தைவிழுக்கையாவது-விநாசமிறே. அந்வயத்தாலே யன்றிக்கே வ்யதிரேகத்தாலு மிவ்வர்த்தத்தை த்ருடீகரிக்கிறார். ( இல்லைகண்டீர்துணையே ) ஆபத்துக்கு வேறோரபாச்ரயமுண்டாயிருக்க இவனைப்பற்றச்சொல்லுகிறதல்ல இது, அவனைப்பற்றி ஸ்வரூபம்பெறுதல்; இல்லையாகில் இல்லையாமித்தனை.

(௧)

## இரண்டாம்பாட்டு.

துணையுஞ்சார்வுமாகுவார் போல்சுற்றத்தவர்பிறரும்* அணைய வந்தவாக்கமுண்டேலட்டைகள்போல் சுவைப்பர் * கணையொன்றாலேயேழ்மரமுமெய்த வெங்கார்முகிலை * புணையென்றுய்யப்போகிலல்லாலில்லை கண்டீர்பொருளே.

(௨)

ப:—அநந்தரம், அவிஸ்வஸநீயரான அநுபகாரகரை பந்துபுத்தி பண்ணாதே, விஸ்வாஸஜநகனுமா யுபகரிக்குமவனை யாச்ரயித்தாலல்லது ப்ரயோஜநமில்லையென்கிறார்.

(இ-ள்) ஸாதநுக்கங்களுக்கு, துணையும்-ஸஹாயபூதருமாய், ஆபத்துவந்தால், சார்வும்- அபாச்ரயமும், ஆகுவார்போல் - ஆவாரைப்போலே, சுற்றத்தவர்-பந்துக்களும், பிறரும்-மற்றுமுள்ளாரும், அணைய-தங்களுக்குக்கிட்ட, வந்த-வரும், ஆக்கம்-ப்ரோஜநம், உண்டேல்-உண்டாகில், அட்டைகள்போல்-அட்டைகள்போலே, சுவைப்பர்-இவன்தனக்கு உபகாரமென்று நினைக்கும்படி பசையறச்சுவைத்துவிடுவர்; அப்படியன்றியே, ஆபத்திலே அபாச்ரயமான தன்பக்கலிலே பந்தாதிசங்கை பண்ணினவனுக்கு விஸ்வாஸம்பிறக்கும்படி, கணையொன்றாலே - ஓரம்பாலே, எழ்மரமும் - ஏழுமராமரத்தையும், எய்த-எய்தவுபகாரகனாய் எம் - நம்மையும் விஸ்வஸிப்பிக்கும், கார்முகிலை-காளமேகஸ்வபாவனானவனை, புணையென்று-அபாச்ரயமென்று நினைத்து உய்யப்போகிலல்

லால்-உஜ்ஜீவித்துப்போமதொழிய, பொருள்-ப்ரயோஜநம், இல்லை - இல்லை.

புணை-தெப்பமாய், அமிழ்த்தாதபடி நோக்கும் அபாஶ்ரயத்தைச் சொல்லுகிறது. (உ)

ஆறு:—(துணையும்) பரப்ரயோஜநபரரைப்போலே வர்த்தியா நின்று ஸ்வப்ரயோஜநபரராயிருக்கிறவர்களைவிட்டு, கேவலம் பரப்ரயோஜநபரனான தஶரதாத்மஜனையே ரக்ஷகனாகப்பற்றப்பாருங்கோள்; வேறொருவரைப்பற்றி யொருப்ரயோஜநமில்லையென்கிறார். (உ)

ஈடு; அவ;—உபகாரகரைப் போலேயிருந்து, ஸ்வப்ரயோஜநங்களைத் தலைக்கட்டினைக்கு மவிஶ்வஸநீயரானவர்களையொழிய, நிர்ஹேதுகமாக விஶ்வாஸஜநகனாய், ஆபத்ஸகனானவனைப் பற்றுமதன்றி ப்ரயோஜநமில்லையென்கிறார்.

(துணையித்யாதி) துணையாகையாவது - (க) “ [illegible] - ஏகம் துஃகம்ஸுகஞ்சநௌ ” என்று ஸுகதுஃகங்களையொக்க வநுபவிக்கை. சார்வாகையாவது - போக்கடியற்றதசையில், தாங்களைபுகலாகை. பாண்டவர்களுடைய வநவாஸத்தில் தனிமையிலே முகங்காட்டியும், த்ரௌபதியை மீட்டுக்கொண்டு போகிறபோது (உ) “ [illegible] - ஜகாமதாம்பார்க்கவகர்மஶாலாம் ” என்று, அவர்கள் தங்கினபணிக் கொட்டிலிலே சென்று முகங்காட்டிக்கூடக்கிடந்து கதறியுந்துணையாயும், பகதத்தன்விட்ட ஶக்தியை அர்ஜுநனைத்தள்ளித் தன்மார்பிலேயேற்றுப் புகலாயும் போந்தக்ருஷ்ணனைப்போலேயிருக்கை. (ஆதுவார்போல்) தாங்கள் பந்துக்களானபடியே கடக்கநிற்பதுஞ்செய்யாதே, “ ரக்ஷகர் ” என்று ப்ரமிக்கும்படி வர்த்திப்பர்கள். (சுற்றத்தவர்பிறரும்) ஜ்ஞாதிகளும், மற்றுமுள்ளாரும்.

(அணையவித்யாதி) கைக்கெட்டின ஸம்பத்துண்டாகில். “இவன்பக்கலிலே ப்ரயோஜநம் தங்களுக்குண்டாம்” என்று தோற்றியிருக்கிலென்னுதல்; ” தங்கள்பக்கலிவனுக்கொரு ப்ரயோஜநமுண்டு “ என்றுதோற்றியிருக்கிலென்னுதல். (அட்டைகள்போல்சுவைப்பர்) ரக்தஸ்பர்ஶமற வாங்காநிற்கச்செய்தே, இவனுக்கு ஹிதஞ்செய்தனவாயிறே யிவையிருப்பது, அப்படியே, உபகாரங்கொ

(க) ரா-கிஷ்-ருு-கஅ- (உ) பாரத

ண்டாராய்க்கொள்ளாதே, ஹிதஞ்செய்கிறார்களாய்க்கொண்டு உபஜீவிப்பார்கள். "உன்பக்கலிலே தாங்கிடக்கில் வாங்கிக்கொள்வர்கள்; அவற்றையென்மேலே யேறிட்டுவை" என்று அவனுக்கு ஹிதஞ்செய்கிறார்களாயாயிற்று உபஜீவிப்பது.

(கணையித்யாதி) (க) "ஸகேநசேஹஷுணா-ஏகேநமஹேஷுணா" என்று கைக்கெட்டிற்றோரம்பாலே. மஹாராஜர், தனியருமாய், வெறுவியருமாய், தமையன்பகையுமாய், மநுஷ்யஸஞ்சாரமில்லாத தனிக்காட்டிலேயிருக்க, பெருமாளையு மிளையபெருமாளையுந் தூரத்திலேகண்டு, "வாலிவரவிட்டவர்கள்" என்றஞ்சியோடித் திருவடியைவரவிட்டு, அறிவித்தபின்பு, "நாமும்முடைய கார்யஞ் செய்யவல்லோம்" என்று மழுவேந்திக்கொடுத்தும் அவர்காரியஞ் செய்தாரிறே. (எழ்மரமுமெய்த) ஒன்றிரண்டாலே மஹாராஜரதிசங்கை தீர்க்கலாயிருக்க, ஏழுமராமரத்தையுமெய்த. (எங்கார்முகிலே) (எம்) என்று - ஆஶ்ரிதரைச்சொல்லுதல்; ஆத்மநிபஹுவசநமாய், மஹாராஜர்க்குச்செய்தது தமக்குச்செய்ததாக நினைத்திருந்தபடியாலேயாதல். (கார்முகிலே) பரமோதாரனானவனே.

அவன்படியிதுவாகில் நாமவனுக்குச் செய்யவேண்டுவதென்னென்னில் (புணையித்யாதி) இடவேண்டுவதொரு பச்சையில்லை, ஒருக்திமாத்ரமமையும். "என்கார்யமுனக்கேபாரம்" என்றொருவார்த்தையே அவனுக்கு நேரவேண்டுவது, (இல்லைகண்டீர் பொருளே) புறம் பொருவரைப்பற்றினலொரு ப்ரயோஜநமுமில்லை. புறம்பாஶ்ரயிக்கையிலே க்லேசிக்கச் சிலருண்டத்தனை; ப்ரயோஜநரூபமாவதொன்றில்லை. (ந)

# மூன்றாம்பாட்டு.

பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர்* இருள்கொள்துன்பத்தின்மை காணிலென்னேயென்பாருமில்லை * மருள்கொள்செய்கை யசுரர்மங்கவடமதுரைப் பிறந்தாற்கு * அருள்கொளாளாயுய்யலல் லாலில்லைகண்டீரரணே. (ந)

ப:-அநந்தரம், அநிஷ்டநிராஸகனான க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ரமாகிலல்லது வேறுமுதலில்லையென்கிறார்.

---

(க) ரா-யா-க சுகூ-

(இ-ள்.) கை - கையிலே, பொருள் - அர்த்தம், உண்டாய் - உண்டாய், செல்ல - செல்ல, காணில் - கண்டார்களாகில், போற்றியென்று - மங்களாஶாஸநம்பண்ணி, ஏற்று - அவன்கொடுத்ததைக் கையிலே யேற்றுக்கொண்டு, எழுவர் - யதாபிலஷிதம் போகாநிற்பர்; இருள்கொள் - அஜ்ஞாநதமஃப்ரசுரமாய், துன்பத்து - துஃகோத்தரமான, இன்மை - தாரித்ர்யம், காணில் - கண்டார்களாகில், என்னே-ஐயோ!, என்பாரும் - என்று க்ருபைபண்ணுவாரும், இல்லை-இல்லை, ஜகத்துக்கு மருள்கொள் - நெஞ்சுகலங்கும்படியான, செய்கை - ப்ரவ்ருத்திகளையுடைய, அசுரர்-அஸுரர், மங்க-கலங்கும்படியாக வடமதுரை வடமதுரையிலே, பிறந்தாற்கு - அவதரித்த க்ருஷ்ணனுக்கு, அருள் கொள்-க்ருபாபாத்ரமான, ஆளாய் - சேஷபூதராய்க்கொண்டு, உய்யிலல்லால்- உஜ்ஜீவிக்கிலல்லது, அறண் - வேறுபுகல், இல்லை - இல்லை. (௩)

ஆறு:—(பொருள்கை) இப்படி ஸ்வப்ரயோஜநபரராகையாலே ப்ரயோஜநமுள்ளபோதுபற்றி, தாரித்ர்யாபத்தில் விடும் ஸ்வபாவரானவர்களைவிட்டு, ஆபத்ஸகனை க்ருஷ்ணனுடைய க்ருபைக்கு விஷயமாயுய்யிலல்லால் வேறொரு ரக்ஷையில்லை யென்கிறார். (௩)

ஈடு; அவ;—அவனை யொழிந்தார், ப்ரயோஜநமுள்ளபோது பந்துக்களாய்க் கொண்டாடி, ஆபத்துவந்தால் பார்ப்பாருமில்லை; ஆனபின்பு, நிருபாதிகமாக வாபத்ஸகனை க்ருஷ்ணனுடைய க்ருபாபாத்ரமாகையொழிய வேறுரக்ஷகரில்லை யென்கிறார்.

(பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில்) இவன்றான் சிலவற்றை யவிழ்ப்பது முடிவது சேமிப்பதாய்ப் போராநிற்குமிறே. பொருளானது கையிலேயுண்டாய்ப் போரக்காணில் (போற்றியென்று) பாஸம்ருத்த்யேக ப்ரயோஜநரைப்போலே வார்த்தைசொல்லுவர். உனக்கின்னமும் கிழிச்சீரை பெருகவேணுமென்பர்கள் நம்ஸம்ருத்தியே தனக்குப்ரயோஜநமாயிருப்பானொருவனுண்டாவதே!" என்று குளிரப்பார்க்குமே, இவனினி நமக்குக் கண்ணறமாட்டானென்றறிந்தவாறே (ஏற்றெழுவர்) இடலாகாதோ போகவென்று ஏற்றுக்கொண் டெழுந்திருப்பர்கள்.

(இருளித்யாதி) அஜ்ஞாநாவஹமாய், துக்கஹேதுவாயிருக்கிற வெறுமையைக்காணில். (என்னேஎன்பாருமில்லை) ஐயோவென்பாருமில்லை.

பிள்ளைதிருநறையூரரையர், "ஒருவனுக்கிட் டொருவன்வெறுவியனாவது, அவனாலே ஸம்ருத்தனானவன் இவனை'என்'என்னுதல், இவன்க்ருஹத்திலேவந்தொருநாள்கால்கழுவிப்போதல்செய்ய, அவ்வளவாலே 'இன்னானின்னானுக்கு பந்துவாகாதே!' என்றிவ்வளவு கொண்டு ஜீவிக்கலாயிருந்தால் அவ்வளவுஞ்செய்வாரில்லை" என்று பணிப்பர்.

(மருளித்யாதி) பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணாதவன்றுமாஶ்ரிதருடைய வாபத்தைப் போக்குகைக்காக அகர்மவஶ்யனான தான்வந்தவதரித்து உதவுவா னொருவனுண் டென்கிறதுமேலே; சேதநர்நெஞ்சிலே யிருள் குடிபுகுரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய வாஸுரவர்க்கம் முடியும்படி ஒருவரபேக்ஷியாதிருக்கத் தானே வந்தவதரித்து ரக்ஷிக்குமவனுக்கு.

அவனுக்கு நாம்செய்யவேண்டுவதென்னென்னில் (அருள்கொளித்யாதி)க்ருபாபாத்ரமான சேஷபூதராய்க்கொண்டு உஜ்ஜீவிக்கில்லலது; அவன்பண்ணு மருளை விலக்காதொழியுமத்தனையே வேண்டுவது; தன்னருள்கொள்வாரை (க) "உதாராஃ-உதாராஃ" என்னுமவனிறே அவன். இவன்பக்கலிதுக்குமேற்படச்சொல்லலாவதில்லை; அவனுக்கு மிதுக்குமேல்செய்யவேண்டுவதில்லை பூர்ணனாகையாலே; ஸம்பந்தமோ ஸ்வாபாவிகமாயிருந்தது, இவன்புகுரநின்றவம்ஶமுண்டாகில், தன்பேறாக நினைத்திருக்குமவனா யிருந்தான்' இனி விலக்காமையிறே வேண்டுவது, (இல்லைகண்டீரரணே) ரக்ஷகமாவதிதொன்றுமே; அல்லாதவெல்லா மநர்த்தத்தோடே தலைக்கட்டுமித்தனை.

சிறப்ரஜை "குன்றிச்சூடு" என்று நெருப்பிலே கைவைக்குமாபோலே யிருப்பதொன்றிறே புறம்பிவன் ரக்ஷகமாக நினைத்திருக்குமிவை; (உ) " [illegible] ஆதரேண யதாஸ்தௌதி தநவந்தந்தநேச்சயா । ததாசேத் விஶ்வகர்த்தாரம் கோநமுச்யேதபந்தநாத்" ஸ்தோத்ரம் பண்ணிப் போந்த வாஸனையாலே உச்சைஸ்ஸாக ஸ்துதியாநிற்கும்; இப்படிஸ்துதிக்கிறது உதாரனையோவென்னில்; [தநவந்தம்] ஓர்பற்றையுடையனையென்றபடி; அவன் பக்கல்நெகிழ்ச்சியில்லை. ஆகிலவனை ப்ரேரித்தாரரென்னில் [[illegible] - தநேச்சயா] ஸர்வத்தையுமுடையனாப், இவனளவன்றிக்கே

(க) கீதை-எ-கஅ-

(உ)

யிருக்கிற வவன்பக்கலிலே யிவ்வாநுகூல்யத்தைப் பண்ணப்பெறில், பிறர்கீழேயிருந்து ஸ்துதிக்கவேண்டும்படியிவனை வையான். (ங)

## நான்காம்பாட்டு.

அரணமாவரற்றகாலைக் கென்றென்றமைக்கப்பட்டார் * இரணங்கொண்டதேப் பராவரின்றி யிட்டாலுமஃதே* வருணித்தென்னேவடமதுரைப் பிறந்தவன்வண்புகழே* சரணென்றுய்யப் போகிலல்லாலில்லை கண்டீர்சதிரே. (ச)

ப:—அநந்தரம், ஆபத்துக்குதவுவர்க வைத்தவர்களும் அவ்வவஸ்த்தையிலுதவார்கள்; அபேக்ஷாநிரபேக்ஷமாக வவதரித்து உபகரிக்கு மவன் குணங்களே ரக்ஷகமாமதொழிய, வேறுகோளில்லை யென்கிறார்.

(இ-ள்.) அற்றகாலைக்கு-கைம்முதலற்றகாலத்துக்கு, அரணமாவர்-புகலிடமாவர், என்றென்று-என்று பலகாலுமநுஸந்தித்து, அமைக்கப்பட்டார் - அர்த்தாதிகளாலே வசீகரிக்கப்பட்டார், இரணம் - கடவது, கொண்ட- கொண்டாரோபாதி, தேப்பராவர் - துச்சராய்ப் போவர்கள், இன்றியிட்டாலும் - ஈாமாக்காதொழியிலும், அஃதே -அவருடையவுதவாமையேவசித்தம், வருணித்து-க்ருதக்நப்ரகாரம்சொல்லி, என்னே - என்னப்ரயோஜநமுண்டு, வடமதுரை- வடமதுரையிலே, பிறந்தவன் - பிறந்தவனுடைய, வண்- நிர்ஹேதுகோபகாரகமான, புகழே-சீலஸௌலப்யாதிகுணங்களையே, சரண் -ரக்ஷகம், என்று-என்றுநினைத்து, உய்ய பிழைக்க. போகிலல்லால் - போமதொழிய, வேறு, சதிர் - சதிர்பாடு, இல்லை -இல்லை.

சதிராவது -அநாயாஸேந பலம்பெறலாம் ப்ரவ்ருத்தி, இன்றியிட்டாலும் - அவர்கள் நசித்தாலு மென்றுமாம், தேப்பர்- தப்ராராய், துச்சரென்றபடி. (ச)

ஆறு:— (அரணமாவர்) த்ரவ்யதாநாதிகளாலே யாபத்துக்கு பந்துக்களை ஸம்பாதித்துவைத்தால், அவர்களுமாபத்துவந்தால் க்ருதக்நரா யநுபக்ருதரைப்போலேயுதவார்; ஆதலால், அவர்களைவிட்டு உபகாராபேக்ஷனன்றிலேவடமதுரையிலேவந்துபிறந்து ஆபந்நரை ரக்ஷிக்கும் ஸ்வபாவனானவனுடையகல்யாணகுணங்களை ஶரணமாகப் பற்றுங்கோள், அதுவேசதிரென்கிறார்.

ஈடு; அவ:—சிலரை ஆபத்ஸகரென்று அர்த்தாதிகளாலேகெடு நாளாச்ரயித்தால், ஆபத்துவந்தவாறே கண்ணற்ற உபேக்ஷிப்பர்கள்; நிர்ஹேதுகமாக வந்தவதரித்து ஆபத்ஸகனானவனே யாச்ரயணீய னென்கிறார்.

(அற்றகாலைக்கு-அரணமாவர்-என்றழைக்கப்பட்டார்) கைம்முதலற்றகாலைக்கு ரக்ஷகனுவாரொருவன் வேணுமென்று பலகாலு மநுஸந்தித்து, தனக்கு இயற்றியுள்ளகாலத்திலேபச்சையிட்டாச்ர யித்து, தனக்காபாச்ரயமாகச் சமைத்துவைத்தவர்கள்.

இப்படி அர்த்தாதிகளாலே வசீகரிக்கப்பட்டவர்கள் ஆபத்துக் குதவும்படி யென்னென்னில் (இரணங்கோண்டதேப்பராவர்) இவ னிட்டபச்சையை யிவனென்று செய்தானுகவினைத்திருக்கையன்றிக் கே, தங்களுக்கு ப்ராப்தமானத்தை வாங்கினாராய், இவனுக்கியற்றி யின்றிக்கே பச்சையிடாதநாளைக்கும் "நமக்கிட்டிலன்" என்றுவெ றுத்து, இப்படி கொடுத்தது வாங்கினரோபாதி புல்லியராம்படியை யுடையராவர். தேப்பர்-தப்பர். சப்பரென்றபடி. (இன்றியிட்டாலு மஃதே) பச்சையிட்டாச்ரயியாவிடிலு மாபத்துவந்தால் கைவிடுவா ரைக் கிடைக்கும், ஆபத்துவந்தால் கைவிடுவார்க்குப் பச்சையிட் டாச்ரயிக்க வேண்டாவே; அன்றிக்கே, இப்படியே இப்பச்சையிட் டவன் "நமக்கு ரக்ஷகன்" என்றாச்ரயியாநிற்கச்செய்தே, நடுவே அவன்முடிவது, அப்போதும் கீழ்ச்சொன்னதுவேபலிதமாமித்தனை

(வருணித்தேன்னே) உபகரித்தார் திறத்திலே யபகாரம் பண் ணுவார்படியை யநுஸந்தித்துவெறுத்து "வருணித்தேன்னே" என் கிறார். இளையபெருமாள், கைகேயியுடைய படிகளை யநுஸந்தித்து, (க) "க்ஷுத்ரகர்மாஸஹாவஸ்ரீ க்ரூராயநரஸ்தாஜஸ்ரீ திநீ-ஆத்மகா மாஸதாசண்டீ க்ரோதநா ப்ராஜ்ஞமாநிநீ" என்றாப்போலே சிலவற் றைச் சொல்ல; வாராய்பிள்ளாய், நீதானிவையெல்லாஞ் சொல்லு கிறது நடுவிலாய்ச்சியையோ, (உ)"நதேம்பாமத்யமாதாத கர்ஹிதவ்யாகதஞ்சந" ஒருபடியாலும் நீயவளை யிவ்வார்த்தை சொல்லக்கடவையல்லை [தா மேவ] வேணுமாகில் கைகண்டமருந்தைச் செய்ப்பாராய். [இக்ஷ்வாகு நாதஸ்ய] - இக்ஷ்வாகு நாதஸ்யபாதஸ்ய] ஐயரோபொசட்டு

(க) ரா-அயோ-எக-கo (உ) ரா-ஆர-கசு-ந-எ-

முடிந்துபோனார்; நாம்பொகட்டுப் போந்தராஜ்யத்தை யிக்குடியில் மர்யாதை குலையாதபடியாக நோக்கிக்கொண்டு கிடந்தபிள்ளை-பரதனன்றோ விக்குடிக்குநாதன். [ஹா தஸ்ய கபாலம்-ராம-பரதஸ்ய கதாந்குரு] நாசீர்வரும்படியானவார்த்தை சொல்லப்பாராய்.

ஆக, உபகரித்தார் விஷயத்திலே அபகாரமாக நினைத்திருப்பார்படி யநுஸந்தித்து, இவ்வர்த்தத்தைக்கடந்து வர்ணிக்கிறவித்தால் ப்ரயோஜநமென், பச்சையிட்டடையாதவன்று யபேக்ஷித காலத்திலே வந்துதவுவா னொருவனுண்டு, அவனையாச்ரயித்துப் பிழைத்துப்போகப்பாருங்கோள் (வடமதுரையித்யாதி) ஒருவரபேக்ஷியாதேயிருக்கச்செய்தே இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத்தானேவந்து ஸ்ரீமதுரையிலேயவதரித்தவனுடைய நிர்ஹேதுகோபகாரகமான ஸௌசீல்ய ஸௌலப்யாதி கல்யாணகுணங்களை நமக்கு ரக்ஷகமென்று உஜ்ஜீவித்துப் போகையொழிய. (இல்லைகண்டீர்சதிரே) நெற்றிபெருத்து, பலமொன்று மின்றிக்கே யிருக்குமென்னுமது - இளிப்பிறே. நெற்றியல்பமாய், பலங்கனக்கப்பெறுமதிறே - சதிராவது. * நமோவென்னலிறே நெற்றி; * சமன்கொள் வீடிறே பலம். (௪)

## ஐந்தாம்பாட்டு.

சதிரமென்று தம்மைத்தாமே சம்மதித்தின்மொழியார் * மதுரபோகந் துற்றவரே வைகிமற்றேன்றுறுவர் * அதிர்கோள் செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு * எதிர்கோளாளா யுய்யிலல்லாலில்லைகண்டீரின்பமே. (௫)

ப:—அநந்தரம் தங்களுக்கு போக்யதயா ஸ்வீக்ருதைகளான ஸ்த்ரீகளுமுதவாதபடிக்லேசிப்பர்; க்லேசநிவர்த்தகனான க்ருஷ்ணனை அபிகமநம்பண்ணி யாச்ரயிக்குமதொழிய வேறுஸுகமில்லையென்கிறார்.

(இ-ள்) சதிரம் - அபிமதவிஷயத்தைவசீகரிக்கவல்ல சதிரையுடையோம், என்று - என்று, தம்மை-தங்களை, தாமே - தாங்களே, சம்மதித்து - ஸம்வதித்துக்கொண்டு, இன் - ப்ரமுகஸரஸமான, மொழியார் - வார்த்தையையுடையரான ஸ்த்ரீகளுடைய, மதுரம்-இனிதான, போகம் போகத்தை, துற்றவரே-பூர்ணமாகவநுபவித்தவர்களே, வைகி -கா

லாந்தரத்திலே. அவர்கள், மற்றொன்று-அவமாநாதிகார்யமான விபரீத பலத்தை, உறுவர் - பெறுவர், லோகத்துக்கு, அதிர்கொள் - மிகவுமதிர்த்தியை விளைப்பிக்கையே, செய்கை - ஸ்வபாவமாகவுடைய, அசுரர் - அஸுரர்கள், மங்க - நசிக்கும்படி, வடமதுரை-வடமதுரையிலே, பிறந்தாற்கு - அவதீர்ணனான க்ருஷ்ணனுக்கு, எதிர்கொள் - அபிகமநகர்த்தாக்களான, ஆளாய் - சேஷபூதராய்க்கொண்டு, உய்யிலல்லால் உஜ்ஜீவிக்கிலல்லது, வேறு, இன்பம் - நிரதிசயஸுகம், இல்லை - இல்லை.

ஆறு:—(சதிரமென்று) சதிராகவாழா நின்றோமென்று தங்களைத்தாங்களேயிசைந்து, இனியபேச்சுக்களையுடைய ஸ்த்ரீகளுடைய மதுரமான போகங்களை புஜித்தவர்களே, புஜிக்கைக்கிடானயோக்யதைகுன்றினவாறே அவர்களாலே மிகவும்பரிபவிக்கப்படுவர்; லோகமெல்லாமதிரும்படியான ப்ரவ்ருத்திகளையுடைய அஸுரர் மங்கும்படியாக வடமதுரைப் பிறந்தாற்கு ஸ்வாகதாதிகளைப்பண்ணியெதிர்கொள்ளும்படியாரா யுப்யிலல்லால் வேறு ஸுகமில்லையென்கிறார். (ரு)

ஈடு: அவ:—தங்களைப் பெறுவிடில் தரிக்கமாட்டாதபடி ஸங்க்தைகளான ஸ்த்ரீகளாலே யாபத்துவந்தாலிகழப்படுவர்; ஆனபின்பு ஏகப்ரகாரமாக ஸங்க்தனானவனை யாச்ரயிக்குமதொழிய வேறுஸுகமுமில்லை யென்கிறார்.

(சதிரமென்று) சதிராகவாழாநின்றோமென்று. "நாம்சதிரர், நாம்சதிரர்" என்றாயிற்று இருந்ததேகுடியாகத் தந்தாமைநினைத்திருப்பது. (தம்மைத்தாமேசம்மதித்து) தங்களைத்தாங்களேசம்மதித்து. தாங்களேயிசைந்து. அல்பமியற்றியையுடையனாயிருக்குமவன், "அங்கேநம்மை 'சதிரன்' என்று நினைப்பிட்டுக்கொடுவர, நாமதிலே மேலெழுத்திட்டுத்தர" என்னும்; இவ்வஸதஸ்யப்ரவ்ருத்திக்கு வேறுஸஹகரிப்பாரைக் கிடையாதே; தானேயிதேயுள்ளது. (இன்மொழியார்) இனிய பேச்சையுடையராயிருந்துள்ளவர்களுடைய. அகவாய் மயிர்க்கத்திபாயிருக்கச் செய்தேயும், ப்ரணயஸரஸமானபேச்சாலே வஸீகரிக்கவல்லவர்கள்.

(மதுரபோகந்துற்றவரே) மதுரமானபோகத்தை, அவர்களுடனே நெருங்கபுஜித்தவர்களே. (வைகிமற்றொன்றுறுவர்) போகத்துக்குப்பாங்கான யௌவநமும், அதுக்குக்கைம்முதலான த்ரவ்ய

மும்போமே; பின்னையுமாசைமாறாதே; அவ்வோவிடங்களிலே பேயிருக்கும் வருவார்க்கும் விரோதியாய் முற்பட, மணிச்சிலே நாலிரண்டுபண்ணை "போகலாகாதோ" என்பார்களே; "போகிறோம் போகிறோம்" என்றிருக்குமேபோகாதே; பின்னை வெள்ளாட்டினை விட்டுப் பரிபவிப்பார்கள்; அதுக்கும் போகானே; பின்னை யானையிட்டெழுப்பிப்பார்ப்பார்கள்; அதுக்குமெழுந்திரான்; பின்னைக்காலைப்பற்றியிழுப்பர்கள், இவன் தூணைக்கட்டிக்கொள்ளும்; இப்படியால் அவர்களாலே பரிபூதராவர்கள். விபாகத்தில் பிறக்கும் பரிபவத்தை யநுஸந்தித்து வெறுத்து, அது தன்வாயாலருளிச் செய்யமாட்டாமையாலே (மற்றொன்று) என்கிறார். அங்ஙனன்றிக்கே, விபாகத்தில் நன்மையோடே தலைக்கட்டும் விஷயத்தைப்பற்றி யுஜ்ஜீவித்துப் போகப்பாருங்கோளென்கிறார்.

(அதிரித்யாதி) சேதநருடைய நெஞ்சுகளிருப்படியான ப்ரவ்ருத்திகளையுடையவஸுரவர்க்கம் முடியும்படி வடமதுரையிலேவந்து திருவவதரித்தவற்கு. (எதிர்கோளாளாயுய்யலல்லால்) ஆபிமுக்யம் பண்ணும்படியாரா யுஜ்ஜீவிக்குமதொழிய. அவனுக்கு நாம்செய்ய வேண்டுவதிது-அவன்தானே மேல்விழாநின்றால், விழுகராகாதொழியுமத்தனையே வேண்டுவது.

(௧) "தத்யாம் த்ருணாஉபாங்கஹ்ருஷீகேஸ-அந்யத்பூர்ணாதபாம்கும்பாத்" பாண்டவபக்ஷபாதியாயிருக்கிற க்ருஷ்ணன் வாராநின்றான், அவனுக்கு நாட்டையுங்கொடுத்து, பொன்னையுங்கொடுத்து, நமக்காக்கிக்கொள்ளுகிறோமென்றாப்போலே, த்ருதராஷ்ட்ரன் சிலசொல்ல; அதுக்குக்கருத்து - இவற்றாலே அவனைப் படையறுத்துக் கொள்ளுகிறேனென்றாயிற்று. அவன்றான் நெஞ்சாலே நினைப்பதொன்றாய், வாயாலே வ்யவஹரிப்பதொன்றாயிறே யிருப்பது; இத்தையறிந்த ஸஞ்ஜயன், வருகிறவன் அங்ஙனொத்தவனல்லன்காண், அவனுக்குவேண்டுவது இதில்லையென்கிறான்; தான் குடிக்குந்தண்ணீரைக் குளிரவைக்கக்கடவனே, அத்தை அவன் வருகிறவழியிலே வாசலிலேவைக்கவமையும். தன் க்ருஹத்திலே அதிதி வந்து புகுந்தால் கால்கழுவுவதாக ஸாமாந்ய ஶாஸ்த்ரம் விதித்தது; அதுக்கு மேற்பட அவனுனவாசிக்கு விசேஷித்துச் செய்யவேண்டுவதில்லை [ஸுந்த்ராஹாவநே ஜநாஸ - அந்யத்பாதாவநேஜநாத்] அந்தக்கு

(௧) பார-உத்யோ-அ௯-

டத்தில் நீரையிட்டு அவன் திருவடிகளை விளக்க வமையும், மற்று வேண்டா. [ஸ்நாத்வா ஸ்ரமலவம் ஸ்ப்ருஷ்டாஸ் - அந்யத்ருமலஸம்ப்ராப்நாத்] நெடுந்தூரம் வந்தவனை (௧) "நடந்தகால்கள் நொந்தவோ" என்ன ப்ராப்தமிறே; "நவேஷூ தீ-நமேசச்ச" உண்டவனுக்கு உண்ணப் போகாதிறே; அப்படியே இவனுடைய உத்யோகத்திலே அவனுக்கு வயிறுநிறையும்; பின்பவன் செய்யுமவையடைய மிகையாயிருக்கும்.

(இல்லைகண்டீரின்பமே) து:க்கங்களிலே சிலவற்றை ஸுகமென்று ப்ரமிக்கிறவித்தனைபோக்கி, இதொழிய ஸுகரூபமாயிருப்பதொன்றில்லை. உயிர்க்கழுவிலே யிருக்கிறவனுக்கு பிபாஸையும் வர்த்தித்து, தண்ணீருங்குடித்து, தாஹமும் ஶமித்தால் பிறக்கும் ஸுகம்போலேயிருப்பதொன்றிறே ஸம்ஸாரிகளுக்கு போகத்தால் பிறக்கும் ஸுகமாகிறது; ஆடுகிறபாம்பின் நிழலிலே யொதுங்கி, "அதள்ளிக்கொள்ளும்" என்றறியாதே "வெய்யிலைத்தப்பப்பெற்றோம்" என்று ஹ்ருஷ்டராயிருப்பாரைப்போலேயிறே விஷயாநுபவங்களாலே களித்திருக்கிறவிருப்பிவனுக்கு. (௫)

---

# ஆறும்பாட்டு.

இல்லைகண்டீரின்பமந்தோ வுள்ளது நினையாதே * தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார்* மல்லைமூதூர்வடமதுரைப் பிறந்தவன்வண்புகழே* சொல்லியுய்யப் போகிலல்லால் மற்றொன்றில்லைசுருக்கே. (௬)

ப:—அநந்தரம், புருஷார்த்த பரிஜ்ஞாநமில்லாமல் முடிந்துபோகாதே க்ருஷ்ணனுடைய வாநந்தஜநகமான குணகீர்த்தநத்தைப்பண்ணிலல்லது வேறுஉஜ்ஜீவநார்த்தமாயிருப்பதொரு ஸங்க்ரஹமில்லை யென்கிறார்.

(இ-ள்.) (௨) "ஸவத்ரோட்ட:கவஞ்யம் ஜகத் - ஸர்வம் து:கமயம் ஜகத்" என்கிற ஜகத்திலே, இன்பம் - ஸுகரூபமாயிருப்பதொன்று, இல்லை கண்டீர்-இல்லைகிடீர், அந்தோ! - ஐயோ!, உள்ளது - ஸர்வகாலவர்த்தியான வாநந்தியாயுள்ள பகவத்ஸ்வரூபத்தை, நினையாதே - அநுஸந்தி

(௧) தி-ச-வி-௯௧-

(௨)

யாதே, தொல்லையார்கள் - பழையகாலத்தி லுள்ளார், எத்தனைவர் - எத்தனைபேர், தோன்றிக்கழிந்தொழிந்தார் - ஜந்மமரணங்களே யாத்ரையாய்ப்போனார், ஆனபின்பு; மல்லை-நிரதிசயஸம்பத்ஸம்ருத்தமாய், மூது-வாமநாவதாரந்தொடங்கி தத்ஸம்பந்தம் மாறாமல் பழையதான, ஊர்-ஊராயிராநிற்கிற, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தவன் - பிறந்தவனுடைய, வண்-ஆஹ்லாதஜநகமான, புகழ்-குணங்களை, சொல்லி-கீர்த்தித்து, உய்யப்போகிலல்லால் - உஜ்ஜீவித்துப்போமதொழிய, மற்று-வேறு, சுருக்கு-ஸங்க்ரஹேண சொல்லலாவது, ஒன்று ஒன்றும், இல்லை - இல்லை. (க)

ஆறு:--(இல்லைகண்டீர்) "எம்பெருமானல்லது வேறுபுருஷார்த்தமில்லை" என்னு மிவ்வுண்மையை யுணராதே யெத்தனைவர் இங்ஙனேமுடிந்துபோனார்; நீங்களு மிங்ஙனே நசியாதே, ஆஸ்ரிதர்க்காத்மதாநம் பண்ணுகைக்காகவந்து பிறந்தருளினவனுடைய வௌதார்யத்தையே சொல்லியுப்புங்கோள்; வேறுய்ய விரகில்லை, இது ஸங்க்ஷேபேண சொன்னோமென்கிறார். (க)

ஈடு; அவ;—நிரதிசயபுருஷார்த்தத்தை யுணராதே முன்புள்ளாரநேகர் முடிந்துபோனார்கள்; அப்படியே நீங்களும் நசியாதே, ஆஸ்ரிதர்க்காக வவதரித்து ரக்ஷிக்குமவனையே யாஸ்ரயிக்குமத்தனையல்லது, ஆத்மாவுக்கு ஹிதமில்லையென்கிறார்.

(இல்லைகண்டீரின்பம்) (க)"ஸவ-ம்ஒடி-ஃவயெஂஜமக-ஸர்வம் துஃகமயஂஜகத்" எனகிற ஸம்ஸாரத்தில், கெடுவிகாள், ஸுகலேஸமுமில்லைகிடிகோள். (அந்தோ!) போக்தாக்களான வுங்களுக்கு நானுபதேசிக்கவேண்டுவதே!. ப்ரத்யக்ஷமு மகிஞ்சித்கரமாயிருக்க, உபதேசிக்கிறீரே. (உள்ளதுநினையாதே) உண்டான புருஷார்த்தத்தை நினையாதே. "ஸுகரூபமுமாய் நித்யமுமா யிருப்பது பகவத்விஷயம்" என்றநுஸந்தியாதே, உண்டான வில்லாமையை நினையாதேயென்று கீழேகூட்டவுமாம்.

(தொல்லையித்யாதி) பழையராயிருப்பா ரெத்தனைபேர், உத்பத்தியானது விநாஸத்தோடேகூட்ட, நடுவுள்ளநாள் புருஷார்த்தத்துக்குடலன்றிக்கேகழிந்துபோனார். சிலபூண்டுகளுண்டாய், தோன்றின விடந்தன்னிலே நின்று தீய்ந்துபோவன; அப்படியே.

(மல்லையித்யாதி) ஸம்ருத்தியையுடைத்தாய், அவனுக்கென்று மொக்கக் கலவிருக்கையாய்ப்போருகிற ஸித்தாஸ்ரமமாய், ஸ்ரீவாமந

னெழுந்தருளியிருந்தும், ஸ்ரீமதீருக்கராழ்வான் படைவீடுசெய்தும், க்ருஷ்ணன் வந்தவதரித்தும், இப்படி பகவத் ஸம்பந்தம் மாறாதே போருகிறதேசமாயிற்று. (மூதூர்) பழைபதாய் வருகிறவூர்; அங்கே வந்தவதரித்தவனுடைய வுதாரமான புகழையே வாயாலே சொல் லியுஜ்ஜீவித்துப் போமதொழிய. ( மற்றொன்றில்லைசுருக்கே ) புறம் பேநின்று பரக்கக்காடு கைக்கலாவதுண் டித்தனைபோக்கி, சுருங்க வொருபாசுரத்தாலே சொல்லலாவதில்லை. (கூ)

## ஏழாம்பாட்டு.

மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க் கும்* சிற்றவேண்டாசிந்திப்பே யமையுங்கண்டீர்களந்தோ* குற்ற மன்றெங்கள் பெற்றத்தாயன் வடமதுரைப் பிறந்தான் * குற்றமில் சீர்கற்றுவைகல்வாழ்தல் கண்டீர்குணமே. (எ)

ப:—அநந்தரம், சிந்தாமாத்ரஸாலபஜன க்ருஷ்ணகுணாநுஸந்தா நம்பண்ணி, காலதத்த்வமுள்ளதனையும் வாழ்கை ப்ராப்தமென்கிறார்.

(இ - ள்.) மற்று - வேறு, ஒன்று - வக்தவ்யமாயிருப்பதொன்று, இல்லை இல்லை, சுருங்க - ஸங்க்ரஹேண, சொன்னோம் - உங்களுக்குச் சொன்னோம், மா - பெரிய நிலத்து-பூமியிலே, எவ்வுயிர்க்கும்-எல்லா வாத்மாக்களுககும், சிற்றவேண்டா -பரக்கவாயாஸப்படவேண்டா, சிந் திப்பே-சிந்தாமாத்ரமே, அமையும்-அமையும், கண்டீர்கள் (க) "ஆயா ஸஸ்ஸ்மரணே கொஸ்ய"-ஆயாஸஸ்ஸ்மரணேகோஸ்ய " என்று ப்ரஸித் தமன்றோ; அந்தோ! - ஐயோ!, ஸாகரமார்க்கம் பலவ்யாப்தமல்லவாகி லும், குற்றம்-அநர்த்தகரம், அன்று-அல்லவே, இப்படி ஸ்மர்த்தவ்யமே தென்னில்; எங்கள் - ஆஸ்ரிதபவ்யனாய் பெற்றம் - அஜ்ஞமானபசுக்க ளுக்கு. தாயன்-ரக்ஷகமாய்க்கொண்டு, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தான் - அவதீர்ணனானவனுடைய, குற்றமில் - அபேக்ஷாநிரபேக்ஷ மாக ஆஸ்ரித ஸம்ரக்ஷணைக ப்ரயோஜநமான, சீர் - குணங்களை, கற்று - உபதேசமுகத்தாலே யிப்படி வ்யுக்பத்திபண்ணி, வைகல் - (உ " ஸ வாநுகாரோ ஸஹே ஸர்வாங்காமாந்ஸமஸ்நுதே " என்கிற படியே யாவதாத்மபாவி குணாநுபவம்பண்ணி, வாழ்தல்கண்டீர் - வாழ் கைகிடிகோள். உங்களுக்கு குணம் - ஸ்வபாவமாகையும், ப்ராப்தமும்.

(க) வி பு-க-கள எஅ- (உ) தை-ஆந உ-கஙு-

ஆறு:—(மற்றொன்றில்லை) இச்சுருக்கை மிகப்பரவாமே வ்யக்தமாக்குகிறார் வேறுவக்தவ்யமில்லாதபடி ஸங்க்ஷேபேணத்தோஜ்ஜீவனோபாயத்தை யெல்லார்க்குஞ்சொன்னோம். இதுக்கதிகாரிநியமமும், காலநியமமும், தேசநியமமுமில்லை "இவ்வுபாயந்தான் துஷ்கரம்" என்று குறைவுபடவும்வேண்டா, ஸ்ம்ருதிமாத்ரமேயமையும். இது நிஷ்பலமாகிலோவென்னில்; இது செய்தால் முன்னமநர்த்தமில்லையிறே. ஆதலால், ஆஸ்ரிதர்க்காக வடமதுரையிலே பிறந்தானை பசுமேய்க்கு மாயனுடைய ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களை யநுஸந்தியுங்கோள், இதுதானே அமையுமென்னும்படி போக்யமாய், யுக்தமுமாயிருக்குமென்கிறார். (எ)

ஈடு; அவ:—பகவத்ஸமாஸ்ரயணத்தினுடையவெளிமையையு மினிமையையு மருளிச்செய்கிறார்.

(மற்றொன்றில்லை) இத்தோடொக்க வேறெண்ணலாவதில்லையென்னுதல், இப்போதித்தைச்சொல்லி வேறொருபோது வேறொன்றைச்சொல்லுகிறோனென்றிருக்கவேண்டா வென்னுதல். (சுருங்கச் சொன்னோம்) இதுதன்னைப்பரப்பாச்சொன்னோம். ப்ரதிபத்திக்கவிஷயமாம்படி சொல்லுகையன்றிக்கே, ஸங்க்ரஹமாகச்சொன்னோம்; (மாநிலத்து) இதுக்கதிகாரிகள் ஸம்ஸாரத்திலே. இவ்வர்த்தத்துக்கண்ணியார் பரமபதத்திலுள்ளாராகிலும், உபதேசத்துக்கதிகாரிகள் ஸம்ஸாரத்திலுள்ளாரென்கை. (எவ்வுயிர்க்கும்) இது அதிக்ருதாதிகாரமன்று; ஸர்வாதிகாரம்.

(சிற்றவேண்டா) ஆயாஸிக்கவேண்டா. சிற்றுதல்- சிதறுதலாய், பரக்கவேண்டாவென்கை. ஒருவ்யாபாரம்வேண்டாவென்றபடி. (சிந்திப்பேயமையுங்கண்டீர்கள்) உக்திநிரபேக்ஷமான சிந்தாமாத்ரமேயமையுங்கிடிகோள். (அந்தோ) "நற்சார்க்குக்கிட்டினதனையும் கைவிடுகைக்குடலாவதே!" என்று - அந்தோ! என்கிறார்.

(குற்றமன்று) கீழ்ச்சொன்னநன்மைகளொன்றுமில்லையேயாகிலும், இதுசொன்னவுமுங்கள் தலையில் முந்நறமுன்னமிடிவிழாது. (க) - [illegible] [யோவஸ்தஸ்ஸஉச்யதாம்ப்ராதர்த்தேவேதிக்ருஷ்ணேதி] இவ்வுபாயத்துக்குப் பலமில்லையாகிலும், இதுதானே ப்ரயோஜநம்போரு

பிறப்பதற்கு முன்னே பெற்றத்தாயன்போலேகாணும். வந்தவதரிப்பதாக ஸங்கல்பித்ததில் புரையற்றிருந்தபடி. ஆஸ்ரிதர்க்காக வடமதுரைப்பிறந்தானை பசுமேய்க்குமாயனென்னுதல். பெற்றத்தாயன் - பசுமேய்க்குமிடையன்.

(குற்றமில்சீர்கற்று) ஹேயப்ரத்யநீகமான கல்யாணகுணங்களையப்யஸித்தென்னுதல்; பிறப்பிலும் சேஷ்டிதங்களிலும் புரையற்றிருக்குமென்னுதல் (க) "அஜாயமாநோ பஹுதா விஜாயதே"(வைகல்வாழ்தல்கண்டீர்குணமே) கற்பதொருமகாலாய், பின்பு வாழ்ச்சி நித்யமாயிருக்குமாயிற்று; இதொன்றுமே குணம்; இதொழிந்ததடையவப்ராப்தம். (எ)

---

## எட்டாம்பாட்டு.

வாழ்தல்கண்டீர் குணமிதந்தோ மாயவனடிபரவி * போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு * வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே* வீழ்துணையாப் போமிதனில்யாதுமில்லைமிக்கதே. (அ)

ப:— அநந்தரம், அநந்யப்ரயோஜநரான அதிகாரிகளுக்கு உஜ்ஜீவநஹேதுவான க்ருஷ்ணனுடைய குணங்களை யபிநிவேசித் தநுபவிக்குமதொழிய, இதில்விஞ்சினதொருவாசியில்லையென்கிறார்..

(இ-ள்.) வாழ்தல் - வாழுகிற, இது - இதுவன்றோ, குணம் - எல்லார்க்கும்குணமாவது, கண்டீர்- இதுலோகப்ரஸித்தமன்றோ, அந்தோ- ஐயோ! வாழும்ப்ரகாரமறிகிறதில்லையே, எதென்னில்; மாயவன் - ஆஸ்சர்யகுணசேஷ்டிதனான ஸர்வேஸ்வரனுடைய, அடி - திருவடிகளை, பரவி - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்தோத்ரம்பண்ணி, போழ்துபோக - காலக்ஷேபம்பண்ணவேணுமென்று, உள்ளகிற்கும் - நினைக்கவல்லவர்களாய் புன்மை-ப்ரயோஜநாந்தரஸம்பந்தமாகிறபுல்லிமை,இலாதவர்க்கு- இல்லாதவர்களுக்கு *வாழ் ஸ்வரூபாநுரூபமானவாழ்ச்சிக்கு, துணையா- உபாயபூதனுகைக்காக, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தவன் - வந்துபிறந்த க்ருஷ்ணனுடைய, வண்-ஆஸ்ரிதாநுபாவ்யமான, புகழே- குணங்களையே, வீழ் - அபிநிவேஸவிஷயமான, துணையா-போகஸஹா

(க) வி-பு ஙி கங-கஙு-

யமாய்க்கொண்டு, போம் - நடக்கிற, இதினில் - இதில், மிக்கது - விஞ்சினது யாதும் - ஏதேனுமொருவாழ்வும், இல்லை - இல்லை.

வீழ்துணை - விரும்பிய துணையென்றுமாம். (அ)

ஆறு:— (வாழ்தல்) தன்னுடைய கல்யாணகுணாநுஸந்தானை காத்மதாரணரான சீரியர்க்கு வாழ்துணையாக வடமதுரையிலேவந்து பிறந்தருளின ஸர்வேஶ்வரனுடைய கல்யாணகுணாநுஸந்தானத்துக்குமேற்பட்ட புருஷார்த்தோபாயமில்லையென்கிறார். (அ)

ஈடு; அவ:—அவதாரத்துக்கு நிதானத்தைச்சொல்லி, அவனையே ரக்ஷகனாகப் பற்றுமித்தொழிய, வேறுவிலக்ஷணமாயிருப்பதோர் உபாஶ்ரயமில்லையென்கிறார்.

(வாழ்தல்கண்டீர்குணமிது) அவன்குணங்களை யநுஸந்தித்து வாழுமித்துவே கிடீர்கொள்யுக்தம். (அந்தோ) கரும்புதின்னக் கூலிகொடுப்பாரைப்போலே, இவர்களை யபேக்ஷிக்கவேண்டுவதே யெனக்கு. வாழ்ச்சியுங்களதாயிருக்க, இரந்துதிரிவேன் நானுவதே!. (மாயவனித்யாதி) ஸௌந்தர்யசீலாதிகளா லாஶ்சர்யபூதனா யிருந்துள்ள வஸ்துவினுடைய குணஜிதராய், ப்ரீதியாலே அவன்திருவடிகளை யக்ரமமாகவேத்தி, அத்தாலேகாலக்ஷேபம்பண்ணுவதாக வத்யவஸிக்கவல்லரான நன்மையையுடையவர்கள்-சீரியவர்கள், அநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு. (க) * தெரித்தெழுதிவாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போதுபோக்குமவர்கள். "இத்தமாயவனடிபரவுகை - சூதுசதுரங்கத்தோபாதி காலக்ஷேபமாக்குகிற புன்மையில்லாதவர்கள்" என்று பட்டர்.

(வாழ்துணையித்யாதி) புன்மையுடையவர்களு மகப்படக்கழித்து அதுவேபோதுபோக்காக நின்றபின்பு, முதலிலே அதுகுடிபுகுராதவனுக்கு ஆஶ்ரிதஸம்ஶ்லேஷமொழிய வேறுப்ரயோஜநமில்லையிறே. அவர்கள் தன்குணங்களையநுபவித்து வாழ்கைக்குத்துணையாக வடமதுரையிலேவந் தவதரித்தவனுடைய; அவதாரப்ரயோஜநம் (உ) "பரித்ராணாயஸாது-நாம் - பரித்ராணாயஸாதூநாம்" என்றிறேயிருப்பது. (வண்புகழித்யாதி) அவனுடைய கல்யாணகுணங்களையே யாசைப்படுந்துணையாகப் பற்றுமிதுபோக்கி (வீழ்துணை) ஆசைப்படுந்துணை (ந) "தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர்" என்னக்

(க) ௪ திருவ கூங- (உ) கீ- (ந) குறள்-

கடவதிறே ஆஶ்ரயிக்கைக்கு. (இதனில்) இதிற்காட்டில். (யாதுமில்லைமிக்கதே) இதனில் மேலாயிருப்ப தொன்றுண்டாய், "இதில்லன்று" என்னவேணுமே; இதுக்கு மேலாயிருப்பதொன்றுமில்லை.

## ஒன்பதாம்பாட்டு.

யாதுமில்லைமிக்கதனி லென்றென்றதுகருதி * காதுசெய்வான் கூதைசெய்துகடை முறைவாழ்க்கையும்போம்* மாதுகிலின்கொடிக்கொள்மாடவடமதுரைப்பிறந்த* தாதுசேர்தோள்கண்ணனல்லா லில்லைகண்டீர்சரணே. (கூ)

ப:—அநந்தரம் ஐஶ்வர்யத்தை ப்ரயோஜநமாக நினைத்தால் முன், புள்ள போகத்தையு மிழக்குமித்தனை, நிரதிஶய போக்யனான க்ருஷ்ணனையொழிய ப்ராப்யமில்லை யென்கிறார்.

(இ-ள்.) அதனில் - அதிற்காட்டில், மிக்கு - மிஞ்சின ப்ரயோஜநம் - யாதும் - ஏதேனுமொன்றும், இல்லை - இல்லை, என்றென்று - என்று பலகாலும், அது - அந்தவைஶ்வர்ய கைவல்யரூபமான ப்ரயோஜநாந்தரத்தை, கருதி - அநுஸந்தித்து, காது - காது, செய்வான் - செய்யப்புக்கு கூதைசெய்து - ஆஶ்ரயமுங் குலைந்து கூதையாய்விடுமாபோலே, கடைமுறைவாழ்க்கையும் - முன்புபோகிறஹேய ப்ரயோஜநமும், போம் - அழித்துப்போமித்தனை, ஆனபின்பு, மா - பெரிய, துகிலின் - துகில்களாலுண்டான, கொடி - கொடிகளை, கொள் - உடைய, மாடம் - மாடங்களை யுடைத்தாயிருக்கிற, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்த - அவதரித்தவனாய், தாதுசேர் - துளஸீ வைஜயந்த்யாதி மாலாலங்க்ருதமான தோள் - தோள்களையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனை, அல்லால் - ஒழிய, சரண் - ப்ராப்யதயா புகலிடமாவது, இல்லை - ஒன்றுமில்லை, கண்டீர் இது நிரூபகர்க்குக் கண்டுகொள்ளலாம்.

தாது - புஷ்பகேஸரம். (கூ)

ஆறு:— (யாதுமில்லை) எல்லாவற்றிலும் மேற்பட்ட புருஷார்த்தமன்றோ ஸாம்ஸாரிக து:க்கநிவ்ருத்திரூப கைவல்யமென்று அத்தைப் புருஷார்த்தமென்று பற்றில், காதுபெருக்கவென்றுபுக்கு, பண்டுள்ளத்தையுங்கெடுத்துக் கூதையாக்கினாப்போலே, பண்டுள்ள ஸாம்ஸாரிக ஸுகத்தையு மிழக்குமித்தனை; ஆதலால், ஸ்ரீமதுரையிலே திருவவதாரம்பண்ணுகையாலே புதுக்கணித்த வழகையுடையனான கண்ணனே பரமப்ராப்யமென்கிறார். (கூ)

ஈடு-அவ:— இவனை யொழிய வேறே யொன்றை ரக்ஷகமென்று பற்றினவர்கள், பண்டு நின்றநிலையுங்கெட்டு அநர்த்தப்பட்டுப் போவார்கள்; ஆனபின்பு, இவனல்லது சரணமில்லையென்கிறார். அன்றிக்கே, கைவல்யபுருஷார்த்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம்.

(யாதுமித்யாதி) பகவத்வ்யதிரிக்தமா யிருப்பதொன்றைப்பற்றி "இதொழிய வேறு ரக்ஷகமாயிருப்ப தொன்றுமில்லை" என்று சொல்லி, அத்தை ரக்ஷகமாக நினைத்து (க) "ஸர்வரோகஹரஸ்ஸ்ரீமான் மதுஸூதநோ ..." என்கிறப்ரதிபத்தியை யதிலேபண்ணி. (காதுசெய்வான்கூதைசெய்து) காதுபெருக்கப்புக்கு, பண்டுள்ள யோக்யதையையுங் கெடுத்துக் கூதையாக்கினாப்போலே. (கடைமுறைவாழ்க்கையும்போம்) தண்ணிதான முறைமையாலே வாழக்கடவவாழ்வுண்டு - ஸம்ஸாரத்திலே பசலுங் குட்டியுமாய் அளாய்க்குளாயாய்ப் போருமது, அதுவுங்கூடக் கெடுமித்தனை; ஆபத்திலது ரக்ஷகமாகமாட்டாது; அதின்பக்கலிலே ந்யஸ்தபரனாயிருக்கையாலே, தான்செய்துகொள்ளுமத்தனையுமிழக்கும்.

(மாதுகிலித்யாதி) கம்ஸன் வாழ்கிறானாய், அலங்காரமாகக் கட்டின கொடியை க்ருஷ்ணனுடைய வவதாரத்துக்கென்றே நினைத்திருக்கிறாராயிற்றிவர். ஶிஶுபாலன், பாணிக்ரஹணத்துக் குடலாகச் செய்த சடங்குகளடையத் தனக்குடலாக நினைத்துக்கைப்பிடித்தானிறே (தாதித்யாதி) வைஜயந்திதொடக்கமான மாலைகளாலே யலங்க்ருதமான திருத்தோள்களையுடையவன். வேறொருப்ரயோஜநந்தான் வேண்டா. (அல்லாலில்லை கண்டீர்சரணே) அவனை யொழிய வேறு ரக்ஷகமாகவல்ல தொருவஸ்துவில்லை கிடிகோள்.

கைவல்யபரமானபோது, (யாதுமித்யாதி) "இவ்வாத்மாநுபவ ஸுகத்துக்கு மேற்பட்டிருப்பதொன்றில்லை" என்று, அவ்வருகே பகவதநுபவஸுகமுண்டோயாகிலு மத்தையே புத்தி பண்ணிக் காதுபெருக்கப்புக்கவன், அத்தைப் பலகாலுமறுத்துவைத்து முன்புத்தை யோக்யதையுங்கூடக் கெடுக்குமாபோலே, பகவத் ஸமாஶ்ரயணத்துக்கு யோக்யமான ஸம்ஸாரத்திலே ஶப்தாதிவிஷயங்களை யநுபவித்திருக்கு மத்தையு மிழக்கும்; ஆனபின்பு, ஸர்வாதிகனான க்ருஷ்ணனே பரமப்ராப்யனென்கை. (௯)

## பத்தாம்பாட்டு

கண்ணனல்லாலில்லை கண்டீர்சரணது நிற்கவந்து * மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்* திண்ணமாநும் முடைமையுண்டே லவனடிசேர்த்துய்மினோ * எண்ணவேண்டா நும்மதாது மவனன்றிமற்றில்லையே. (கO)

ப:—அநந்தரம், தானேப்ராப்யமும் ப்ராபகமுமென்னுமிடம் நிலை நிறுத்துகைக்காக வவதரித்து பூபாரநிரஸநம்பண்ணின க்ருஷ்ணன் திருவடிகளிலே, நீங்கள் ப்ராப்ய ப்ராபகமென்று நினைத்திருக்கிறவற்றையெல்லாம் த்ருடமாக ஸமர்ப்பியுங்கோளென்கிறார்.

(இ - ள்.) கண்ணன் - க்ருஷ்ணன், அல்லால் - அல்லது, சரண் - வேறுப்ராப்ய ப்ராபகங்கள், இல்லைகண்டீர் - இல்லைகிடிகோள். அது - அந்ததன்னுடைய, ப்ராப்ய ப்ராபகபாவம், நிற்க - லோகத்திலேநிற்கைக்காகவும், மண்ணின்பாரம் - தத்விரோதிகளான வாஸுரப்ரக்ருதிகளாகிறபூபாரத்தை, நீக்குதற்கு - போக்குகைக்காகவும், வந்து-நாகபர்யங்கத்தைவிட்டுவந்து, வடமதுரை - வடமதுரையிலே, பிறந்தான் - அவதரித்தான்; ஆனபின்பு, நும் - உங்களுக்காகநினைத்திருக்கிற, உடைமை - பதார்த்தம், உண்டேல் - உண்டாமாகில், அவனடி - அவன்திருவடிகளிலே, திண்ணமா - த்ருடமாக, சேர்த்துய்மினோ - ஸமர்ப்பியுங்கோள்; இது எண்ணவேண்டா-விசாரிக்கவேண்டா, நும்மது - உங்களுடைய, ஆதும், ப்ராப்யப்ராபகரூபமான ஸமஸ்தபதார்த்தங்களும், அவனன்றி - (க) "மாதா பிதா ப்⁴ராதா நிவாஸ꞉ ஶரணம் ஸுஹ்ருத் க³தி꞉ நாராயண꞉"-மாதாபிதா ப்ராதாநிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண:" என்று ஸர்வவிதபந்துவானவனையொழிய, மற்று - வேறுஸ்வநிஷ்டமாயிருப்பதொருவஸ்து, இல்லை. (கO)

ஆறு:—(கண்ணனல்லால்) க்ருஷ்ணனல்லது சரணில்லையென்று இங்ஙனே தன்னுடைய ரக்ஷகத்வத்தை நிலைநிறுத்துகைக்காக ஸ்ரீமதுரையிலேவந்து பிறந்தருளி, பூபாராவதரணம்பண்ணி, ஜகத்தை ரக்ஷித்தருளினான்; ஆகலால், அவனேரக்ஷகன்; ஆனபின்பு உங்களுக்காக வபிமானிக்கப்படுகிற வஸ்துக்களையு முங்களையும் அவன்திருவடிகளிலே ப்ரேக்ஷத்வேந ஸமர்ப்பியுங்கோள்; உங்களுக்காக

(க) ஸுபாலோப-

வபிமானிக்கப்படுகிறவையும் நீங்களுமவனுக்கேஶேஷம், இதிலொரு ஸம்ஶயமில்லை யென்கிறார். (கo)

ஈடு-அவ;—தான் சரணமென்னுமர்த்தத்தை ப்ரதிஷ்ட்டிக்கைக்காக வவதரித்த க்ருஷ்ணன் திருவடிகளை யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

( கண்ணனித்யாதி ) க்ருஷ்ணனையொழிய வேறுசரணமாவாரில்லை யென்னுமிவ்வர்த்தம் நிலைநிற்கைக்காக, இவ்வர்த்தத்தை ஸ்தாபிக்கைக்காகவும், அதுக்குறுப்பாக பூபாரத்தைப் போக்குகைக்காகவும் திருவவதாரம்பண்ணினான்; ஆனபின்பு, நீங்களும், உங்களுடைமையென்று நினைத்திருந்தனவுண்டாகில் கடுகவவன் திருவடிகளிலே ஶேஷத்வேன த்ருடமாக ஸமர்ப்பியுங்கோள். உண்டேலென்றது - ஸ்வபக்ஷத்தாலில்லை, அவர்களுடைய வந்யதா ஜ்ஞானத்தாலுண்டான ப்ரதிபத்தியாலேவந்தன வுண்டாகிலென்கை.

( எண்ணவேண்டா ) "இதுதான் அவனதோ, நம்மதோ" என்று விசாரிக்கவேண்டா, உங்களோடு உங்களுடைமையோடுவாசியற அவனுக்கேஶேஷம். ( மற்றில்லையே ) வேறில்லை. அன்றிக்கே, உங்களுடையபரத்தில் கர்த்தவ்யாம்ஶமடைய உங்கள் தலையிலே கிடக்கிறதல்ல, எல்லாம் அவன்பக்கலிலே கிடக்கிறதென்னுதல். (மற்றில்லை) பலஸித்திக்கீடான ஸாதநமும் அவனையொழியவில்லை, ஸமிதைபாதி, ஸாவித்ரிபாதியாக நீங்களுமொருதலை கூட்டுப்படவேண்டுவதில்லை. (கo)

## பதினொன்றும்பாட்டு.

ஆதுமில்லைமற்றவனிலென்றது வேதுணிந்து * தாதுசேர்தோள்கண்ணனைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன * தீதிலாதவொண்டமிழ்களிவை யாயிரத்துளிப்பத்தும் * ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே. (கக)

ப—அநந்தரம், இத்திருவாய் மொழிக்குப்பலமாக, இதுகற்றவர்களைப் பற்றவுண்டான ஸ்வஶேஷத்வத்தை யருளிச்செய்கிறார்,

(இ-ள்.) அவனில் - அவனையொழிய, மற்று - வேறு, ஆதும்-ப்ராப்யப்ராபகமாயிருப்பதொருவஸ்துவும், இல்லை - இல்லை, என்றதுவே-

என்னுமத்தைபே, துணிந்து-அத்யவஸித்து, தாதுசேர் - மாலாலங்க்ருதமான, தோள் - தோள்களையுடையனுகையாலே நிரதிஶயபோக்யனாய், கண்ணனை - ஆஶ்ரிதபவ்யனான க்ருஷ்ணனை, குருகூர்ச் சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், தீது - ஸப்தார்த்தங்களிற்குற்றம், இலாத - அற்று, ஒண் - பஹுகுணமாய், தமிழ்கள்-த்ராமிடரூபமான, இவை - இவை, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தும்-இப்பத்தையும், ஓதவல்ல - அப்யஸிக்கவல்ல, பிராக்கள் - உபகாரகராணவர்கள், பண்டே - இந்தவப்யாஸார்த்தமான, ஶரீரபரிக்ரஹம் பண்ணினகாலமேதொடங்கி, நம்மை - நமக்கு, ஆளுடையார்கள்-நாதபூதர்.

இது கலித்துறை; இது சீர்வகையொளித்து "கலிவிருத்தம்" என்பாருமுளர். (கக)

ஆறு;—(ஆதுமில்லை) ஆத்மாத்மீயங்களெல்லாம் அவனுக்கே ஶேஷமென்று துணிந்திருந்த சடகோபன், தாதுசேர்தோள்கண்ணனைச்சொன்ன, நிரவத்யமாய் கல்யாணமான வித்திருவாய்மொழியையோதவல்ல மஹாத்மாக்கள், நமக்குப்பண்டே ஸ்வாமிகளென்கிறார்.

ஈடு; அவ;—நிகமத்தில், (க) "ஜயெ ஷ தெவயஜ -அத்யேஷ்யதேச யஇமம்" என்று தொடங்கி அவனருளிச்செய்தாப்போலே, இத்திருவாய்மொழியப்யஸிப்பார் எனக்கு ப்ரியகரரென்கிறார்.

(ஆதுமில்லை மற்றவனிலென்றதுவேதுணிந்து) அவனையொழிய வேறு ப்ராப்ய ப்ராபகங்களில்லையென்றத்யவஸித்து, இவர்க்கிப்படி இந்த வ்யவஸாயத்தைக் கொடுத்தாரரென்றால்; வேறுண்டோ, அவனுடைய தோளும் தோள்மாலையுமன்றோ (தாதித்யாதி) அவனுடைய ஸௌந்தர்யமாயிற்று இவரை யிப்படித்துணியப்பண்ணிற்று.

(தீதிலாத) கதாந்தரப்ரஸ்தாவமின்றிக்கேயிருக்கை. (ஒண்டமிழ்கள்) உள்ளுண்டானவர்த்தத்தையடைய வெளியிட்டுக் கொடுக்கவற்றாயிருக்கை. நிர்த்தோஷமாய், பஹுகுணமானவை யென்றுமாம். (ஓதவல்லபிராக்கள்) இப்பத்தையதிகரிக்கவல்லவுபகாரகர். ஸம்ஸாரத்தின்தண்மையும், ஈஶ்வரனுடைய ப்ராப்யப்ராபகபாவமுமிறே இத்திருவாய்மொழியிற்சொல்லிற்று; இத்தை யப்யஸிக்

(க) கீதை-கஅ-எ0.

திருவாய்மொழி, ௯-ப, ௧-தி, ௧௧-பா, ஆதுமில்லை வ்யாக்யாநம்.உள கவே, தீயவழியைத் தவிர்ந்து நல்வழிபோகத்தொடங் குவர்கள். இதுக்குமேற்படவிவர்க்கு உபகாரமில்லையிறேயிவர்கள்பண்ணுவது.

(நம்மையாளுடையார்கள்பண்டே) ஒருஜந்மத்திலே இத் தையப்யஸிக்கைக்கீடான வதிகாரத்தை யுடையராயிருப்பாராகில், அவர்கள்பண்டே நமக்கு நாதபூதர். (க) "ஜ்யெஷ்டெத-அத் யேஷ்யதே" என்கிறபடியே, இத்தை அப்யஸிக்கைக்கீடான யோக் யதையுள்ள ஜந்மந்தொடங்கி நமக்குநாதர். (௧௧)

முதல்திருவாய்மொழி வ்யாக்யானம்

முற்றிற்று.

---

(க) கீ-௧௮-௭0.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ஒன்பதாம்பத்து.

## இரண்டாந்திருவாய்மொழி.

### பண்டைநாள் ப்ரவேஶங்கள்.

ஆறு:—(பண்டைநாளாலே) இப்படி யெம்பெருமானுடைய வுறவுடைமையை யநுஸந்தித்து, "இவ்வுறவுடையனை வவனோடேகலந்து பரிமாறவேணும்" என்று மநோரதித்துக்கொண்டு திருப்புளிங்குடியிலே போய்ப்புக்கு. அவ்விடத்தில், தன்திறத்து ஸாமாந்யகடாக்ஷமல்லது வேறொருவிஶேஷ கடாக்ஷம்பண்ணி யருளக்காணாமையாலே சாலவின்னாதாராய், "என்னை யுன்னழகிய திருக்கண்களாலேநோக்கி யருளவேணும், திருவடிகளைத் தலையிலேவைத்தருளவேணும், திருப்பள்ளியுணர்ந்து பிராட்டியோடேகூட விருந்தருளவேணும், எழுந்திருந்து என்னெதிரே வந்தருளவேணும்" என்றிப்புடைகளிலே தம்முடைய மநோரதங்களை யடையவபேக்ஷிக்கிறார். *

ப:—அநந்தரம், இரண்டாந்திருவாய்மொழியில், கீழே, நிருபாதிக பந்துவான ஸர்வேஶ்வரனுடைய பலரூபதயா ப்ராப்யதையை யருளிச்செய்து, அவன்கண்வளர்ந்தருளில் கைங்கர்யம் பண்ணுகையை மநோரதித்து; கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியானவனுடைய புண்டரீகாக்ஷத்வத்தையும், அநுரூபஸம்பந்தத்தையும், லக்ஷ்மீஸஹாயத்வத்தையும், தர்ஶநீயாகாரதையையும், மந்தஸ்மிதஶோபையையும், ஆஶ்ரிதார்த்தமான வாஹநாயுதவத்தையையும், அஸாதாரண பரிகரயோகத்தையும், அகிலலோகவந்த்யத்வத்தையும், அதிஶயித ஸௌகுமார்யத்தையும், ஶ்ரீபூமி ஸேவ்யத்வத்தையுமநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனான நீ, உனக்கஸாதாரண ஶேஷபூதராய்ப் போந்தவெங்களுக்கு க்ருபைபண்ணி பூர்ணகடாக்ஷம்பண்ணவும், திருவடிகளையெடுத்துத் தலையிலேவைக்கவும், அங்கீகரிக்கும்போது பிராட்டியோடேகூட வெழுந்தருளியிருந்து அங்கீகரிக்கவும் ஆசாநுரூபமாக நடந்தெழுந்தருளிவரவும், முகமும் முறுவலுமாய்க்கொண்டு என் முன்னேநிற்கவும், நிற்கும்போது பெரியதிருவடியை மேற்கொண்டு திவ்யாயுதங்களையுமேந்திக்கொண்டுவரவும், அஸாதாரண பரிகரத்தோடேவந்தென் முன்னேயெழுந்தருளிவந்திருக்கவும்

ஸர்வலோகங்களுங்கண்டு வாழும்படி யெழுந்தருளியிருக்கவும் இந்த
ஸுகுமாரமானவடிவை நானநுபவிக்கும்படிபண்ணவும், நாய்ச்சிமாரை
யடிமைகொண்டருளுகிறப்போலே உன் திருவடிகளிலே யடிமைகொ
ண்டருளவும் வேணுமென்று, தம்முடைய மநோரதபரம்பரைகளை,
திருப்புளிங் குடியிலேகிடந்தருளுகிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே
ப்ரார்த்தித்தருளுகிறார்.

ஈடு;—கீழ்த்திருவாய்மொழியிலே - "அவனையொழிந்தாரடங்
கலும் ஸோபாதிகபந்துக்கள், அவனொருவனுமே நிருபாதிகபந்து"
என்றார்; நிருபாதிகபந்துவானால் பின்னை பந்துக்ருத்யம்பண்ணாதி
ருக்க வொண்ணாதிறே. இப்படி பரமபந்துவானவன் கண்வளர்ந்தரு
ளுகிற திருப்புளிங்குடியிலே யெல்லாப் பரிமாற்றத்தையு மாசைப்
பட்டு இவர்சென்று கிட்டினவிடத்தில், இவரையென்னென்னுதல்,
திருக்கண்களாலே குளிரநோக்குதல், ஒருவார்த்தை சொல்லுதல்
செய்யக்கண்டிலர்; காணாமையாலே மிகவுமவஸந்நராணார்; அது அவ
னுளனாகத்தீருமிறே.

அதுக்குமேலேயு மொன்றுண்டாயிற்று - "திருமேனியலசும்
படி யேகரூபமாகக் கண்வளர்ந்தருளாநின்றான். என்வருகிறதோ"
என்றொருபயமோடிற்று; கீழே, * ஆராவமுதிலே, "என்னார்த்தி
யைத்தீர்க்கிறிலன்" என்றின்னாதானார்; இங்கே "என்னார்த்தியும்
தன்னார்த்தியுந் தீர்க்கிறிலன்" என்றின்னாதாகிறார்; ஆக, "கொடி
யார் மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே" என்ற
வதுவே தலையெடுத்து, பெரியவாற்றாமையோடே, என்னுடையவா
ர்த்தியெல்லாந்திரும்படி திருக்கண்களாலே குளிரநோக்கியருளவே
ணும், என் தலைமேலே திருவடிகளைவைத்தருளவேணும், தேவரும்
பிராட்டிமாருங்கூட வெழுந்தருளியிருக்கு மிருப்பை யெனக்குக்
காட்டியருளவேணும்; ஸஞ்ஜயன்பெற்றபேற்றில் எனக்குக்குறைய
வொண்ணாது.

(க) "யத்ருக்ஷௌவக்ஷௌரவஸத்ருஹாரோவஸாரிநீ - யத்ர
க்ருஷ்ணௌசக்ருஷ்ணா ச ஸத்யபாமாசபாமிநீ" என்று சொல்லு
கிறபடியே, அவ்விருப்பிலேயிறே அவனையழைத்துக்காட்டிகொடுத்
தது. இப்படி "ஸஞ்ஜ்யன்வந்தான்" என்றறிவிக்க, "நமக்குநல்

(க) பாரத உத்யோ-சக-

லானொருவன், உகவாதர்க்கு மிவ்விருப்பைப்போய்ச் சொல்லுவா னொருவன், அநுகூலனானவிவனுக்கு விளைநீரடைத்தோமாகிறோம், உகவாதார் மண்ணுண்ணும்படி கார்யம்பார்த்தோமாகிறோம், புகுரவிடுங்கோள்" என்றானிறே. [நவாஹிசநு-நயௌ தம் தெய ஹிஜஹூ த:- நசாபிமந்யுர்நயமௌ தம்தேயமபிஜக்மது:] தாயுந் தமப்பனும் சேரவிருந்தவிடத்தில் ப்ரஜைகளுக்குச்சென்று கிட்டவொண்ணுமையில்லையிறே; அவர்களுக்குஞ்சென்று கிட்டவொண்ணுதபடியாயிற்றுஎழுந்தருளியிருக்கிறவிருப்பு; அவ்விருப்பிலேயிறே அவனையழைத்துக் காட்டிகொடுத்தது.

அப்படியே "தேவரும் பிராட்டிமாரு மெழுந்தருளியிருக்குமிருப்பை யெனக்குக்காட்டவேணும், என்னைக் கண்டகாட்சியிலே விக்ருதனாய் என்முன்னே நாலடியுலாவி யருளவேணும், அநுகூலதர்ஶநத்தால் பிறக்கும் ஸ்மிதங்காணவேணும், ஒருவார்த்தையருளிச் செய்யவேணும்" என்றிங்ஙனே, தாமுமவனுமறிந்ததாகத் திருவாசலைத் திருக்காப்புக்கொண்டு ஏகாந்தத்திலே தம்முடைய மநோரதங்களை யெல்லாம் விண்ணப்பஞ் செய்து, "இவற்றை யிப்போதே பெறவேணும்" என்று த்வரிக்கிறார். ப்ராப்தியை யநுபவித்தார் கீழ்திருவாய் மொழியிலே; ப்ராப்திபலத்தை யாசைப்பட்டபேசுகிறாரிதில்.

---

# முதற்பாட்டு.

பண்டை நாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள்திருவருளுங் கொண்டு* நின்கோயில் சீய்த்துப் பல்படி கால்குடிகுடி வழிவந்தாட்செய்யும் * தொண்டரோர்க்கருளிச் சோதிவாய்திறந்துன் தாமரைக்கண்களால் நோக்காய் * தெண்டிரைப்பொருநல் தண்பணை சூழ்ந்த திருப்புளிங் குடிக்கிடந்தானே. (௧)

ப:-அநந்தரம், முதற்பாட்டில் குலக்ரமாகதமாக கைங்கர்யம் பண்ணிப்போந்த வடியோங்களுக்கிரங்கி, திருப்பவளத்தைத் திறந்து ஸாந்த்வவாதத்தை யருளிச்செய்து, அழகிய திருக்கண்களாலே பார்த்தருளவேணுமென்கிறார்.

(இ-ள்.) தெண் - தெளிந்த, திரை - திரையையுடைத்தான, பொருநல் - திருப்பொருநலையுடைத்தாய், தண் - குளிர்ந்த, பணை - நீர்

நிலங்களாலும், சூழ்ந்த-சூழ்ந்த, திருப்புளிங்குடி-திருப்புளிங்குடியிலே, கிடந்தானே - கண்வளர்ந்தருளுகிறவனே, நின் - நிருபாதிகபந்துவான வுன் திருவருளும் - திருவருளையும், பங்கயத்தாள்-உன்னை யருளுவிக்கக்கடவளான பங்கயத்தாள், திருவருளும்-திருவருளையும், (க) "ஜாயமாநம்ஹிபுருஷம்" என்கிறபடியே, பண்டைநாளாலே உத்பத்தி காலமே பிடித்து, கொண்டு - உடையோமாய்க்கொண்டு, நின்-நீ புகந்தருளின, கோயில்-திவ்யதேசத்திலே, சீய்த்து - உசித கிஞ்சித்காரத்தைப் பண்ணி, பல்படிகால் - பல்படிகாலுண்டாம்படி, குடிகுடிவழி-குலக்ரமத்திலே, வந்து - வரக்கடவராய், அப்படி காலந்தோறும், புத்ரபௌத்ராதி ஸஹிதராய்க்கொண்டு, ஶாஸ்த்ரோக்த மார்க்கத்தைத் தப்பாதபடி, ஆட்செய்யும்-வந்தடிமைசெய்துபோருகிற, தொண்டரோர்க்கு - சேஷபூதரானவெங்களுக்கு, அருளி - நிரவதிகக்ருபையைப்பண்ணி, சோதி - உஜ்ஜ்வலமான, வாய் - திருப்பவளத்தை, திறந்து-திறந்து, ஸாந்த்வவாதம்பண்ணி, உன்-உனக்கஸாதாரணமான, தாமரை - தாமரைபோலேயிருக்கிற, கண்களால் - திருக்கண்களாலே, நோக்காய் - பூர்ணமாகப்பார்த்தருளவேணும். (க)

ஆறு;— பிராட்டி பரிக்ரஹமாகையாலே பண்டையுன்னுடைய விஷயீக்ருதராய் ஸர்வவித கைங்கர்யநிரதருமாய் * எங்குங்குடியாக வடிமைசெய்துவர்த்திக்கிறவடியோங்களுக்கருளி, சோதிவாய்திறந்து உன் தாமரைக்கண்களால் நோக்காய்; தெளிந்த திரையையுடைய திருப்பொருநலோடு கூடின வழகிய நீர்நிலஞ்சூழ்ந்த திருப்புளிங்குடியிலேவந்து கண்வளர்ந்தருளினவனே யென்று ப்ரார்த்திக்கிறார்.

ஈடு; அவ: — அநந்யகதிகளானவடியோங்களைக்குறித்து, ஒருவார்த்தை யருளிச்செய்து, விடாய்கெடும்படி குளிரநோக்கி யருளவேணுமென்கிறார்.

(பண்டைநாளாலே நின்திருவருளும்) நெடுநாள்கூடப்பண்ணிப்போந்த வுன் கடாக்ஷத்தையும். நீ கேற்றின்று பண்ணிப்போந்த க்ருஷியின் பலமோவிது; * எதிர்சூழல்புக்கு நெடுநாள்பட்ட க்லேஶத்தின் பலமன்றோவிது. நெடுநாள் க்ருஷியைப்பண்ணி பலவேளையில் கைவிடவோ. (பங்கயத்தாள்திருவருளும்) அதுக்கடியான பெரி

---

* (பா) என்றும் (க) பாரத-ஶாந்தி-

ய பிராட்டியார் கடாக்ஷத்தையுங்கொண்டு. அவனுடையவருளின் ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்க்குமருள். ப்ரணயித்வத்தால்வந்த பாரதந்த்ர்யமிறே ஸ்வாதந்த்ர்யத்தைத் தவிர்ப்பது.

(௧) "என்னடியா ரதுசெய்யார்" என்று மூன்கடாக்ஷமும், (௨) "நகஶ்சிந்நாபராத்யதி-ஶ்ரீநகம்ஸிந்நாபராத்யதி" என்னுமவள் கடாக்ஷத்தையும் பெற்று. (௩) "க்ருபயாபராவாயஸ-க்ருபயா பர்யபாலயத்" என்று, க்ருபாபரதந்த்ரனானவுன்னுடைய கடாக்ஷமும், அப்பாரதந்த்ர்யத்துக்கடியான வவள்கடாக்ஷமு மென்றுமாம். (பங்கயத்தாள் திருவருளும்) உன்னருளின் ஸ்வாதந்த்ர்யகந்தத்தைத் தவிர்க்குமவளருளும்படியாக வன்றோவார்த்தது. அவளருள் அவன் ஸ்வாதந்த்ர்யத்தைப் பின்செல்லாதபடி பண்ணுமாயிற்று. "அவனுடைய பாரதந்த்ர்யம் ப்ரணயித்வமேயன்றோ, நிலைநிற்குமோ, ஸ்வாதந்த்ர்யமேயன்றோ-ப்ரக்ருதி" என்றஞ்சவேண்டா, அவளருகே யிருக்க ஸ்வாதந்த்ர்யம் ஜீவியாது; ஆகையிறே, முற்கூற்றால் அவள்புருஷகாரமாகப் பற்றுகிறது.

(நின்கோயில்சீய்த்து) உகந்தருளினநிலங்களிலே, அஸாதாரண பரிசர்யைபண்ணி. தந்தாமுடைய ஸுக்ருதத்தாலே பகவதநுக்ரஹ முடையரானவர்கள், தந்தாம் க்ருஹங்களைப் பேணுவர்கள், பிராட்டி புருஷகாரமாக பகவத்ப்ரஸாதம் பெற்றவர்கள். உகந்தருளின நிலங்களைப்பேணுகிறர்கள். (௪) "நஹிமே ஜீவிதேநார்த்தோ விநா விஷ்ணோராயதநே வஸேத்" ஒருதுரும்பு நறுக்கேனென்னுமவர்களுக்கும், உகந்தருளின நிலத்தைப்பற்றிக் கிடக்கவேணும். ஶரீரஸம்பந்தமற்றால் பெறவேணுமென் றாசைப்படுகிற வடிமையை, இச்சரீரத்தோடே கிடைக்குமாகில் விடானிறே (௫) "வயலணியனந்தபுரங் கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே." ப்ராப்யத்தை லபிக்கவே, ப்ராப்ய விரோதிகளைப் போக்கலாமாயிற்று.

திருக்கண்ணமங்கையாண்டான், அங்கே யொரு திருப்புழ்டியிலேயிருந்து, சருகைத் திருவலகிடாநிற்க, கூடவாசித்து நாஸ்திகனொ

(௧) பெரியா-தி-௩௬-௧-  (௨) ரா-யு-௧௧௬-௧௯-
(௩) ரா-ஸு-௩-அ-௩௯-  (௪) விஷ்ணுதர்மம்-
(௫) ௧௦-௨-௭-

யிருப்பானொருவன், "பகவானுபாயம், நாமநந்யப்ரயோஜநர். இப்போ இந்தக்லேசத்துக்கு பலமென்" என்ன; திருவலகிட்டவிடத்தையும் இடாதவிடத்தையும்காட்டி, 'இவ்விடமு மவ்விடமுமிருந்தபடி கண்டாய்க்கு 'ஒருபலமில்லை' என்றுதோற்றியிருந்ததோ" என்றான்.

(பல்படிகால்) இதுதானின்றுதொடங்கிவந்ததொன்றோ, நீ கடாக்ஷிக்கப் புக்கவன்றுதொடங்கி வந்ததன்றோ. (குடிகுடி) ஸபரிகரமாக. (வழிவந்து) ஶாஸ்த்ரங்களிற் சொல்லுகிற முறைதப்பாதபடிவந்து. (ஆட்செய்யும்தொண்டரோர்க்கருளி) அடிமைசெய்கிறவடியோங்கள்பக்கலிலேக்ருபைபண்ணி. (சோதிவாய்திறந்து) பூவலருமாபோலேயாயிற்று வாய்திறந்துவார்த்தையருளிச் செய்யும்போது திருமுகத்தில் பிறக்கும்செவ்வி. (௧) "[illegible]-மாமக்ரூரேதிவக்ஷ்யதி" என்றுவார்த்தையளவிலேயாயிற்று அக்ரூரனநுபவித்தது. தக்காலத்தில் திருமுகத்தில் செவ்வியு முத்தேஶ்யமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு.

(உன்தாமரைக்கண்களால் நோக்காய்) வார்த்தையில் தோற்றுத பந்தமும் நோக்கிலே யநுபவிக்கும்படி குளிரநோக்கியருளவேணும்; (௨) "[illegible] அவலோகநதாநேந பூயோமாம்பாலயாவ்யய" என்னுமாபோலே. வார்த்தை யருளிச்செய்யப்புக்கு விக்கினால் குறையுந்திருக்கண்களாலே தலைக்கட்டி யருளவேணும்.

பிள்ளைதேவப் பெருமாளரையர், "உன்தாமரைக் கண்களால் நோக்காய், நோக்காய்" என்று பலகாலுஞ்சொல்ல, ஆழ்வாரெழுந்திருந்து, "பிள்ளாய், நீயிங்ஙனே திருவுள்ளம் புண்படும்படி பலகாலும் நிர்ப்பந்திக்கிறதென், அழகியமிடற்றைத் தந்தாராகில், நல்லபாட்டைதந்தாராகில், பிள்ளைகளையுமைஶ்வர்யத்தையும் தந்தாராகில் என்செய்யாதாராக நீஇங்ஙனே கிடந்துபடுகிறது" என்றருளிச்செய்தாராம்.

(தெண்டிரையித்யாதி) திருமேனியில் ஸௌகுமார்யத்துக் கநுரூபமான ஜலஸம்ருத்தியை யுடைத்தான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளப்பெற்றது. தெளிந்த திரைகளை யுடைய திருப்பொரு

(௧) வி-பு-௫-௧௭-௧௨. (௨) வி-பு ௧-௨௦-௧௯.

நரோடே சேர்ந்தழகிய நீர்நிலஞ்சூழ்ந்த திருப்புளிங்குடியிலே கண வளர்ந்தருளினமையுண்டு; இது - செய்த ஸம்ஸ்ரயம்; உன் தாமரைக்க ண்களால் நோக்காய். செய்தவம் ஸ்ரத்துக்கு க்ருதஜ்ஞனாகவும், செய்ய வேண்டு மம்ஸ்ரத்துக்கு ப்ரார்த்திக்கவும் வேணுமிறே அதிகாரிக்கு,

# இரண்டாம் பாட்டு.

குடிக்கிடந்தாக்கஞ்செய்து நின்தீர்த்தவடிமைக் குற்றேவல் செய்து* உன்பொன்னடிக்கடவர்தே வழிவருகின்ற வடியரோர்க்க கருளி * நீயொருநாள் படிக்களவாக நிமிர்த்தநின்பாத பங்கயமே தலைக்கணியாய்* கொடிக்கோள் பொன்மதிள்சூழ் குளிர்வயல்சோ லைத் திருப்புளிங்குடிக்கிடந்தானே. (௨)

ப:—அநந்தரம், ஆஸ்ரய விஷயாநுரூப ஸம்பந்தத்தை யுடைய வுன் திருவடிகளை யென்தலையிலே வைக்கவேணுமென்கிறார்.

(இ - ள்.) கொடிக்கொள்-கொடிகளாலே யலங்க்ருதமாய், பொன்-கநகமயமான; மதின் - மதிளாலே, சூழ் - சூழப்பட்டு, குளிர் - குளிர்ந்த, வயல்-வயலையும் சோலை சோலையையுமுடைத்தான, திருப்புளிங்குடி-திருப்புளிங்குடியிலே, கிடந்தானே-ஆஸ்ரிதாநுபவார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே. குடிக்கிடந்து-ஶேஷத்வகுலம் தப்பாதபடி நின்று, ஆக்கம்செய்து-அந்தஶேஷத்வ மபிவ்ருத்தமாம் படியானஶேஷவ்ருத்தியிலே யுத்யுக்தராய். தீர்த்த - இதரஸங்கநிவர்த்தகமான. நின்-உன் விஷயமான. அடிமை-அடிமைகளிலே, குற்றேவல்-அந்தரங்கமான வ்ருத்தி விசேஷங்களை, செய்து-அநுஷ்டித்து, உன் - உன்னுடைய, பொன்-ஸ்ப்ருஹணீயமான, அடிக்கடவாதே - திருவடிகளை யொழிய. அநுபவஜநிதமாய் அபர்யவஸாநலப்யமான ஸ்வாநந்தத்திலும் தாத்பர்யம்பண்ணாதே, வழி-பாரதந்த்ர்யமார்க்கம், வருகின்ற- தப்பாதபடிவருகிற, அடியரோர்க்கு-ஶேஷபூதரானவெங்களுக்கு, அருளி-அருளி, நீ - நிருபாதிகபந்துவான நீ, ஒருநாள்-பூமிக்கர்யாபிமாநம் வந்ததொரு நாளிலே, படிக்கு - அதுக்கு, அளவாக - அநுரூபமாக, நிமிர்த்த - நிமிர்த்தளர்ந்து கொண்ட, நின்-உன், பாதபங்கயம்-நிரதிஶயபோக்யமான திருவடித்தாமரையை, தலைக்கணியாய் - என்தலைக்கநுரூபமான வலங்காரமாம்படி பண்ணியருளவேணும்.

ஆறு:—(குடிக்கிடந்து) த்வத்ஸம்ருத்த்யேக ப்ரயோஜநராய்க் கொண்டு உனக்கந்தரங்கமான வடிமைசெய்து உன் திருவடிகளல்லதறியாதே பரம்பரயா வர்த்திக்கிற வடியோமுக்கு க்ருபைபண்ணி ஸர்வாத்மாக்களுக்கும் ஸுலபமான நின்பாதபங்கயமே யொருநாள் தலைக்கணியாய், கொடிக்கொள் பொன்மதிள்சூழ்குளிர்வயல்சோலை திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளினவனே யென்கிறார்.

ஈடு; அவ:—ஸர்வஸுலபமான வுன்திருவடிகளை யென்தலையில் வைத்தருளவேணுமென்கிறார்.

(குடிக்கிடந்து) குடிக்கீடாக வர்த்தித்து. குலமர்யாதை தப்பாதபடி வர்த்திக்கை. "இக்ஷ்வாகுவம்ஶ்யரில், தமயனிருக்கத் தம்பிமாரில் முடிசூடியறிவாரில்லை" என்றானிறே ஸ்ரீபரதாழ்வான். (ஆக்கஞ்செய்து) குடியில் பண்டில்லாத நன்மைகளை யுண்டாக்கி, (க) "வஜ்ரதிக்ஷுஜடிஜ்ஞோ ஹாதஸாம்ஸு தீக்ஷ்ணதே। வாஸுகே தவாஸ்ஸுதே ஸ்வல்ஜேகஸுஹ்மவேஹ - பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ்த்வாம்ப்ரதீக்ஷதே। பாதுகேதே புரஸ்க்ருத்ய ஸர்வஞ்சகுஶலம்க்ருஹே" என்றும் (உ) "ஜடிஸம்வீரவஸநஃ - ஜடிலம்சீரவஸநம்" என்றும்.

(௩) "நஹிதேராஜபுத்ரம்தம் காஷாயாம்பரதாரிணம் வரிஹோக்தும்வ்யவஸ்யந்தி பௌராதெயம்தர்மவத்ஸலம் - நஹிதே ராஜபுத்ரந்தம் காஷாயாம்பரதாரிணம் । பரிபோக்தும் வ்யவஸ்யந்தி பௌராவைதர்மவத்ஸலம்" அருகேயிருக்கச்செய்தேயு மிவனைச் சூழவிருக்கிற பௌரரானவர்கள் இவனை யநுபவிக்கையிலே நசையற்றார்கள். அதுக்கடி யென்னென்னில் [ராஜபுத்ரம்] பெருமாள் பேரநின்றவநந்தரம், "முடிந்தவன்மகனன்றோ, இவனேதான் நமக்குத்தொங்கப்புகுகிறான்" என்றிருந்தார்கள். [யதேவதர்ம - தர்மவத்ஸலம்] இதுக்கு மவனோடொக்கும்; தர்மத்துக்காகத் தன்னை யழியமாறினானிறே அவன்; (௪) [ஸஹிஸ்வஸ்திவேஸாயதர்ம - ஏபிஸ்சஸஸிவைஸ்ஸார்த்தம்] தானொருவனுமே போகவமைந்திருக்க, ஆர்த்தர்பலரையுங் கொண்டுபோனான்; அதுக்கடி - "நாமொருவரு

(க) ரா-யு ௧௨௭-௪ (உ) ரா-அயோ-௧௦௦ ௧,
(௩) ரா-யு ௧௨௮-௩௪ (௪) ரா-அயோ-௧௦௪-௧௨

மேயன்றிக்கே, பலர் கண்ணநீர்கண்டால் மீளாரோ" என்னுமத்தைப்பற்ற; விளைசெய்யப் போவாரைப்போலே ஆனைகுதிரைகளை யகப்படத் திரட்டிக் கொடுபோனுறுபிற்று. பிரிவாற்றாமைக்குத் தன்னிற்குறைந்தா ரொருவருமில்லையாயிற்றுப் பரிகாரத்தில்; [ஶிரஸா யாசதோ தஸ்ய-ஶிரஸாயாசிதோமயா] நான் தலையாலேயிரந்தகார்யத்தையும் மறுப்பரோ. (க) "ஶிரஸாயா வசஸ்தஸ்ய வசநம்நக்ருதம்மயா" என்றாரிறே அவரும் - "அவனும் தனக்கடுக்கும்படிசெய்தான், நாமும் நமக்கடுக்கும்படி செய்தோம்," என்றாரிறே. "அவன் தலையாலே யிரந்தகார்யத்தை மறுத்துப்போந்தோம்" என்றிறே அவர்திருவுள்ளம் புண்பட்டது [ஹ்ரா தா:-ப்ராது:] (உ) "ஹ்ராதாஸ்வாமூர்த்திராத்மந: - ப்ராதாஸ்வாமூர்த்திராத்மந:" என்கிறபடியே, அவர் தந்திருமேனியாக வன்றோ வென்னை நினைத்திருப்பது; சேஷம்பூர்வத். இப்படி யிக்குடியிலில்லாத வேற்றங்களையுஞ் செய்து. "மூத்தாரிருக்க விளையார் முடிசூடக்கடவதன்று" என்றுபோந்தவித்தனைமுன்பு. ஆற்றாமையும், கண்ணும் கண்ணநீருமாய், ஜடையும் புனைந்து வல்கலையுமுடுத்திருந்தாரில்லையிறே முன்பிவனையொழிய.

(நின்தீர்த்தவடிமைக்குற்றேவல்செய்து) தன்னுடைய ரஸ்யதையாலே இதரபுருஷார்த்தத்தில் நசையறுக்கவல்ல வடிமைகளிலந்தரங்கமானவடிமைகளைச் செய்து. (உன்பொன்னடிக்கடவாதே) தன்சாபலத்தாலே நிர்ப்பந்திக்குமதுவுமன்றிக்கே. முன்பு பெரியவாற்றாமையோடே ஸ்ரீவஸிஷ்டபகவான் தொடக்கமானாரைப்புருஷகாரமாகக்கொண்டு மீட்பதாகச் சென்றவன், "நாம் ஐயர் சொன்ன கார்யம் செய்தோமான நிறம்பெறலாவது, நீர் பதினாலாண்டு ராஜ்யத்திலேயிருக்கில்காணும்" என்ன; (ங) "ஶ்ரோஹம்ஸ ரூஷ்ட: ஆருரோஹரதம் ஹ்ருஷ்ட:" என்று ஹ்ருஷ்டனாய் மீண்டுபோந்தானிறே; அப்படியே, உன்னுடைய வாஜ்ஞாதிலங்கநம் பண்ணாதே. உன் திருவடிகளைத்தப்பாதே; அன்றியே, உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளையல்லதறியாதே யென்னுதல். அதாவது - அநந்யப்ரயோஜநனுகை.

(க) ரா-யு-கஉ-க-கூ (உ) மநுஸ்ம்ருதி

(ங) ரா-அயோ-ககங-க.

(வழிவருகின்ற வடியரோர்க்கருளி) அடிமைமுறை தப்பாதே போருகிற அநந்யகதிகளான வெங்களுக்கு க்ருபையைப்பண்ணி. (நீயொருநாளித்யாதி) அந்தஸ்வபாவ மொருநாளிலேயாய்ப் பின்பு வற்றுமதோ. அப்ரதிஷேதத்துக்கு மேற்பட ருசியிலையோ. குணாகுணநிரூபணம் பண்ணாதே யெல்லார்தலையிலும்வைத்த திருவடிகளை, ஆசையுடைய வென்தலையிலும் வைக்கலாகாதோ. (படிக்களவாக) பூமியை விளாக்குலைகொள்ள விஞ்சவளருமதிலு மரிதுபோலேகாணும், அதுக்களவாகத் திருவடிகளைக் குறைசதாங்கினவருமையும், உனக்கரியதொன்றாய் நான்க்லேசப்படுகிறேனோ; இத்தனையன்றோ செய்யவேண்டுவது. (நின்பாதபங்கயமே) ஒருசெவ்விப்பூவைக் கொண்டுகொணும் காடுமோடையுமளந்துகொண்டது. (தலைக்கணியாய்) ஏதேனுமாகக்கொள்ள நினைத்தகார்யத்துக்களவாக்குமித்தனையாயிருந்ததிறே; பூமிக்களவாக்கின திருவடிகளை யென்தலைக்களவாக்கலாகாதோ. (தலைக்கணியாய்) (௧) "கோலமாமென்சென்னிக்கு" என்றிருப்பார் தலையில்வைக்கலாகாதோ.(உ)"கூடா-கதா" என்கிறார்.

(கோடியித்யாதி) (௩) [ஸாராஸஹஸ்ர தந்த வீதஸோகாராஸஸ்ரோகே ந ஸநதஸோகா-ஸாராமஸங்கீர்த்தந வீதஸோகாராமஸ்யஸோகே ந ஸமாநஸோ கா] பெருமாளுடைய ஸத்பாவத்தில ஸிம்ஹஸைகயாலேயு மொருஸோகமுண்டு, பிரிவாற்றாமையாலே படுகிறது மொருஸோகமுண்டு; அதில், திருவடியைக் கண்டபின்பு ஒன்று தீர்ந்ததிறே: அப்படியே, ஸம்ஸாரக்ஷிதமாய் ப்ரமஹரமான தேசத்திலே கண்வளர்ந்தருளப் பெற்றது, "என்வருகிறதோ" என்கிற பயந்தீர; இனியென்னை விஷயீகரிக்குமதுவேகுறை, அக்குறையுந் தீர்த்தருளவேணும். (உ)

## மூன்றாம்பாட்டு.

கிடந்தநாள்கிடந்தாயெத்தனை காலங்கிடத்தி யுன்திருவுடம்பசைய * தொடர்ந்துகுற்றேவல்செய்து தொல்லடிமை வழிவருந்தொண்டரோர்க்கருளி, * தடங்கொள் தாமரைக்கண்விழித்து நீயெழுந்துன்தாமரைமங்கையும்நீயும்* இடங்கொள் மூவுலகுந் தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக் கிடந்தானே. (௩)

---

(௧) ச-௩-உஉ- (உ) ஸ்தோ. ர- (௩) ரா-ஸு-ய-௩௬-௭

ப:—அநந்தரம், திருமேனியசையும்படி யெப்போதுங் கண்வளர்ந் தருளாதே, அடியோங்கள் கண்டநுபவிக்கும்படியாகப் பிராட்டியோ டேகூட வுணர்ந்தெழுந்தருளியிருக்க வேணுமென்கிறார்,

(இ - ள்.) திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தானே - ஆஸ்ரிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே, அபேக்ஷா பரதந்த்ர னாய்க்கொண்டு, கிடந்தநாள்-கண்வளர்ந் தருளுகிறவன் றுதொடக்கமாக கிடந்தாய்-இப்படி யொருப்படிப்படக் கண்வளர்ந்தருளினாய், உன், திரு வுடம்பு-திருமேனி, அசைய-அசையும்படி, எத்தனைகாலம்-இன்னமெத் தனைகாலம், கிடத்தி-கண்வளர்ந்தருளக்கடவை, இனி, தொடர்ந்து - எங்களபேக்ஷைக்காக வுன்னை யநுவிதாநம் பண்ணிச்சென்று, குற்றே வல்-அந்தரங்கவ்ருத்தி, செய்து - பண்ணி, தொல்-அநாதிஸித்தமான, அடிமைவழி-ஶேஷத்வமார்க்கத்திலே, வரும்-வருவோமாய், தொண்ட ரோர்க்கு - உனக்கே சேஷமாம்படி யநந்யகதிகளான வெங்களுக்கு, அருளி - இரங்கி, தடம்-தடத்தை, கொள் - கொள்ளும்படிபெருத்த, தாமரை - தாமரைபோன்ற, கண் - திருக்கண்களை, விழித்து பரக்க விழித்து, நீ, எழுந்து - படுக்கையினின்றுமெழுந்து, உன் - உனக்கநபாயி நியாய், தாமரை - பூவிற்பிறப்பாலுண்டான போக்யதையையும், மங் கையும் - பருவத்தையு முடையளானலக்ஷ்மியும், நீயும்-நீயும், இடங் கொள்மூவுலகும் - விஸ்தீர்ணஜகத்த்ரயமும், தொழ-அநந்யப்ரயோஜந ரோபாதி கண்டநுபவிக்கும்படி, இருந்தருளாய் - இருந்தருளவேணும்.

ஆறு;—(கிடந்தநாள்) இங்ஙனே யொருபடியே கண்வளர்ந்த ருளுகிறபிரானே, உன் திருவுடம்புநோவாதோ; உன் திருவுடம்புநோ வாதே உன்னடியேனை வெனக்காக நீயொருநாள், தாமரைத்தடம் மலர்ந்தாப்போலே திருக்கண்களை விழித்து எழுந்திருந்து உன் தாம ரைமங்கையும்நீயும், இந்தலோகமெல்லாம் வாழும்படி யிருந்தருளா யென்கிறார். (௩)

ஈடு; அவ:—திருவுடம்பசைய வொருபடியே கண்வளர்ந்தரு ளாதே, அடியோமுக்காகப் பிராட்டியும் தேவரு மெழுந்திருந்தருள வேணுமென்கிறார்.

(கிடந்தநாள்கிடந்தாய்) (க) "கிடந்ததோர்கிடக்கை" என்று கிடையழகுகாணவேணுமென் றாசைப்பட்டிருப்பா னொருவனுக்கா

(க) திருமாலை-

க, ஆசைப்பட்டவன்று தொடங்கிக் கண்வளர்ந்தருளினாய். (எத்தனைகாலங்கிடத்தி) இனியொருவன்வந்து (க) "கிடந்தவாறெழுந்திருந்துபேசு" என்னுமளவுங்கிடக்கு மித்தனையிறே. எல்லாசேஷ்டிதங்களும், (உ) "ஸகா நாத-பக்தாநாம்" என்றிருக்கை தவிராதிறே. (உன்திருவுடம்பசைய) ஸுகுமாரமான திருமேனியலசும்படி. ஆர்த்திகளையேபார்க்குமித்தனையோ, உன்னையும் பார்க்கவேண்டாவோ.

(தோடர்ந்து குற்றேவல்செய்து) "இத்தசையில் செய்யவடுப்பதிது, இத்தசையில் செய்யவடுப்பதிது" என்றுணர்த்தி, அந்தரங்கவ்ருத்தியைப்பண்ணி. பெருமாள், தமக்கபிமதங்களிலவஹிதரன்றிக்கே யிருந்தபோதும், "இவ்வடிமையைக் கொண்டருளவேணும், இவ்வடிமையைக் கொண்டருளவேணும்" என்று அவ்வவகாலந்தோறும் (ரு) "ஶாலஷ ஶாலஷ-மாம்வத, மாம்வத" என்று வடிம்பிட்டடிமை செய்தாப்போலே, அந்தரங்கவ்ருத்திகளைப்பண்ணி. (தோல்லடிமை) ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமான அடிமையாகையாலே பழையதாய்ப்போருகிற (ச) "ஆவிஸ்யுர்மமஸஹஜ கைங்கர்யவிதய:" என்னக்கடவதிறே. (வழிவருந் தோண்டரோர்ககருளி) அடிமைமுறை தப்பாமேபோருகிற அநந்யகதிகளான வெங்களுக்குக்ருபைபண்ணி. இம்மூன்று பாட்டிலும், தம்முடைய யோக்யதையைச் சொன்னப்போலேயிறே யிருக்கிறது; அதன்றுசொல்லுகிறது "ஒருவர்க்கேயாயிருப்பாரை வேறுமுகம பாராபாரிலலே" என்று தம்முடைய சொல்லுகிறார்.

(தடங்கோள் தாமரைக்கண்விழித்து) பொய்கையைக்கண்செறியிட்ட தாமரைபோலே. இடமுடைத்தான திருக்கண்களாலே குளிரநோக்கி. (நீயெழுந்து) நீயெழுந்திருந்து (ரு) "சீரியசிங்கமறிவுற்று" என்கிறபடியே, உணர்ந்தருளும்போதை யழகு காணவேணும். (உன்தாமரைமங்கையும்நீயும்) "பகவத்விஷயத்தில் முதலடியிடுவார் பிராட்டி புருஷகாரமாகப் பற்றக்கடவது" என்னுமத்தாலே. "பங்கயத்தாள் திருவருள்" என்றார்கீழ்; அடிமைசெய்யுமிடத்திலு மிருவருமானசேர்த்தியிலே யடிமைசெய்வதாகச் சொல்லிப்போரு மத்தைப்பற்றச் சொல்லுகிறதிங்கு

(க) தி-ச-வி-கூக. (உ) ஜிதந்தை- (ரு) ரா-ஆ-க(

(ச) அஷ்டஶ்லோகி- (ரு) திருப்பாவை-

(இடங்கோள் மூவுலகும்) இடமுடைத்தான ஸகலலோகங்களிலுள்ளாரும். (தொழவிருந்தருளாய்) அநந்யப்ரயோஜநரைப் போலே முறையிலேதொழ நீயிருக்குமிருப்பை நான்கண்டநுபவிக்கவேணும். (திருப்புளிங்குடிக்கிடந்தானே) நீ ஸாலபணையின்பு, எல்லாம் ... அபே...

ஞால், அதிலேகதேசஞ்செய்தால், குறையுஞ்செய்து தலைக்கட்டவேண்டாவோ. (திருப்புளிங்குடிங்கிடந்தானே - இருந்தருளாய்) சாய்ந்தருளின வழகுகாட்டினாய், இருந்தருளினபோதை யழகையுங்காட்டியருளாய். (௩)

## நான்காம்பாட்டு.

புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று * தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே யென்னையாள்வாயெனக்கருளி* நளிர்ந்தசீருலகம் மூன்றுடன்வியப்ப நாங்கள்கூத்தடிநின்றார்ப்ப * பளிங்குநீர்முகிலின் பவளம்போல் கனிவாய்சிவப்பநீகாணவாராயே, (௪)

ப:—அநந்தரம் ஆஸ்ரிதார்த்தமாகக் கிடந்திருந்து நின்று என்னையடிமைகொண்ட தர்ஸநீயமான வடிவோடேகூட நான் காணும்படி வரவேணு மென்கிறார்.

(இ - ள்.) புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்து - கண்வளர்ந்து, வரகுணமங்கை - திருவரகுணமங்கையிலே, இருந்து - இருந்து, வைகுந்தத்துள் - ஸ்ரீவைகுண்டத்திலே, நின்று - நின்று, தெளிந்த - "இவைநமக்காகப் பண்ணின வ்ருத்திகளிறே" என்று தெளிந்த, என் - என்னுடைய, சிந்தையகம் - நெஞ்சுக்குள்ளே நின்று, கழியாதே - போகாதே; உன்னுடைய சீலாதிகுணங்களை ப்ரகாசிப்பித்து, என்னை - என்னை, ஆள்வாய்-அடிமைகொண்டவனே, எனக்கு-எனக்கு,அருளி-விஸேஷகமாகக்ருபைபண்ணி, உன்னுடைய, நளிர்ந்த - சீதளமான சீர்-சீலாதிகளை, உலகமூன்று - லோகத்ரயமும், உடன் - ஏககண்டமாய்க்கொண்டு, வியப்ப -"ஓராஸ்ரிதபக்ஷபாதமே" என்று விஸ்மயப்படும்படியாகவும்; நாங்கள் - அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு காணவிருக்கிற நாங்கள், கூத்தாடி- ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரம ந்ருத்தம்பண்ணி

நின்று-நின்று, ஆர்ப்ப - ஆர்ப்பரவம்பண்ணும்படியாகவும், பளிங்கு - தெளிந்த, நீர் - நீராலே நிறைந்த, முகிலின் - காளமேகத்திலே, பவளம் போல் - பவளக்கொடிபடர்ந்தாப்போலே, கனி - ஸ்நிக்தமானநிறத்தை யுடைத்தான, வாய் -திருவதரம், சிவப்ப-சிவந்துதோன்றும்படி, காண - நாங்கள்கண்டநுபவிக்கும்படியாக, நீ-நீ, வாராய் - நடந்துவந்தருளவே ணும். (ச)

ஆறு;—(புளிங்குடி) உன்னுடைய காருண்யத்தினாலே யெனக் காகப் புளிங்குடிக்கிடந்து, வரகுணமங்கையிருந்து, வைகுந்தத்துள் நின்று. தெளிந்தவென்சிந்தை யகங்கழியாதே யென்னையடிமைகொ ண்டருளினாப்போலே, இன்னமு முன்னுடைய பரமகாருண்யத்தி னாலே சோதிவாய்திறந்து, தாமரைக்கண்களாலேநோக்கி, திருவடி களை யென்தலையிலேவைத்தருளி, பிராட்டியோடேகூட விருந்த ருளி, "ஆழ்வாரபேக்ஷிதத்தைச் செய்தருளினான்" என்று இந்த கல்யாணகுணத்தைக்கண்டு லோகமெல்லாம் விஸ்மயப்பட நாங்கள் கூத்தாடி நின்றாரவாரப்பட, நிறமுகிதான மேகத்திலே யுண்டான பவளம்போலே யழகியதிருப்பவளத்தில் சிவப்போடே காணலாம் படி நீவரவேணுமென்கிறார். (ச)

ஈடு-அவ;—திருப்பதிகளிலே ஸந்நிஹிதனா யென்னை யிவ்வளவாக்கினாப்போலே, மேலுமென்னபேக்ஷிதஞ்செய்தருளவேணுமென் கிறார்.

(புளிங்குடியித்யாதி) நானிரக்கவோ விளைவெல்லாம் நீசெய்த து. பட்டர், திருநாராயணபுரத்தில் வெறுப்பிலே, "தேவர்ஸ்வாதந் த்ர்யமெல்லாங்காட்டினாலும் பின்னையும் பண்ணின விஶ்வாஸத்தில் குலைத்தலின்றிக்கே யிருக்கும்படி எனும்புரமுடைய வெம்பெருமா னார்போல்வார்பக்கல் செய்யுமத்தை எளியெனுப்பனை வடியேன் பக்கலினும் செய்வதோ, (க) "ஹாவிஶ்வாஸ-ஹ்ருவக்ஷ-மஹாவி ஶ்வாஸபூர்வகம்" என்கிறபடியே, ஏதேனுமொன்று வந்தாலும் 'இங் குத்தைக்கொன்று வருவதாய்வந்ததன்று, இதுக்கடி நம்முடையபா பம்' என்று பண்ணினவிஶ்வாஸம் குலையாதார் விஷயத்திலே செய் யுமத்தை இதுதானே ஹேதுவாக நெஞ்சுநெகிழும்படி யிளநெஞ்சர் பக்கலிது மத்தைச்செய்யக்கடவதோ" என்றாராம்.

(க) விஷ்வக்-ஸம்ஹி.

திருப்புளிங்குடியிலே (க) "கிடந்ததோர்கிடக்கை" என்னு மழகைக்காட்டியும், வரகுணமங்கையிலே (உ) "பிரானிருந்தமை காட்டினீர்" என்னுமிருப்பழகைக்காட்டியும், ஸ்ரீவைகுண்டத்திலே (ந) "நிலைபாரநின்றான்" என்னும் நிலையழகைக்காட்டியுமன்றோ வென்னைப்புகுரநிறுத்திற்று. (தெளிந்தவென்சிந்தை யகங்கழியாதே) "அயோக்யன்" என்றகலாதபடி * கண்கள்சிவந்திலே என் ஹ்ருதயத்தைத் தெளிவித்தும் அத்தைக்கைவிடாதே நிரந்தரவாஸம்பண்ணி. (என்னையாள்வாய்) என்னை "அயோக்யன்" என்றகலவுமொட்டாதே பிரிவாற்றாமையால் முடியவுமொட்டாதே, குணஜ்ஞானத்தாலே தரிப்பித்துக் கொண்டுபோந்தாய். (எனக்கருளி) புறம்புபோகாதபடி வளைத்து நீயும் ஜீவநமிடாவிட்டா லெங்ஙனே தரிக்கும்படி.

(நளிர்ந்தவீத்யாதி) அநுஸந்தித்தார் ஹ்ருதயம் குளிரும்படியான சிலகுணத்தை. "ஆழ்வாரபேக்ஷிதஞ்செய்தருளினான்" என்கிற கல்யாணகுணத்தை (உலகம்மூன்றுடன்வியப்ப) விலக்ஷணரோடு அவிலக்ஷணரோடுவாசியற வெல்லாருமொக்கவநுபவித்து விஸ்மயப்படும்படியாக. (நாங்களித்யாதி) நாங்கள் விஸ்மயப்படுமளவன்றிக்கே, விக்ருதராம்படி. இவர்க்கு விஸ்மயப்படவவஸரமில்லையாயிற்று.

(பளிங்குநீர் முகிலின்பவளம்போல் கனிவாய்சிவப்ப) தெளிந்தநீரை முகக்கையாலே தர்ஶநீயமான மேகமானது பவளத்தைப் பூத்தாப்போலேயாயிற்று திருவதரத்தில் பழுப்பிருப்பது. இவர் ஸம்ப்ரமத்தைக்கண்டு அவன்பண்ணும்ஸ்மிதமிருக்கிறபடி. (நீகாண வாராயே) என்னெனிரோ யுன்னழகுகாணவரவேணும். அவன்கூத்திருக்கிறபடி அவன்மாறிமாறியிடும்படி, வல்லாரடிணுப்போலே காணுமிருப்பது.

பிள்ளையழகியமணவாளவரையரைப் பெருமாளொருநாளருளப்பாடிட்டு, "நாமிங்ஙனே நடக்கிறோம், நீயிதுக்கீடாக ஆடிக்காண்" என்ன; "தம்பிரானே, என்னாலந்நடைக்கீடாக ஆடப்போமோ, (௪) [நாணகம்படியுலாவியுலாவியித்யாதி] தேவருடைய நுழலோசையைக் கேட்டவாறே, பாடல்தவிர்ந்தார்கள், தேவருடைய ஸ்வாபாவிக

(க) திருமாலை-உந-  (உ) ௬-ரு ரு-
(ந) திருமொ-௬-௬-அ.  (௪) பெரியா-தி-மொ-ந-௬ ௪.

மானநடைக்குத் தங்களுடைய சிக்ஷாபலத்தாலுண்டான ஆடல்தவிர்ந்தார்கள்; குரக்குக்கைகொடுகூழ்துழாவி அடியேன் தேவர்திருமுன்னே ஆடவல்லேனோ" என்றாராம். (ச)

# ஐந்தாம்பாட்டு.

பவளம்போல் கனிவாய் சிவப்ப நீகாண வந்து நின்பன்னிலா முத்தம் * தவழ்கதிர் முறுவல் செய்து நின்திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய் * பவளநன் படர்க்கீழ்ச் சங்குறை பொருநல்தண் திருப் புளிங்குடிக்கிடந்தாய் * கவளமாகளிற்றினிடர் கெடத்தடத்துக் காய்சினப் பறவை யூர்ந்தானே.

ப:—அநந்தரம், என்முன்னே யெழுந்தருளி வந்து மந்தஸ்மிதம் பண்ணிக்கொண்டு நின்றருளவேணுமென்கிறார்.

(இ-ள்.) பவளம் - பவளத்தினுடைய, நன் - செறிந்த, படர்க்கீழ்- பாரத்தின்கீழே, சங்கு - சங்குகளானவை, உறை - வர்த்திக்கும்படியான, பொருநல் - திருப்பொருநலையுடைய, வண் - ப்ரமஹரமான, திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தாய் - கண்வளர்ந்தருளினவனாய், கவளம் - கவளங்கொள்கையே ஸ்வபாவமான, மா - பெரிய, களிற்றின் - கஜேந்த்ரனுடைய, இடர் - ஆயிரம்தேவஸம்வத்ஸரம் நீராஹாரனாய் நின்றுக்லேசித்ததுःகம், கெட - போம்படியாக, தடத்து - அந்தத்தடாகத்திலே, காய் - விரோதிவிஷயத்திலே வெவ்விய, சினம் - சீனத்தையுடைய, பறவை - பெரியதிருவடியை ஊர்ந்தானே - நடத்திக்கொண்டுவந்தவனே, பவளம்போல் - திருப்பொருநலில் பவளப்படரும் சங்கும் செறிந்தாப்போலே, கனி - ஸ்நிக்தமான, வாய் - திருவதரமானது, சிவப்ப - சிவந்துதோன்ற, நின் - உன், பல்-பல்லாய், நிலாநிற்கிற, முத்தம் - முத்தம்பார்க்கில், கதிர் - கதிரை, தவழ் - உடைத்தாம்படி, முறுவல்செய்து - முறுவல்செய்துகொண்டு, ஸ்ரீகஜேந்த்ரன் முன்புவந்தாப்போலே, காண - காணுங்காணும்படி, நீ-நீ, வந்து ஸத்வரனாய்வந்து, நின் - உன்னுடைய, திரு - அழகிய, கண் - திருக்கண்களாகிற, தாமரை - தாமரையானது, தயங்க - விளங்கும்படி, நின்றருளாய் - ப்ரீதிதோன்ற நின்றருளவேணும்; படர்-பற்றை. (ரு)

ஆறு;— (பவளம்போல்) வருமிடத்தில், ஸ்ரீகஜேந்த்ராழ்வா னுக்காகப் பெரியதிருவடிமேலேறி வந்தருளினப்போலே, கனிவாய் சிவப்ப நீகாணவந்து நின்பன்னிலாமுத்தந்தவழ் கதிர்முறுவல்செ ய்து நின்திருக்கண் தாமரைதயங்க நின்றருளாயென்கிறார். (ரு)

ஈடு-அவ;—ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோற்றினப்போ லேவந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

(பவளமித்யாதி) (க) "அவாக்யநாதர: - அவாக்யநாதர:" என்கிறபடியே, ஒன்றுக்கும் விக்ருதனுகாதநீ, அநுகூலதர்ஸநத்தா லே யகவாயில் பந்தந்தோற்ற விக்ருதனாய் ஸ்மிதம்பண்ணிநிற்கும் படியைக் காணவேணும். (நின்பன்னிலாமுத்தம்) பல்லாகிற நிலா வையுடைய முத்துநிரையானது. (தவழ்கதிர் முறுவல்செய்து) (கதிர் தவழ்- முறுவல்செய்து) கதிருள்ளடங்காதே புறம்பேதவழும்படி. முத்தத்திலே பன்னில்லாக்கதிர் தவழும்படி. முத்தம்-அதரம். கதிர் புறப்படும்படி முறுவல்செய்து. (நின்திருக்கண்தாமரைதயங்க நின் றருளாய்) கண்ணினுடைய ஸம்ருத்தமிருக்கிறபடி. தயங்குகைபாவது அப்போதுபிறந்தவொளியாதல், கடல்சலித்தாப்போலே யசைந்து வருகிறபடியைச் சொல்லிற்றாதல். (நின்றருளாய்) முந்துறநாலடிவந் து, பின்னையதுவும் மாட்டாதே ஸ்தப்தனாய்நிற்கும் நிலைகாணவே ணும்.

(பவளமித்யாதி) நல்லபவளப்படரின்கீழே சங்குகள் நிர்ப்பாத மாய்வர்த்திக்கிற திருப்பொருநலை யுடைத்தாய், ஸ்ரமஹரமான திருப்புளிங்குடியிலேகண்வளர்ந்தருளுகிறவனே.படர்- தூறு.அவ்வூ ரில் பதார்த்தங்களுக்கு, பாதகத்துக்கு பயப்பட்டுவர்த்திக்குமதில் லையாயிற்று. அத்தேஸஸ்வபாவமிதுவாயிருக்க, "எனக்குஉன்னைக் கிடைக்குமோ, கிடையாதோ" என்று நான் பயப்படும்படியிருக்கிற தென்.

(கவளமித்யாதி) கவளங்கொண்டிருப்பதான பெரியவானை; கவ ளங்கொண்ட வென்றவித்தால் - மதமுதிதமென்கை. இதுக்கு முன்பு இடர்பட்டறியாதவானை. (இடர்கெட) (உ) "வாராயென்னு ரிடர்நீக்காய்" என்று, தன்வாயாலே "ஆரிடர்" என்னும்படியிறே

(க) சாந்தோ:ங-கச- (உ) சிறியதிரு-

பட்டவிடரின்கனம். (௧) "ஆனையின்துயரம்" என்று நெஞ்சுளுக்கும்படியிறேபட்டது. (தடத்து) தன்னிலமல்லாத பொய்கையிலே க்ஷுத்ரபதார்த்தத்தின் கையிலே யகப்பட்டு ப்ரதிக்ரியையின்றிக்கேயிருக்கும்படியான வாபத்துப்போம்படியாக. தடமென்று - கரைக்கும், பொய்கைக்கும்பேர். (காய்சினப்பறவையூர்ந்தானே) ப்ரதிபக்ஷத்தைக்காயுஞ்சினத்தையுடைய பெரியதிருவடியை, அவன்வேகம்போராமை அவனைப்ரேரித்துக் கொண்டுவந்து தோற்றிற்றிலேயோ. அவ்வானையின் தசைகிடாயென்தசை; அதுக்குத்தோற்றினாப்போலே யென்முன்னேவந்து தோற்றியருளவேணும். (௫)

---

## ஆறும்பாட்டு:

காய்சினப்பறவை யூர்ந்து பொன்மலையின் மீமிசைக்கார்முகில்போல் * மாசினமாலி மாலிமானென்றங் கவர்படக்கனன்று முன்னின்ற * காய்சினவேந்தே கதிர்முடியானே கலிவயல்திருப்புளிங்குடியாய்* காய்சின வாழிசங்குவாள் வில்தண்டேந்தி யெம்மிடர் கடிவானே.

ப:—அநந்தரம், உகவாதார் முன்னே யகப்படப் பெரிய திருவடியை மேற்கொண்டு சென்று நின்றநீ, உகந்துகாணவாசைப்பட்ட வென்முன்னேயப்படி அவனைமேற்கொண்டுவந்து நின்றருள வேணுமென்கிறார்.

(இ - ள்) பொன் - கநகமயமான, மலையின் - மஹாமேருவின், மீமிசை - மேலேபடிந்த கார்முகில்போல - காளமேகம்போலே, காய்-விரோதிவிஷயத்திலே வெவ்விய, சினம் - சீற்றத்தையுடைய, பறவை-பெரியதிருவடியை, ஊர்ந்து - நடத்திக்கொண்டு, காய் - ப்ரதிபக்ஷங்களிலே காலாக்நிகல்பமான, சினம் - சினத்தையுடைய, ஆழிசங்குவாள் வில்தண்டு - ஸ்ரீபஞ்சாயுதத்தையும், ஏந்தி - ஏந்தி, மா - பெரிய, சினம் - சினத்தையுமுடைய, மாலி - மாலி, மான் - மஹானான, மாலி - ஸுமாலி, என்று - என்றுப்ரஸித்தரான, அவர் - அவர்கள், அங்கு - அந்த யுத்தபூமியிலே, பட - நசிக்கும்படி. (உ) "க்ரோதமாஹாரயத் தீவ்ரம்... காலாக்நிஸத்ருஶக்ரோதே" என்கிற கணக்கிலே, கனன்று - பெரிய

(௧) தி-மொ-உ-௩-௧ (உ) ரா-பா-௧

சிற்றத்தோடே, முன் - உதவாதார் முன்னே, நின்ற - இவ்வழகைக்காட்டி நின்றவனாய், (க) "அங்கருளில்லாத்தன்மையாளன்" என்னும் கணக்கிலே, காய் - விரோதிகளுக்கு தாஹகமான, சினம்-க்ரோதகுணத்தையுடைய, வேந்தே - ஸ்வாமியாய், கதிர் - விரோதிவர்க்கம்மடிகையாலே யொளிவிடுகிற, முடியானே-திருவபிஷேகத்தையுடையவனாய், ஆஸ்ரிதார்த்தமாக, கலி - ஸம்ருத்தமான, வயல்-வயலையுடைய, திருப்புளிங்குடியாய்-திருப்புளிங்குடியிலே வர்த்திப்பானாய், அவ்வழியாலே, எம் - எங்களுடைய, இடர் - அநுபவாலாபரூபமான து:கத்தை, கடிவானே - கழிக்கக்கடவனாயிருக்கிறவனே.

அந்த வாஹநத்தோடு மாயுதங்களோடும் திருவபிஷேகத்தோடும் நான்காணும்படியாகவந்து நின்திருக்கண்தாமரைதயங்க நின்றருளாயென்று கீழேயந்வயம். (௬)

ஆறு ;—(காய்ச்சினப்பறவையூர்ந்து) உம்முடைய மநோரதங்களுக்கு ப்ரதிபந்தகங்களில்லையோ, ஸஹஸா முடியுமோவென்னில்;

என்னுடைய மநோரதப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்காகவன்றோ, சங்க சக்ர கதா ஸார்ங்காதி திவ்யாயுதங்களை யேந்தியருளியிருக்கிறது ; ஆனபின்பு, பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே காய்சினப்பறவையூர்ந்து, மாலி ஸுமாலி மால்யவத்ப்ரப்ருத்யஸுர நிரஸநம் பண்ணியருளினாப்போலே இந்த ப்ரதிபந்தகத்தையும் நீயேபோக்கி யென்னுடைய மநோரதத்தையும் முடித்தருளவேணுமென்கிறார். (௬)

ஈடு-அவ;—உம்முடைய வபேக்ஷிதங்கள் செய்யவொண்ணாதபடி ப்ரதிபந்தகங்கள் ப்ரபலமன்றோவென்னில்; மாலி, ஸுமாலி, மால்யவான், இவர்களிலும் வலிதோ வென்ப்ரதிபந்தகமென்கிறார்.

(காய்சினப்பறவையூர்ந்து) ப்ரதிபக்ஷத்தி லனக்குக் கண்ணோடிலும் கண்ணற்றறழியச்செய்யும் பெரியதிருவடியை நடத்தி. (பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போல்) அப்போதிருக்கும்படி. மேருவைக்கினிய காளமேகம் படிந்தாப்போலேயாயிற்றிருப்பது இப்போதிது சொல்லுகிறது - பெரியதிருவடி முதுகிலிருப்பைக் காண்கைக்காக. (மாசினமாலி) பெரியசினத்தை யுடையனாய்க்கொண்டுவந்த மாலி. (மாலிமான்) மஹானான மாலி. ஸுமாலியென்றபடி. (என்றங்

(க) திருநெடு-௬-

கவர்பட)என்கிறவர்களங்கே முடியும்படியாக. (கனன்றுமுன்னின்ற) சீறி, அவர்கள்முன்னேநின்ற; வடிவைக்கண்டபோதே யெதிரிகள் முடியும்படியாயிறே வீரமிருப்பது.

(காய்சினவேந்தே) திருநாமம். காயுஞ்சினத்தையுடைய நிர்வாஹகனே. (கதிர்முடியானே) விளங்காநின்ற திருவபிஷேகத்தை யுடையவனே. நீ ரக்ஷணத்துக்கு முடிசூடியிருக்க, நானிழக்கவோ. (கலிவயல் திருப்புளிங்குடியாய்) நீ ஸாரஸ்த்தனுய்த்தானிழக்கிறே னே, ஸம்ருத்தமானவயலை யுடைய திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே. (காய்சினவாழியித்யாதி) காயுஞ்சினத்தையுடைய திருவாழிமுதலான திவ்ய யுதங்களை தரித்தது ஆஸ்ரிதருடைய வாபத்தைப் போக்குகைக்காகவன்றே. "எம்மிடர்கடிவானே-திருக் கண்தாமரைதயங்கநின்றருளாய்" என்று கீழ்ப்பாட்டிலே யிப் பாட்டுக்கு க்ரியை. (௬)

# ஏழாம்பாட்டு.

எம்மிடர்கடிந்திங்கென்னை யாள்வானே யிமையவர்தமக்கு மாங்கனையாய் * செம்மடல்மலருந் தாமரைப்பழனத்தண் திருப்பு ளிங்குடிக்கிடந்தாய் * நம்முடையடியர் கவ்வைகண்டுகந்து நாங்க ளித்துளநலங்கூர* இம்மடவுலகர்காணநீயொருநாளிருந்திடாயெங் கள்கண்முகப்பே. (எ)

ப:—அநந்தரம், அளவிலிகளான வெங்களோடு, அளவுடையா ரோடு வாசிபற ரக்ஷகனுன நீ, அஸாதாரணஶேஷபூதரான ஸூரிகளனு பவிக்கிற சீர்த்தியைக்கண்டு நாங்களுகக்கும்படி யெங்கள் கண்முகப் பேயிருந்தருள வேணுமென்கிறார்.

(இ-ள்.) எம்-எங்களுடைய, இடர்-அவித்யாதி க்ருதமான ஸகல து:க்ங்களையும், கடிந்து-போக்கி, இங்கு-இந்த பூமியிலே வைத்து, என்னை-என்னை ஆள்வானே-அடிமைகொண்டு போருமவ னுய், இமையவர்தமக்கும்-அநிமிஷரான ப்ரஹ்மாதி தேவர்களுக்கும், ஆங்கு-அங்கு, அனையாய்-அப்படி அநிஷ்டநிவ்ருத்தி பூர்வகமாக இஷ்டப்ராப்தியைப் பண்ணிக்கொடுத்து ரக்ஷிக்குமவனுய், செ-சிவந்த, மடல்-இதழ், மலரும்-மலருகிற, தாமரை-தாமரையையுடைத்தான,

பழனம் - நீர்நிலங்களையுடைய, தண் - குளிர்ந்த, திருப்புளிங்குடி - திருப்புளிங்குடியிலே, கிடந்தாய் - ஆஶ்ரிதார்த்தமாகக் கண்வளர்ந்தருளுகிறவனே, நம்முடை-நம்முடையாரென்னும்படி, அடியவர்-உனக்கஸாதாரண ஶேஷபூதரான ஸூரிகளுடைய, கவ்வை - அநுபவஜநிதமான கோலாஹலத்தை, கண்டு - கண்டு, நாம் - நாங்கள், உகந்து - உகந்து, களித்து - ஆநந்திகளாய், உளம் - நெஞ்சிலே, நலம் - ப்ரேமமானது, கூர - வர்த்தி (யி-ʼ) க்கும்படியாக, மடம் - வாசியறியாத, இ - இந்த, உலகர்-லோகத்தாரும், காண - காணும்படி, நீ-நித்யஸூரிகளையென்றுமிருந்தநுபவிப்பிக்கிற நீ, ஒருநாள் - ஒருநாளாகிலும், எங்கள் கண்முகப்பே-எங்கள் கண்முகப்பே,இருந்திடாய்-இருந்தருளவேணும் (எ)

ஆறு;—(எம்மிடர்) உத்கர்ஷாபகர்ஷவிபாகமின்றியே ஸர்வாத்மாக்களுக்கும் நீயல்லது வேறு ரக்ஷகருளரோ; ஆனபின்பு, உனக்கு நல்லராயிருப்பார் நீயிருந்தருளு மிருப்பைக்கண்டால் படும்பாடு கண்டு நாங்கள்வாழும்படியாக, இந்தலோகத்திலுள்ளவர்கள் காணும்படி யெங்கள் கண்ணெதிரே நீ யொருநாளிருந்திடா யென்கிறார். (எ)

ஈடு: அவ:—துர்ப்பலரோடு ப்ரபலரோடு வாசியற ரக்ஷகனை நீ, நாங்கள் வாழும்படி கண்ணெதிரே யொருநாளிருக்கவேணுமென்கிறார்.

(எம்மிடர்கடிந்து) எங்களுடைய ஸாம்ஸாரிக ஸகலதுஃக்கங்களையும்போக்கி.(இங்கென்னையாள்வானே) பகவத்ஜ்ஞானத்துக்கடையில்லாத விஹலோகத்திலே யென்னை யடிமைகொள்ளுகிறவனே. (இமையவர் தமக்குமாங்கனையாய்) அகிஞ்சநரான வெங்களுக்கேயன்றிக்கே, (க) "ஶரணம் ப்ரஹ்மஶம்பவோ ஹம்" என்றிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கு மங்கப்படி நிர்வாஹகனானவனே. (செம்மடலித்யாதி) சிவந்தமடல்மலராநின்றுள்ள தாமரைகளையுடைய நீர்நிலங்களை யுடைத்தாய், ஶ்ரமஹரமான திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே. உள்ளும்புறம்புமெல்லாம் தாமரையாயிற்று.

(நம்முடையித்யாதி) உன்னடியாருன்னையநுபவிக்கிற வாரவாரத்தைக்கண்டு நாங்களுகந்து, அந்தவுகப்புத் தலைமண்டையிட்டு, ஹ்ருதயத்திலே ஸ்நேஹமானது மேன்மேலென மிக்குவர. (இம்மடவுலகர்காண) இந்தஸம்ஸாரத்திலறிவுகேடராய், இடக்கைவலக்

(க) கீதை-

கையறியாதவர்களும் கண்ணாலே காணும்படியாக. (நீயோருநாளிருந்திடாயெங்கள்கண்முகப்பே) எங்கள்கண்வட்டத்திலே யொருநாளிருந்தருளவேணும். நித்யஸூரிகளுக்கு ஸதாதர்ஶநவிஷயமானநீ, ஒருநாளெங்கள்கண்ணுக்கு விஷயமாயிருந்தா லாகாதோ; உன்னுடைய தர்ஶநம் அதிக்ருதாதிகாரமாக வேணுமோ. (எ)

## எட்டாம்பாட்டு.

எங்கள்கண்முகப்பே யுலகர்களெல்லா மிணையடிதொழுதெழுதிறைஞ்சி * தங்களன்பாரத்தமதுசொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்துபூசிப்ப* திங்கள்சேர்மாடத் திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா* இங்கண்மாஞாலத்திதனுளு மொருநாளிருந்திடாய் வீற்றிடங்கொண்டே. (அ)

ப:—அநந்தரம், அந்த விபூதியிலன்றியே, ஸகலலோகங்களுங்கண்டு உன் திருவடிகளிலே விழுந்து தொழுதுவாழும்படி, இந்த விபூதியிலும் திருப்புளிங்குடியிலே உன்வாஸிதோற்ற வெழுந்தருளி யிருக்கவேணுமென்கிறார்.

(இ - ள்.) திங்கள் - தேவலோகத்தில் மேலெல்லையிலே வர்த்திக்கிற சந்த்ரன், சேர் - சேரும்படி யோங்கின, மாடம் - மாடங்களையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே வர்த்திப்பானும், திருவைகுந்தத்து - திருவைகுந்தத்திலே, உள்ளாய் - எழுந்தருளிநிற்பானும், தேவா - இந்த ஸௌலப்ய தேஜஸ்ஸை யுடையனானவனே, எங்கள் கண்முகப்பே - எங்கள் கண்முகப்பே, உலகர்கள் - லோகத்திலுள்ளார், எல்லாம் - எல்லாரும், அடி - உன்திருவடிகள், இணை-இரண்டையும் தொழுது - தொழுது, எழுது - எழுவதாய்க்கொண்டு, இறைஞ்சி - பாரதந்த்ர்யம் தோன்றும்படி ஸஸம்ப்ரமராய், தங்கள் - தங்களுடைய, அன்பு - பக்தியானது, ஆர - வர்த்தியாநிற்க, அத்தாலே, தமது- தங்களுடைய சொல்வலத்தால் - உக்திபலாநுரூபமாக. தலைத்தலைச்சிறந்து-ஒருவர்க்கொருவர் அஹமஹமிகையாலே மேல்விழுந்து, பூசிப்ப-ஸபஹுமாந ஸ்தோத்ரங்களைப்பண்ணும்படி, இ-இந்த, கண் - இடமுடைத்தாய், மா - நீ வருகைக்கீடாக ஶ்லாக்யமான, ஸ்ரீமத்தான, ஞாலத்து-பூமியிலே, இதனுளும் - திருப்புளிங்குடிக்குள்ளேயும், வீற்றி

டங்கொண்டு - உன்மேன்மையிடங்கொண்டு தோன்றும்படி. ஒருநாள்- ஒருநாள், இருந்திடாய் - இருந்தருளவேணும். (அ)

ஆறு:—(எங்கள்) "நீர்சொல்லிற்றெல்லாம் திருநாட்டிலே செய்கிறோம்" என்றோ பேசாதிருந்தருளுகிறது, அங்ஙனே செய்தருளவமையாது, எங்கள்கண்ணெதிரே லௌகிகரெல்லாரு முன் திருவடிகளிரண்டையும் நிரந்தரமாகத்தொழுது க்ருதார்த்தராய், தங்களுடைய ஸ்நேஹாநுகுணமாகத் தங்களுடைய பக்த்யநுரூபமான சொற்களாலே மிகவும் மேல்விழுந்து கொண்டாட, இந்த லோகத்திலே யித்திருப்புளிங்குடியிலே பிராட்டியும் நீயுங்கூடவொருநா ளிருந்திடாயென்கிறார். (அ)

ஈடு; அவ:—பரமபதத்திலே யன்றோ விருப்பழகு காட்டலாவதென்ன; அவ்விருப்பைத் திருப்புளிங்குடியிலே யொருநாளிருந்தருளவேணுமென்கிறார்.

(எங்களித்யாதி) எங்கள்கண்முகப்பே இருக்கவேணும். அது செய்யுமிடத்தில், லோகத்திலுள்ளாரடங்க, திருவடிகளிலுண்டான சேர்த்தியழகுகண்டு திருவடிகளிலே விழுவதெழுவதாய்க்கொண்டாஶ்ரயித்து. (திங்களன்பார) தங்கள் ப்ரேமம் மிக்குவர (தமது சொல்வலத்தால்) பக்த்யநுரூபமான சொற்களாலேயென்னுதல்; தாந்தாஞ்சொல்லவல்லவளவிலே யென்னுதல்; (க) "யதாஜ்ஞாநந் ... - யதாஜ்ஞாநந்துவசஷ்யாமி புருஷந்தம்ஸநாதநம்" என்னக்கடவதிறே. அதாவது-"நூறு பிராயம்புகுவீர், பொன்னாலே பூணுநூலிடுவீர்" என்றாப்போலே சொல்லுகை. வங்கிப்புரத்துநம்பி "விஜயஸ்வ, விஜயஸ்வ" என்ன, ஆண்டான் சொன்னவார்த்தையை நினைப்பது, (தலைத்தலைச்சிறந்து பூசிப்ப) ஒருவர்க்கொருவர் மேல்விழுந்து மிகவுமாஶ்ரயித்துக் கொண்டாட.

(திங்களித்யாதி) சந்த்ரனுக்கு இதஸ்ததஸ்ஸஞ்சரிக்கையாலுண்டான விளைப்பெல்லா மாறும்படியிருக்குமாயிற்று மாடங்களினுடையவோக்கம்; அதிலே ஸந்நிஹிதனானவனே. (திருவைகுந்தத்துள்ளாய்) அவ்வளவேயன்றிக்கே, திருவைகுந்தத்திலே நின்றருளினவனே. (தேவா) பரமபதத்திற்காட்டில் ஸம்ஸாரத்தில் நிலையால்

(க) ஶ்ரீநாராயணம்.

வந்தபுகர். ( இங்கண்மாஞாலத் திதனுளுமோருநாளிருந்திடாய் ) இந்தவிடமுடைத்தான மஹாப்ருதிவியிலே, திருப்புளிங்குடியிலேயு மொருநாளிருந் தருளவேணும். இருக்குமிடத்தில் (வீற்றிடங்கொண்டு) பரமபதத்திலிருக்குமாபோலே, உன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்ற விருக்கவேணும்.

(இதனுளும்) என்கிறதுக்குக் கருத்தென்னென்னில் ; சாய்ந் தருளினவழகுகண்டோமுக்கு, "இவனிருந்தாலெங்ஙனே யிருக்கிற தோ" என்றும், " இப்படியிருக்கிறவன்றான்நின்றாலெங்ஙனேயிருக் கிறதோ " என்றும், இங்ஙனே சிலவபேக்ஷைகள் பிறக்குமித்தனையிவர் களுக்கு; அது வேறொருபடியிறேநமக்கு- இவையெல்லாம் நாகாவ ஹமான விஷயங்களிலேயுண்டு; இவ்விஷயத்தில் தெரியாது. செய் ததெல்லாம் பரிதாபையும், அவ்வருகே சிலபரிமாற்றங்களை யாசைப் படுகையுமெல்லாம் நமக்கு ப்ராக்ருதவிஷயங்களிலே யுண்டாயிருக் கும். இப்படியிருக்குமோவென்றறியுமித்தனை. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

வீற்றிடங்கொண்டு வியன்கோள் மாஞாலத் திதனுளுமிருந்தி டாய் * அடியோம் போற்றியோவாதே கண்ணிணைகுளிரப்புதுமல ராகத்தைப்பருக* சேற்றிளவாளை செந்நெலூடுகளுஞ் செழும்பணைத் திருப்புளிங்குடியாய் * கூற்றமாயசுரர் குலமுதலரிந்த கொடுவினை ப்படைகள் வல்லானே. (கூ)

ப:—அநந்தரம், ஸ்ரீதிஸயஸுகுமாரமான வுன வடிவை நாமகள கண்டநுபவிக்கை ப்ரயோஜநமாக விந்த விபூதியிலே யெழுந்தருளியிரு க்கவேணுமென்கிறார்.

(இ - ள்.) சேறு - தன்னிலமான சேற்றிலே வளருகையாலே, இளம் - இளகிப்பதித்த, வாளை-வாளைகள், செந்நெலூடு-செந்நெலூடே, உகளும்-உகளிக்களித்து வர்த்திக்கக்கடவதாய், செழும்-ஸம்ருத்தமான, பணை - நீர் நிலங்களையுடைய. திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடி யிலே வர்த்திக்கிறவனாய், கூற்றமாய் - ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவாய்க் கொண்டு, அசுரர்குலம் - அஸுரகுலத்தை, முதல் - கர்ப்பபர்யந்தமாக, அரிந்த-அறுத்துப்பொகடுமவனாய், கொடுவினை - அதுக்கீடான கொடுந் தொழிலையுடைய, படைகள் - ஆயுதங்களை, வல்லானே - விதேயமாக

ருஉ திருவாய்மொழி, கூ-ப, உ-தி, கூ-பா, வீற்றிடம் வ்யாக்யாநம்

வுடையனவனே, அடியோம் - உனக்கஸாதாரண ஶேஷபூதரான நாங்கள். போற்றி - மங்களாஶாஸநம்பண்ண. ஓவாதே-இடைவிடாதே, கண்ணிணை - கண்ணிணையானது, குளிர - பரிதாபம் தீர்ந்து குளிரும்படியாக, (க) "ஔவநாஹ்ராவியநுவ-லோசநாப்யாம்பிபந்திவ" என்கிறபடியே, புதுமலர்-செவ்விப்பூப்போலே புஷ்பஹாஸஸுகுமாரமான, ஆகத்தை - உன்வடிவை, பருக - த்ருஷ்ணாநுரூபமாக வநுபவிக்கும்படி, வீற்றிடங்கொண்டு - உன்னுடைய ஸர்வாதிகத்வத்தால்வந்த வேறுபாடு விஸ்த்ருதமாய்க்கொண்டு தோற்றி, வியன்கொள் - விஸ்தாரவத்தாய், மா - ஶ்லாக்யமான, ஞாலத்திதனுளும் - இந்த ஜகத்தினுள்ளேயும், இருந்திடாய் - இருந்தருளவேணும். (கூ)

ஆறு: (வீற்றிடங்கொண்டு) என்னுடைய கண்ணிணையானது விடாய்தீர்ந்து குளிர உன்னுடைய செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியைப்போவாதே பருகும்படியாக விஸ்மயநீயமான ஸம்ஸாரத்திலே உன்னுடைய வ்யாவ்ருத்தி தோற்றும்படியொருநாளிருந்தருளவேணும்; ஆஶ்ரிதருடைய து:கத்தைப் போக்கவல்லையாயிருந்து அவை செய்யாதொழியலாமோவென்கிறார். (கூ)

ஈடு:- அவ;—இவ்விருப்பில் வாசியறியாத ஸம்ஸாரத்திலேயிருக்கிறதென்னென்னில்; ருசியுடைய நாங்கள்கண்டநுபவிக்கவென்கிறார்.

(வீற்றிடங்கொண்டு) ஶேஷித்வத்தால்வந்த வேறுபாடுதோற்றும்படி. (வியன்கொளித்யாதி) விஸ்மயநீயமான மஹாப்ருதிவியானவிதிலேயு மிருந்திடாய் உன்னைக்கொண்டொரு கார்யமில்லாத ஸம்ஸாரத்திலே. (இதனுளுமிருந்திடாய்) இந்தத் திருப்புளிங்குடியாகிற திருப்பதியிலேயுமிருந்திடாய். உன்னை யொழியச் செல்லாமையுடையார்முன்னே யிருந்தாயென்னுமிதுபோருமோ. (இதனுளுமிருந்திடாய்) சாய்ந்தருளினபோதிருக்குமிருப்பை யநுபவிப்பித்தருளிற்று, இனி இருந்தாலிருக்குமழகையு மநுபவிப்பித்தருளவேணும்.

"நமக்கிவை யெல்லாமிங்கே காணலாமிறே - சாய்ந்தருளின வழகு, பெரியபெருமாள்பக்கலிலே காணலாம்; நின்றருளினவழகு, நம்பெருமாள்பக்கலிலே காணலாம்" இருப்பிலுண்டானவழகுபெரியபிராட்டியார்பக்கலிலே காணலாம்" என்று பட்டரருளிச்செய்வர்.

---

(க) ரா-யு-ககூ-எ.

நாமிங்கிருந்து நீர்பெறப்புகுகிறபேறேதென்ன (அடியோமித்யாதி) (அடியோம்) அவ்விருப்பைப்படிவிட, அதுவே ஜீவநமாகவிருக்கிறநாங்கள். (போற்றி) இவ்விருப்பிங்ஙனே நித்யமாகச் செல்லவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணி. (ஓவாதே) உச்சிவீடுவிடாதே. (கண்ணிணைகுளிர) காணப்பெறுமையாலே கமர்பிடந்துகிடக்கிறகண்கள், விடாயெல்லாந்தீர்ந்து குளிரும்படியாக. (புதுமலரித்யாத்) செவ்விப்பூப்போலேயிருக்கிற திருமேனியை யநுபவிக்கும்படியாக. புஷ்பஹாஸ ஸுகுமாரமானவடிவை (க) "ஜொஷஞொஹா்ஜ ஜெஷநிஷ-லோசநாப்யாம்பிபந்நிவ" என்கிறபடியே நிரந்தரமாகவநுபவிக்கப்பெறுகை.

(சேற்றிளவித்யாதி) அவ்வூரில் பதார்த்தங்களுடைய அபிமதலாபத்தாலே களித்து வர்த்திக்குமாயிற்று செங்கெலின் நடுவேசேற்றிலே. பஞ்சவிம்ஶதிவார்ஷிகரான முக்தரைப்போலேயிருக்கிற வாளைகள் களித்துத்துள்ளாநிற்பதான வழுகியநீர் நிலத்தையுடைய. (செழும்பணை) அழகியமருதநிலமென்றுமாம். (கூற்றமாயித்யாதி) ப்ரதிபக்ஷத்துக்கு ம்ருத்யுவான திவ்யாயுதங்களை தரித்துக்கொண்டிருக்கிறவென்னுதல்; அன்றிக்கே, ப்ரதிபக்ஷத்துக்குக் கூற்றமாய்க் கொண்டு அவர்களுடைய குலத்தை முதலிலேயரிந்து பொகடுமவனாய், அதுக்கடலாகக் கொடியதொழில்களையுடைய திவ்யாயுதங்களையுடையனாயிருக்கிறவனென்னுதல். இப்போது சொல்லுகிறது இதுக்குமுன்பு தம்முடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கினபடிக்கு த்ருஷ்டாந்தமென்னுதல்; உனக்கென்னகுறை யுண்டாயிழக்கிறேனென்னுதல். (கூ)

## பத்தாம்பாட்டு

கோடுவினைப்படைகள்வல்லை யாயமராக்கிடர்கெட வசுரர்கட்கிடர்செய் * கடுவினைநஞ்சேயென்னுடையமுதே கலிவயல் திருப்புளிங்குடியாய்* வடிவிணையில்லா மலர்மகள் மற்றைநிலமகள்பிடிக்கும்மெல்லடியைக்*கோடுவினையேனும் பிடிக்கநீயொருநாள்கூவுதல் வருதல்செய்யாயே. (க0)

ப:—அநந்தரம், நாய்ச்சிமாரை யடிமைகொண்டருளினப்போலே நானும்முன் திருவடிகளிலே யடிமைசெய்யும்படி, என்னை யங்கேயழைத்தல் இங்கே வருதல் செய்தருளவேணுமென்கிறார்.

---

(க) ரா·யு·கக-எ.

(இ - ள்.) கொடுவினை-விரோதிவிஷயத்தில் கொடுந்தொழிலான, படைகள் - ஆயுதங்களை, வல்லையாய்-கார்யங்கொள்ள வல்லையாய், அமரர்க்கு - அநுகூலரான தேவர்களுடைய, இடர் - து:கம், கெட - தீரும்படி, அசுரர்கட்கு - ப்ரதிகூலரானவஸுரர்கட்கே, இடர் - து:கத்தை, செய் - விளைக்குமிடத்தில், கடு - சடக்கென்னும், வினை - ப்ரவ்ருத்தியையுடைய, நஞ்சே - நஞ்சானவனும், என்னுடை - அநந்யப்ரயோஜநனுமநந்யகதியானவெனக்கு அமுதே - அலப்யமானவம்ருதமாய், அத்யாஸந்நமாம்படி; கலி - ஸம்ருத்தமான, வயல் - வயலையுடைய, திருப்புளிங்குடியாய் - திருப்புளிங்குடியிலே கண்வளர்ந்தருளுகிறவனே, (௧) "அஸிதேக்ஷணா-அஸிதேக்ஷு" என்னும்படி, வடிவு - வடிவழகுக்கு, இணையில்லா - நீயும் தகுதியல்லாதபடியான வதிஶயிதவைலக்ஷண்யத்தையுடைய, மலர்மகள் - கமலவாஸிநியான லக்ஷ்மியும், மற்றை - ஏவம்பூதவைலக்ஷண்யத்தையுடைய, நிலமகள் - ஸ்ரீபூமியும், பிடிக்கும் - தங்களுடைய ஸ்வாபாவிகமார்த்தவத்தையுடைய திருக்கைகளாலே பிடிக்கும்படியான, மெல் - நிரதிஶயஸௌகுமார்யத்தையுடைய, அடியை - திருவடிகளை, கொடுவினையேனும் - ப்ராப்தனாய்வைத்து நெடுங்காலமிழக்கும்படி கொடியபாபத்தை யுடையனானும், பிடிக்க - பிடிக்கும்படியாக, நீ நீ, கூவுதல் - அங்கேயழைத்துக்கொள்ளுதல், வருதல் - நானபேக்ஷித்தபடி யிங்கேவந்தருளுதல், ஒருநாள்-ஒருநாள், செய்யாய் - செய்யவேணும். (௧௦)

ஆறு:—(கொடுவினை) ஆஶ்ரிதவிரோதிநிரஸந ஸமர்த்தனுமாய், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனுமாய், எனக்கு நிரதிஶய போக்யனாய், திருப்புளிங்குடியிலேவந்து ஸந்நிஹிதனானவனே, வடிவழகுக்கொப்பில்லாத பெரியபிராட்டியாரும், அப்படியேயிருக்கிற ஸ்ரீபூமிப் பிராட்டியும்கூசி ஸ்பர்ஶிக்கவேண்டும்படி ஸுகுமாரமான வுன்னுடைய திருவடிகளை, அதில்போக்யதையை யறிந்துவைத்து இழக்கைக்கீடான பாபத்தைப்பண்ணினநானும் பிடிக்கும்படி, என்னையொருநாளங்கே யழைத்துக்கொள்ளுதல், இங்கேவருதல், செய்தருளவேணுமென்கிறார். (௧௦)

ஈடு; அவ;—நிரதிஶயபோக்யமான வுன்னுடைய திருவடிகளிலே நானும் வந்தடிமைசெய்யும்படி, என்னை யங்கேயழைத்தல், நீயிங்கேவருதல் செய்யவேணுமென்கிறார்.

(௧) ரா-ஸு-௧௬-௫.

(கோடுவினைப்படைகள் வல்லையாய்) நீரிலே நெருப்பெழுந்தாப்போலே, உனக்குசேஷமாய்வைத்து ப்ரதிகூலித்தவர்கள்பக்கல்சீறி, ஆயுதமெடுக்கவல்லையாய். அவன்மாட்டாதது சிலரையழியச்செய்கையாயிற்று; (௧) "யதிவாராவணஸ்ய ழ-யதிவாராவணஸ்ஸ்வயம்" என்னுமவனிறே. கடலையணைசெய்து, ஊரைச் சூழப்போந்து, பின்னை அங்கதப்பெருமாளைப்புகவிட்டு, கையிலேவந்தகப்பட்டவனை (௨) "ஹூாநஜாநாமி-கச்சாநுஜாநாமி" என்றுதப்பவிட்டது, "இன்னமொருக்கா லநுகூலிக்குமோ" என்று; "நான்முடிந்தேபோமித்தனை" என்று அவனதிலே முதிரநின்றபின்பு, கண்ணுங்கண்ணீருமாயிறே நின்றுகொன்றது. இவர்கள் பண்ணும் ப்ராதிகூல்யத்தாலே யழியச்செய்யுமித்தனைபோக்கி, தானாகவழியச்செய்யமாட்டானாயிற்று.

(அமரரித்யாதி) அஸுரர்களாலே தேவர்களுக்குண்டான துஃக்கந்தீரும்படி, அஸுரர்களுக்கு துஃக்கத்தைவிளைக்கும். (கடுவினைநஞ்சே) அப்போதே சடக்கெனமுடிக்கவற்றாய், ப்ரத்யௌஷதமில்லாத நஞ்சானவனே. (என்னுடையமுதே) அந்நஞ்சுதானே இவர்க்கம்ருதமாயிருக்கிறபடி, தேவர்களுடைய வுப்புச்சாறன்று. (கலிவயலித்யாதி) இவ்வம்ருதத்துக்குக் கடல்கடைதல்; ஸ்வர்க்கத்திலே போதல் செய்யவேண்டா, திருப்புளிங்குடியிலே ஸந்நிஹிதமாயிற்று இவ்வம்ருதம். (கலிவயல்) ஸம்ருத்தமானவயல்,

(வடிவிணையித்யாதி) வடிவில்வந்தாலொப் பின்றிக்கேயிருக்கும். பகவத்தத்வமுமொப்பன்று; (௩) "தஞ்யஃஷிதேக்ஷணா-தஞ்சேயமஸிதேக்ஷணா" என்றேற்றமாயே நின்றதிறே. (மற்றைநிலமகள்) ஏவம்பூதையென்னுமத்தனை அவளையும். (பிடிக்கும் மெல்லடியை) அவர்களுந்திருவடிகளைப் பிடிக்கப்புக்கால், பூத்தொடுவாரைப்போலே "கன்றுகிறதோ" என்றுகூசித் தொடவேண்டும்படியாயிற்று ஸௌகுமார்யமிருப்பது; அப்படிப்பட்ட திருவடிகளை.

(கோடுவினையேனும்பிடிக்க) * கண்கள் சிவந்துக்குப்பின்பு இவர்க்கு நிகர்ஷாநுஸந்தாநமிலலையிறே. "அவர்களும் ஸந்நிஹிதராய், ப்ராப்தியுமுண்டாயிருக்க, நானிகழ்ந்திருப்பதே!" என்று,

---

(௧) ரா-யு-௧௮-௩௪. (௨) ரா-யு-௫௯ ௧௪௪.

(௩) ரா-ஸு-௧௬-௫

"பாவியேன்" என்பாரைப்போலே "கொடுவினையேன்" என்கிறார். (நீயோருநாள் கூவுதல்வருதல் செய்யாயே) நிரதிசயபோக்யனாய் ஸந்நிஹிதனானநீ, ஸத்தையைநோக்குகைக் கொருநாளங்கேயழைத்தல், இங்கேவருதல் செய்தருளவேணும்; முற்பட "வருதல்" என்னிலாயிற்று, அஸ்ஸமுதாயத்தைக் குலைக்கவொண்ணாதென்னுமத்தாலே; அபேக்ஷையுடையார்பக்கல் அவனைத்தனிவிட்டிரார்களிறே, கூடக்கொடுவருவார்களென்னு மத்தைப்பற்றச் சொல்லுகிறார். (கo)

---

## பதினொன்றாம்பாட்டு.

கூவுதல்வருதல்செய்திடாயென்று குரைகடல் கடைந்தவன்றன்னை * மேவிநன்கமர்ந்தவியன்புனல் பொருநல்வழுதிநாடன் சடகோபன் * நாவியல்பாடலாயிரத்துள்ளு மிவையுமோர்பத்தும் வல்லார்கள் * ஓவுதலின்றி யுலகம்மூன்றளந்தானடியிணை யுள்ளத்தோர்வாரே. (கக)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத்ஜ்ஞாநலாபத்தை யருளிச்செய்கிறார்.

(இ - ள்.) ப்ரயோஜநாந்தர பரரான தேவர்களுக்காக, குரை-அதிகோஷத்தையுடைத்தான. கடல் - கடலை, கடைந்தவன்றன்னை - கடைந்தவனான ஸர்வேஶ்வரனை, கூவுதல் - அங்கேயழைத்துக் கொள்ளுதல், வருதல் - நானிருந்தவிடத்தில்வருதல், செய்திடாய் - செய்யவேணும், என்று-என்றபேக்ஷித்து மேவி அவனுடைய அங்கீகாரத்தைப்பெற்று அத்தாலே, நன்கு-நன்றாக, அமர்ந்த - தரித்தவராய், வியன் - ஸம்ருத்தமான, புனல் - ஜலத்தை யுடைத்தான, பொருநல் - திருப்பொருநலையுடைத்தான, வழுதிநாடன் - திருவழுதிநாட்டுக்கு நிர்வாஹகரான சடகோபன் - ஆழ்வாருடைய, நாவியல் - ஜிஹ்வாவ்யாபாரமான, பாடல் - பாடல், ஆயிரத்துள்ளும் - ஆயிரத்துள்ளும் வைத்துக்கொண்டு, ஓர் - அத்விதீயமான, இவையும்பத்தும் - இப்பத்தையும், வல்லார்கள் - வல்லவர்கள், மூன்றுலகம் - த்ரைலோக்யத்தையும், அளந்தான் - அளந்துகொண்ட ஸர்வஸுலபன், அடி - திருவடிகள், இணை - இரண்டையும், ஓவுதல் - ஓவுதல், இன்றி - இன்றி, உள்ளத்து - நெஞ்சிலே, ஓர்வார் - அநுஸந்திக்கப்பெறுவர்கள். இது எழுசீராசிரியவிருத்தம். (கக

ஆறு;—(கூவுதல்) குரைகடல்கடைந்தவன்றன்னை பரமப் ராப்யமாகப்பற்றி, கூவுதல் வருதல் செய்திடாயென் றபேக்ஷித்த வியன்புனல் பொருநல் வழுதிநாடன் சடகோபன் நாவியல் பாடலா யிரத்தில் இத்திருவாய்மொழியைவல்லார், ஆஸ்ரிதஸுலபனான வெம் பெருமானுடைய திருவடிகளை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே யநுப விக்கப் பெறுவரென்கிறார். (கக)

ஈடு; அவ:—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார், அவனை நிரந்தரமாக வநுபவிக்கப் பெறுவரென்கிறார்.

(கூவுதலித்யாதி) "குரைகடல்கடைந்தவன்றன்னை-கூவுதல் வருதல்செய்திடாய்" என்றாயிற்றிவர் சொல்லிற்று. முறைகெடவு மாம், முறையிலேயாகவுமாம், காணுமித்தனையே வேண்டுவது. (குரைகடலித்யாதி) இவ்வபேக்ஷையில்லாதார்க்கும் உடம்புநோவக் கடைந்து அம்ருதங்கொடுக்குமவனையாயிற்று இவரபேக்ஷித்தது. (மேவிநன்கமர்ந்த) இந்தஸ்வபாவாநுஸந்தாநத்தாலே பொருந்திக் கால்தரையிலேபாவினாராயிற்று. (வியனித்யாதி) விஸ்மயநீயமான நீரையுடைய திருப்பொருநலையுடைய திருவழுதிவளநாட்டுக்கு நிர் வாஹகரானவாழ்வார்.

(நாவியல்பாடல்) மநஸ்ஸஹகாரமுமொழியவாயிற்றுச் சொல் லிற்று. (ஓவுதலித்யாதி) ஆஸ்ரிதஸுலபனானவனுடைய திருவடி களை நிரந்தரமாக ஹ்ருதயத்திலே யநுபவிக்கப்பெறுவர். இத்தனை போதும், இவர்தாம் "இவற்றைப் பெறவேணும்" என்னுமபேக்ஷை யோடே, "திருக்கண்களாலே குளிரநோக்கியருளவேணும், திருவடி களைத் தலைமேலேவைத்தருளவேணும், தேவரீரெழுந்தருளியிருக் குமிருப்பைக்காணவேணும், நாய்ச்சிமாரும் தேவரீருமாயிருக்கும் படிகாணவேணும், உலாவும்படிகாணவேணும், ஸ்மிதமிருக்கும்படி காணவேணும்" என்றாசைப்பட்டவிவர்க்கு அப்போதே கிடையா மையாலே, "இவற்றைப்பெறவேணும்" என்னும் மநோரதந்தானே பேறாய்த்தோற்றிற்று; இத்தையப்யஸித்தவர்களுக்கும் இம்மநோர தம் மாறாதேமுடியச் செல்லுமென்கிறார். (க) "யதிநாஸம்நவி ஜேத தாவதாவிக்ஷ்ரு தீஸஹா-யதிநாஸம்நவிந்தேத தாவதாஸ்மி க்ருதீஸ்தா" என்கிறபடியே. (கக)

இரண்டாம்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) ஜித-க-கஉ-



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஒன்பதாம்பத்து.

## மூன்றாந்திருவாய்மொழி.

### ஓராயிரம் ப்ரவேஶங்கள்.

ஆறு;—(ஓராயிரம்) இப்படியாழ்வாரபேக்ஷிக்க, "நீரிங்ஙனே ப்ரார்த்திக்கவேணுமோ, நம்மோட்டைக் குடற்றுடக்கறியீரோ" என்றெம்பெருமா னருளிச்செய்ய, அவற்றை யநுஸந்தித்தினியராகிறார்.

ப:—மூன்றாந்திருவாய்மொழியில் கீழே-கைங்கர்யப்ரார்த்தனையைப்பண்ணி 'கூவுதல்வருதல்செய்யவேணும்" என்றபேக்ஷிக்க, அவனும் தன்கிருபாதிசயத்தாலே 'நீரபேக்ஷிக்கவேணுமோ நம்முடைய கார்யஞ்செய்கைக்கு" என்று தன்னுடைய ப்ரகாரப்ரகாரி ஸம்பந்தத்யோதகமான நாராயணத்வத்தைப்ரகாசிப்பிக்கக்கண்டு, அதினுடைய கார்யமான ஸர்வலோகரக்ஷண ஸமர்த்தமாயுள்ள திவ்யநாம ஸம்பத்தையும், ரக்ஷணார்த்த வ்யாபாரத்தையும் அகிலவேத வேத்யதாப்ரகாரத்தையும், நித்யஸூரி போக்யதையையும், அதினுடைய நிருபமஸௌலக்ஷண்யத்தையும், அநிஷ்டநிவ்ருத்தீஷ்ட ப்ராப்திஹேதுவான லக்ஷ்மீ ஸம்பந்தத்தையும், ப்ரபலாநிஷ்டபஞ்ஜநத்வத்தையும், அபீஷ்டதேஶவர்த்தித்வத்தையும், ஆஶ்ரயணம் மிகையான வதிஶயிதஶீலத்வத்தையும், அதினுடைய வாசாமகோசர மஹத்தையையு மநுஸந்தித்து, ஏவம்விதஸ்வபாவனான ஸர்வேஶ்வரனை யநுபவிக்கவாசைப்பட்டு அவனுடையஶீலத்திலே வித்தராய் அநுபவந்தன்னிலு மக்ஷமரான ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

ஈடு;—"நீரிங்ஙனே யர்த்திக்கவேணுமோ, நம்மோட்டைக் குடற்றுடக் கையறியீரோ" என்ன; அத்தை யநுஸந்தித்தினியராகிறார். "கூவுதல்வருதல்செய்யாய்" என்று ப்ரார்த்தித்தார்கீழ்; "ஆர்ப்ரார்த்திக்கக்கடவவற்றை யார்ப்ரார்த்திக்கிறார், உம்முடைய லாபத்துக்கு நாம் ப்ரார்த்திக்கவேண்டும்படியன்றோ வும்மோடு நமக்குண்டான ரக்தஸ்பர்ஶம், ஆனபின்பு, உம்முடைய ஸர்வாபேக்ஷிதங்களுஞ் செய்யக்கடவோம், நீர் வெறுக்கவேண்டா" என்று ஸமாதாநம்பண்ணினான். (க) "மையனிலற்றிமயக்க வுன்முகம் மாயமந்திரந்தான்கொலோ" என்னக்கடவதிறே;

---

(க) நா தி உ-ச.

ஸ்ரீகௌஸல்யையார், ஏகபுத்ரையான நானும்மைப்பிரிந்து தனி யாயிருக்கமாட்டேன், கூடப்போருமித்தனை" என்று பின்தொடர; புரிந்துபார்த்து, "ஆய்ச்சீ, நீரென்னைப் பின்தொடருகிறவிடம் தர்ம ஹாநிகிடீர்" என்று முகத்தைப்பார்த் தொருவார்த்தை யருளிச் செய்ய; மீட்கைக்காகப்போனவிவள் மங்களாஸாஸநம் பண்ணிமீண் டாளிறே; இதிறே அவனுடைய பார்வைகளு முக்திகளுமிருக்கும் படி. அவனொருவார்த்தைசொன்னால் பின்னை அவன்வழியேபோக வேண்டும்படியாயிறே யிருப்பது.

ஆக, அவன் நாராயணனாயிருக்கிற விருப்பை யநுஸந்தித்தார்; அந்நாராயண ஸப்தத்தினுடைய வர்த்தத்தையாராய வென்றிழிந்த வாறே ஒருவஸ்துவுக்கும் தன்னுடைய பேறிழவுக்குக் தனக்கு ப்ரார்த்திக்கைக்கு ப்ராப்தியற்றிருந்தது; இப்படி யிருக்கிறவன் தன் பக்கலிலே விஸேஷகடாக்ஷம் பண்ணினபடியையும், இந்நாராயண ஸப்தார்த்தத்துக்கெல்லையான வவனுடைய ஸீலகுணத்தையு மநு ஸந்தித்து, "இப்போதே இப்படி ஸீலவானானவனைக்காணவேணும்" என்னுமபேக்ஷை பிறந்தது;

அதில் தமக்கு அவனிருந்தவிடத்தளவும் கால்நடைதாராதபடி க்கிடாகவாயிற்று அவனுடைய ஸீலாதிகளிலே யீடுபட்டுத் துவக் குண்டபடி. இனித்தான், இவர்போனாலு மொன்றுசெய்கை மிகை யாம்படியிருப்பானொருவனாயிருந்தானவன்; இவர்தாம், ஒன்றுசெய் தநுபவிக்க வல்லவரன்றிக்கேயிருந்தார், அவனுடைய சீலகுணங்க ளிலே கால்தாழ்ந்திருக்குமவராகையாலே. இப்படிப்பட்டவனுடைய ஸீலகுண ப்ராசுர்யத்தையே சொல்லித் தலைக்கட்டுகிறது இத்திரு வாய்மொழி.

அன்றிக்கே, * கண்கள் சிவந்திலே-ப்ரணவார்த்தத்தை யநு ஸந்தித்தார்; அதில் முதலிரண்டரைப்பாட்டாலே - அகாரார்த்தத் தை யருளிச்செய்து, மேலொன்றரைப்பாட்டாலே- சதுர்த்யர்த்தத் தையும் மத்யமாக்ஷரத்திலர்த்தத்தையும், த்ருதீயாக்ஷரத்திலர்த்த த்தையு மருளிச்செய்து, அவைபிரித்தருளிச் செய்யாதொழிந்தது- சதுர்த்த்யர்த்தமும், மத்த்யமாக்ஷரத்திலர்த்தமும் ஸாஸ்ரயமாயல் லதிராமையாலேகூட வருளிச்செய்தார்; மேல்நாலுபாட்டாலே-த்ரு தீயாக்ஷரவாச்யனுடைய வைலக்ஷண்யத்தை யருளிச்செய்து; மேலி

ரண்டுபாட்டாலே-இவ்வடைவிலே ப்ரணவார்த்தாநுஸந்தாநம்பண்ணுத பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து ; ஆக, ப்ரணவார்த்தத்தை யருளிச்செய்து;

மேல், நமஸ்ஸப்தார்த்தத்தை, * கருமாணிக்கமலை *நெடுமாற்கடிமை, இரண்டாலுமருளிச்செய்து ; நமஸ்ஸப்தத்துக்கு ஸாப்தமாகவு மார்த்தமாகவு மிரண்டிறே அர்த்தம், அதில்ஸாப்தமானவர்த்தத்தை * கருமாணிக்கமலையிலே யருளிச்செய்து, ஆர்த்தமானவர்த்தத்தை * நெடுமாற்கடிமையிலே யருளிச்செய்தது. நமஸ்ஸப்தத்துக்கு ஸாப்தமானவர்த்தம் - " நானெனக்குரியேனல்லேன் " என்கையிறே ; ஒருகர்யகையாலொருவனுக்கேயாயிருக்கையும், தான் தனக்குரியனன்றிக்கே யிருக்கையுமிறே ஸ்வரூபம்; அத்தையருளிச் செய்தார் - * கருமாணிக்கமலையாலே ;

மேல், * நாராயண ஸப்தார்த்தத்தை யருளிச்செய்தார் - * கொண்டபெண்டிராலே; நாராயணஸப்தத்துக்கர்த்தம்-ஸ்வாமித்வ வாத்ஸல்யோபாயத்வோபேயத்வ வ்யாபகத்வ மித்யாதியிறே ; மேலே, சதுர்த்யர்த்தத்தை யருளிச்செய்தார்-* பண்டைநாளாலே ; சதுர்த்திக்கர்த்தம்-கைங்கர்யப்ரார்த்தனையிறே; ப்ரணவார்த்தமும், நமஸ்ஸப்தார்த்தமும், வ்யாபகத்வமும், அவ்யாபகத்வமும், அல்லாத வ்யாபக மந்த்ரங்களிலுமுண்டு ; அதில், தாமாதரித்தருளிற்றுத் திருவஷ்டாக்ஷரமென்னுமிடத்தை * ஒராயிரத்தாலே யருளிச்செய்கிறார். இது நடுவில் திருவீதிப்பிள்ளை யருளிச்செய்யும்படி. *

---

# முதற்பாட்டு.

ஒராயிர மாயுலகேழளிக்கும் * பேராயிரங் கொண்டதோர் பீடுடையன் * காராயினகாள நன்மேனியினன் * நாராயணன் நங்கள் பிரானவனே. (க)

ப:— முதற்பாட்டில், நாராயணத்வகார்யமான ஸர்வரக்ஷகமாயுள்ள நாமஸம்பத்தையுடையவன் நமக்கு உபகாரகனென்றறுதியிட்டு நெஞ்சை நோக்கி யருளிச்செய்கிறார்.

(இ - ள்.) (க) "ஸம்ஹர்த்தா-ஸம்பர்த்தா" இத்யாதி வசநக்ரமத்தாலே யுண்டான வ்யுத்பத்திபேதத்தாலும், நிர்வசநபேதத்தாலும், ஓர் -

(க) வி-பு-கூ-

ஓரோதிருநாமங்கள், ஆயிரமாய் - ஸஹஸ்ரமுகமாய்க்கொண்டு, உல கேழு - ஸர்வவிதமானஸகல சேதநாசேதநங்களையும், அளிக்கும் - ரக்ஷிக்கக்கடவதான, பேர் - திருநாமங்கள், ஆயிரம் - ஆயிரத்தை, கொண்டது - உடைத்தான, ஓர் - அவித்தீயமான, பீடு - பெருமையை, உடையன் - உடையனுய், இந்நாமங்களாலே ப்ரதிபாத்யமாயிருக்கிற, காளகாராயின - காளமேகம்போலே ஶ்யாமளமாய், நன்-அப்ராக்ருதமான மேனியினன் - திவ்யவிக்ரஹத்தையுடையனுய், நாராயணனவனே அவற்றுக்கடங்க மூலபூதமான நாராயணஶப்தவாச்யனானவனே, நங்கள் - நமக்கு, பிரான்-உபகாரகன். (க)

ஆறு;—ஓரொருதிருநாமமே யாயிரம்படியா யுலகேழளிக்கும் பேராயிரமுடையவனுய், ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வ ஸத்யஸங்கல்பத்வ காருண்ய ஸௌஶீல்ய வாத்ஸல்யாத்ய ஸங்க்யேயகல்யாண குணவிசிஷ்டனுய், * ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்ய பரிமிதகுண விசிஷ்ட நீலமேகநிப திவ்யரூபனுயிருந்த நாராயணனே ஸர்வேஶ்வரனுகப் பெறுவதே! என்று, தம்முடைய திருவுள்ளத்தி லின்னுப்பெல்லாந்தீர்ந்து எம்பெருமானுடைய ஸர்வேஶ்வரத்வத்தை யநுபவிக்கிறார். (க)

ஈடு; அவ: —" அவன் நாராயணனன்றோ. நம்மபேக்ஷிதஞ்செய்கைநிஶ்சிதம்" என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச் செய்கிறார்.

(ஓராயிரமாய்) ஓரொருதிருநாமங்களே யாயிரம் முகத்தாலே ரக்ஷிக்கவற்றாயிருக்கும். (க) " ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ரியஃ-ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ்ரியஃ" என்று - நிர்வசநபேதத்தாலே அநேகம்படி ரக்ஷிக்கவற்றாயிறேயிருப்பது. (உலகு) ரக்ஷிக்குமிடத்தில், ஓரொருத்தராகவன்றிக்கே, லோகமாக ரக்ஷிக்கும். (ஏழு) அதுதன்னிலு மொருலோகமாத்ரமன்றிக்கே, ஸர்வலோகங்களையும் ரக்ஷிக்கும். ஆஶ்ரிதரொருத்தரை ரக்ஷிக்குமதுண்டிறே அவனுக்கு; அங்ஙனன்றென்கை திருநாமங்கள். (அளிக்கும்) இவைபண்ணினபாபங்களைப் பார்த்து, உ) "க்ஷிபாமி-க்ஷிபாமி" என்பது மொருபோதுண்டு அவனுக்கு அளிக்குமதொன்றுமேயாயிற்று அவற்றுக்கு ஸ்வபாவம்.

---

(க) வி-பு-சு ரு எச-          (உ) கீதை-கசு-கக

(பேர்) ரக்ஷிக்கைக் கொருபேர்காணும்வேண்டுவது; அப்படிப்பட்ட திருநாமங்களைத்தானெத்தனை யுடையனென்னில் (ஆயிரங்கொண்டதோர் பீடுடையன்) (௧) "ஜெவொ நாமஸஹஸ வாஸு- தேவோ நாமஸஹஸ்ரவாந்" என்னுமாபோலே. பலபகவுடையவனென்னுமாபோலே; ஸர்வாதித்யம் பண்ணநினைத்தவர்கள், சோறுந்தண்ணீருங் குறையறுத்துக்கொண்டிருக்குமாபோலே, ஜகத்ரக்ஷணசிந்தைபண்ணின வீஸ்வரனுக்கு அதுக்குபாயமாக வாயிரந்திருநாமங்களுண்டாயிருக்குமாயிற்று.

கோயிலாய்த்தான், புத்ரவியோகத்தாலே பட்டர் ஸ்ரீபாதத்திலேவந்து தன்சோகமெல்லாந்தோற்ற விழுந்துகிடக்க, அவருளிச்செய்தவார்த்தையை நினைப்பது ஆயிரந்திருநாமத்தை யுடையனாகையால் வந்த பெருமையையுடையவன்.

அவைதாம் கரைக்கட்டாக் காவேரிபோலே பரந்திருந்தால் அவற்றையெல்லா மொருமுகஞ் செய்தநுபவிக்கைக்கீடான வடிவையுடையனாயிருக்கும் (காராயினகாளநன்மேனியினன்) காரென்றேயிருக்கிறாராயிற்று. ரூபகம் முற்றுகையாலே, கறுத்திருந்துள்ள காளமேகம்போலேயிருப்பதாய்; அதுதானும், பெருக்காற்றில்விழுவார் ஒருதெப்பந்தேடி யிழியுமாபோலே ஒன்றைச் சொல்லும்போது உபமாநம் முன்னாகவல்லது சொல்லவொண்ணாமையாலே சொன்னவித்தனைபோக்கி, திருமேனியைப்பார்த்தால் உபமாநரஹிதமாயாயிற்றிருப்பது.

இப்படியிருக்கிறவைதன்னையுடையவன்றானாரென்ன (நாராயணன்) ஜ்ஞாநஸக்த்யாதிகளும் குணங்களாயிருக்கச்செய்தே, ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் ஸ்வரூபநிரூபகமாயிருக்குமிறே; அப்படியே, "பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்" என்றவனாகிறானாரென்ன "இன்னான்" என்று விசேஷிக்கிறவிடத்தில், "நாராயணன்" என்கையாலே-நிரூபகமாய்ப் புக்கதிறே யிது. ஆயிரந்திருநாமங்களைச் சொல்லி, அவற்றிலே மூன்றை ப்ரதாநமாக வெடுத்தது வ்யாபக மந்த்ரங்களாகையாலே; அவற்றிலே யிரண்டை மற்றைவற்றோடொக்கச் சொல்லலாம்படியாயிற்று இதுக்குண்டான ப்ராதாந்யம்.

(௧) பாரதம்.

(க) "அந்தணர்மாட்டந் திவைத்தமந்திரத்தை" என்றும், (உ) "நின்திருவெட்டெழுத்துங் கற்றுநான்-உற்றதும்" என்றும், (௩) "நாராயணாவென்னும்நாமம்" என்றும், (௪) "நமோநாராயணம்" என்றும், இவையிறே திருமங்கையாழ்வார்படி; நம்மாழ்வாரும், "வண்புகழ்நாரணன்" என்று தொடங்கி, திருவாய்மொழி முடிய வநுஸந்தித்தது இதுவாயிருக்குமிறே. வேதங்களும், ஆழ்வார்களும் நம்மாசார்யர்களு மெல்லாம் போனவழியிதுவாயிற்று; நமக்குமெல்லா மிப்போது மவற்றை யாதரித்தாலொரு குற்றமில்லையிறே; இது தன்னை ஸூத்ராதிகள் மற்றையார் பரிக்ரஹிக்கச்சுட்டியிறேநாம் அது தன்னைத் தவிர்ந்தது. நம்மாசார்யர்கள் போனதுபோருமிறே நமக்காதரிக்கவேண்டுவது.

(நங்கள்பிரானவனே) நமக்கு ரக்ஷகனுன வுபகாரகனவனே. "கூவுதல்வருதல்செய்திடாய்" என்று நம்பேற்றுக்கு நமக்கு ப்ரார்த்திக்கப்ராப்தியில்லையென்கிறது - அவதாரணத்தால். (உ)

---

# இரண்டாம் பாட்டு.

அவனே யகல்ஞாலம் படைத்திடந்தான் * அவனேயஃதுண்டுமிழ்ந்தானளந்தான் * அவனேயவனு மவனு மவனும் * அவனே மற்றெல்லாமுமறிந்தனமே.

**ப:—** அநந்தரம், அந்தநாராயண ஶப்தார்த்தமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரத்தைப் பண்ணிக்கொண்டு ஸர்வாத்ம பூதனானபடியை நமக்கு ப்ரகாசிப்பித்தானென்கிறார்.

(இ - ள்.) அகல் - விஸ்தீர்ணமான, ஞாலம்-ஜகத்தை, படைத்து - உத்பாதித்தானும், இடந்தான் - ப்ரளயாபத்திலே முழுகி யிடந்தெடுத்தானும், அவனே - ஸஹாயாந்தர நிரபேக்ஷனானவனே, அவனே - அவனே, அஃது - அந்த பூமியை, உண்டு - மஹாப்ரளயத்திலே வயிற்றிலே வைத்துநோக்கி, உமிழ்ந்தான் - ப்ரளயாநந்தரமுமிழ்ந்தவனும், அளந்தான் - அந்யாபிமாநம் வாராமலளந்து கொண்டவனும், அவனுமவனுமவனும் - ஸ்ருஷ்டிஸம்ஹாரரக்ஷணத்துக்குக் கடவராய், தனக்கு

---

(க) திருநெ ௪.
(உ) பெரியதிரு-அ-௯0-௩
(௩) தி-மொ-௧-௧.
(௪) தி.மொ-௬-௯0-

ப்ரகாரதயா வேதாந்தத்திலே (௧) "ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ - ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ" என்று ப்ரஸித்தரான ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளும், அவனே - அவனே, மற்று - மற்றும் ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக் கர்மீபவித்த, எல்லாமும்-ஸகல சேதநாசேதநங்களும், அவனே-அவனேயாக, அறிந்தனம்-அவன் தந்த ஜ்ஞாநத்தாலே யறிந்தோம். (௨)

ஆறு:—(அவனே) ப்ரஹ்மருத்ராதிகளு மீஶ்வரரல்லரோ, நாராயணனே ஸர்வேஶ்வரனென்னுமிட மெங்ஙனே யறிந்தபடி யென்னில்;

அவனே நிகிலஜகந்நிர்மாணேத்தரண நிகரணோத்கிரண க்ரமணாதி ஸர்வேஶ்வராஸாதாரண திவ்ய சேஷ்டிதங்களைப் பண்ணுகையாலும், சதுர்முகபசுபதி ப்ரமுக ப்ரப்ருதிஸ்தம்ப பர்யந்தமான ஸர்வாத்மாக்களுக்கு மாத்மபூதனாகையாலும், நாராயணனே ஸர்வேஶ்வரனென்னு மிடமறிந்தேனென்கிறார். (௩)

ஈடு; அவ;—கீழ் ப்ரஸ்துதமான நாராயண ஶப்தத்துக் கர்த்தத்தையருளிச்செய்கிறார்.

(அவனே யகல்ஞாலம் படைத்திடந்தான்) விஸ்த்ருதமான பூமியையுண்டாக்கி, ப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமா யெடுத்தானுமவனே. அவதாரணத்தால்-ஸ்ருஷ்ட்யாதிகளில் ஸஹகாரி நைரபேக்ஷ்யஞ்சொல்லுகிறது. (அவனேயித்யாதி) ப்ரளயங்கொள்ளாதபடி பூமியையெடுத்து வயிற்றிலே வைத்து, வெளிநாடுகாணவுமிழ்ந்து, மஹாபலியாலே யபஹ்ருதமாக, எல்லைநடந்து மீட்டுக்கொண்டான் அவனே. இந்த வவதாரணத்தால்-ஆபத்ஸகத்வாதி ரக்ஷகத்வத்திலும் ஸஹகாரிநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது.

(அவனேயித்யாதி) ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகளுடைய ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள் அவனிட்ட வழக்கு. (௧) "ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ-ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரஃ" என்கிற ப்ரஸித்தியைப் பற்றச்சொல்லுகிறார். "ஸஃ, ஸஃ, ஸஃ," என்றே போருகிறார். (அவனே மற்றெல்லாமும்) (௧) "ஸொக்ஷரஃபரமஸ்வராட் -ஸோக்ஷரஃ பரமஸ்வராட்" என்கிறபடியே, ப்ரதாநரோடு அப்ரதாநரோடுவாசியற, ஸகல சேதநாசேதநங்களும் ததநீநமே.

(௧) நாராயணாநுவாகம்.

(அறிந்தனமே) ப்ரம்ஹாதிகள் (க) "ஸர்வஸ்ய சரணம் ஸுஹ்ருத்-ஸர்வஸ்ய சரணம் ஸுஹ்ருத்" என்றிருக்கையும், அவர்களை யாஶ்ரயிப்பாருமாய்ச் செல்லாநிற்க, நீர் "அவனே" என்கிறதென்கொண்டென்னில்; * மயர்வற மதிநல மருளப்பெற்றத்தாலே யறிந்தவனாகையாலே. ஆக, இரண்டு பாட்டாலும் திருமந்த்ரத்தையும், அதிலர்த்தத்தையு மநுஸந்தித்தாராய் நின்றார். (உ)

## மூன்றாம்பாட்டு.

அறிந்தனவேதவரும் பொருள்நூல்கள்* அறிந்தன கொள்கவரும் பொருளாதல் * அறிந்தனரெல்லா மரியைவணங்கி * அறிந்தனர்நோய்களறுக்கும் மருந்தே. (ந)

**ப:**—அநந்தரம், ஸகல வேதங்களோடு வைதிகபுருஷர்களோடு வாசியற, தம்மைப்போலன்றியே அவனை யறிந்தவளவை யருளிச்செய்கிறார்.

(இ - ள்.) அறிந்தன (உ) "வேதாஹமேதம்-வேதாஹமேதம்" என்றறிந்தனவாயிருக்கிற, வேதம் - வேதங்களினுடைய, அரு - அறிதற்கரிய, பொருள் - பொருள்களையும் நிஷ்கர்ஷித்துத்தருவதான, நூல்கள் - ப்ரஹ்மஸூத்ரேதிஹாஸ புராணாதிகளான ஶாஸ்த்ரங்கள்; (ந) "யதோ வாசோ நிவர்த்தந்தே-யதோவாசோ நிவர்த்தந்தே" என்றும், (ச) "யஸ்யாமதம் தஸ்ய மதம் - யஸ்யாமதம்தஸ்யமதம்" என்றும், (ச) "அவிஜ்ஞாதம் விஜாநதாம்-அவிஜ்ஞாதம்விஜாநதாம்" என்றுஞ் சொல்லுகிற மர்யாதையாலே, அரு - அறியவரிய, பொருளாதல் - பொருளென்று, அறிந்தன - அறிந்தனவாக, கொள்க - கொள்ளவமையும். அறிந்தனர் - (ரு) "அஹம் வேத்மி மஹாத்மாநம்-அஹம்வேத்மிமஹாத்மாநம்" என்றறிந்த வைதிகபுருஷர்கள், எல்லாம் - எல்லாம், அரியை - ஸர்வபாபஹரனான ஸர்வேஶ்வரனை, வணங்கி - ஆஶ்ரயித்து, நோய்கள் - தங்களுடைய ஸாம்ஸாரிக மஹாவ்யாதியை, அறுக்கும் - அறுத்துக்கொள்ளும், மருந்தே - பரமௌஷதமாக, அறிந்தனர் - அறிந்தார்களித்தனை.

---

(க) கீதை- (உ) புருஷஸூ- (ந) தை-ஆந-
(ச) கௌஷீத- (ரு) ரா-பா-கக-கச.

நாம்ப்படியன்றியே அவன் போக்யதையையும், ஶீலாதிகளையும் பூர்ணமாகக்காட்ட வறியப்பெற்றேனென்று, கீழில் "அறிந்தனம்" என்கிற வாக்யத்தோடே யந்வயம். (௩)

ஆறு:—(அறிந்தன) அபௌருஷேயமாகையாலே நிர்த்தோஷா5திர்லப ப்ரயோஜநாநுபார்த்தவத்தாய், பரமபுருஷ யாதாத்ம்ய ஜ்ஞாபநாயைவ ப்ரவ்ருத்தமான ஸகல வேதங்களாலும். * ஜந்மாந்தர ஸஹஸ்ரார்ஜித தபோஜ்ஞாநஸமாதிகளாலே ப்ரக்ஷீணாஶேஷ கல்மஷராய்த் தன் திருவடிகளிலே ஸஞ்ஜாதபக்திகளான புருஷராலும், ஸாம்ஸாரிக ஸமஸ்த து:க்கபேஷஜதயா பரமப்ராப்யதயா வறியப்படுகிறவவனை, நான்நிர்ஹேதுகமாக வறியப்பெற்றேனென்கிறார். வேதங்களாலும் வேதவித்துக்களாலுமறியவொண்ணாதவனை, நான் நிர்ஹேதுகமாக வுள்ளபடியேயறியப்பெற்றேனென்றுமாம்.(௩)

ஈடு; அவ:—வேதங்களும், வேதார்த்த வித்துக்களான ருஷிகளு மறிந்தவளவன்றிக்கே, தன்னை யெனக்குப் பூர்ணமாக வறிவித்தானென்று ப்ரீதராகிறார்.

(அறிந்தனவித்யாதி) துர்ஜ்ஞேயார்த்தத்தை யறிந்தனவாயிருக்கிற வேதங்களாகிற ஶாஸ்த்ரங்களென்னுதல்; அறிந்தனவாயிருக்கிற வேதங்களில் துர்ஜ்ஞேயார்த்தத்தை நிஷ்கர்ஷித்துத்தரும் ப்ரஹ்மஸூத்ரம், இதிஹாஸ புராணாதிகளென்னுதல். (அறிந்தனகோள்க வரும்பொருளாதல்) "துர்ஜ்ஞேயன்" என்று மிவ்வள வறிந்தனவாகக்கொள்ள வமையும், (க) "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" (உ) "யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:" "யஸ்யாமதம் தஸ்யமதம்" (உ) "அவிஜ்ஞாதம் விஜாநதாம் - அவிஜ்ஞாதம் விஜாநதாம்" என்று மிவ்வளவறிந்தது.

(அறிந்தனரேல்லாம்) மற்றறிந்தாராயிருக்கிற பராஶர வ்யாஸ வால்மீகி ப்ரப்ருதிருஷிகளும்.(அரியை வணங்கி)ஸர்வ து:க்கநிவர்த்தகனை, வணங்கி-ஆஶ்ரயித்து. (அறிந்தனர் நோய்களறுக்கும் மருந்தே)(௩) "ஸம்ஸார துரித பேஷஜம் - ஸம்ஸாரதுரிதபேஷஜம்" என்று மிவ்வளவறிந்தார்கள். (ச) "ஸம்ஸார ஸர்ப்ப ஸந்தஷ்ட நஷ்டசேஷ்டைக பேஷஜம் - ஸம்ஸாரஸர்ப்பஸந்தஷ்டநஷ்டசேஷ்

(க) தை-ஆ- (உ) கௌஷீ-

டைகபேஷஜம்" அவனுடைய போக்யதையிலிழிந்திலர்கள், அவனுடைய நிரபேக்ஷோபாய பாவத்திலிழிந்திலர்கள். (௩)

## நான்காம்பாட்டு.

மருந்தேநங்கள்போக மகிழ்ச்சிக்கேன்று * பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான் * கருந்தேவனெம்மான் கண்ணன்விண்ணுலகம் * தருந்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே, (௪)

ப:—அநந்தரம், நித்யஸூரிபோக்யனாய், நிரதிசயஸௌலப்ய விசிஷ்டனாய்க்கொண்டு அவ்வநுபவத்தை நமக்குத் தரவிருக்கிறவனை, நெஞ்சேவிடாதே கிடாயென்கிறார்.

(இ - ள்.) நங்கள்-எங்களுடைய, போகம்-போகத்தினுடைய, மகிழ்ச்சிக்கு - வ்ருத்திக்கு, மருந்தே - வர்த்தகமானவம்ருதமே, என்று - என்று, பெரு - உத்க்ருஷ்டரான, தேவர்-ஸூரிகளுடைய, குழாங்கள்-ஸமூஹங்களானவை, பிதற்றும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யடைவுகெடக் கூப்பிடும்படி,பிரான்-அவர்களைக்களிப்பிக்கும் மஹோபகாரகனாய், கரு-கருமையையுடைய, தேவன் - திவ்யமானவிக்ரஹத்தை யுடையனாய், எம்மான் - அவ்வடிவழகைக்காட்டி யென்னை யடிமைகொண்ட, கண்ணன் - ஸர்வஸுலபனான க்ருஷ்ணனாய், அந்நிலையிலே, விண்ணுலகம்-பரமபதபோகத்தை, தரும்-தருவானான, தேவனை-ஸமாஶ்ரயணீயனை, மனமே - நெஞ்சே, சோரேல் கண்டாய் - உன் அந்யபரதையாலே யாதல், நிகர்ஷாநுஸந்தாநத்தாலே யாதல் நழுவவிடாதே கிடாய்.

மருந்தென்று-போகத்தை ஸாத்மிப்பிக்கும் பரிஹாரமாகவுமாம். (௪)

ஆறு;—(மருந்தே) உன்னழகாலே யெங்கள் போகத்துக்கு வர்த்தகனானவனேயென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரானாயிருந்துவைத்து, இங்கேவந்து பிறந்தருளி, ஆஶ்ரிதஸுலபனாய், தன்னையாஶ்ரயித்தநம்போல்வார்க்கும் நித்யஸித்தமான ஸ்வாநுபவத்தைத் தந்தருளும் ஸ்வபாவனான வெம்பெருமானை யொருவண்ணம் பெற்றோம், இனி யவனைச்சோரவிடாதேகிடாய், நன்னெஞ்சேயென்கிறார். (௪)

ஈடு; அவ:—நித்யஸூரிகளுக்கு போக்யனாய்வைத்து, க்ருஷ்ணனாய்வந் தவதரித்து, நம்மையும் அவர்கள்நடுவே வைப்பானாகவிருக்

கிறவனை விடாதே கொள்ளென்று திருவுள்ளத்தைக்குறித் தருளிச் செய்கிறார்.

(மருந்தேநங்கள்போக மகிழ்ச்சிக்கென்று) உன்னுடைய வநு பவத்தா லெங்களுக்குவரு மாநந்தத்துக்கு வர்த்தகனானவனே. இப் படிச் சொல்லுகிறவர்கள் தாநாரென்னில் (பெருந்தேவர்) அஸ்ப் ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள், (குழாங்கள்) அவர்கள், கிண்ணகத்திலிழிவாரைப்போலே திரள்திரளாக வாயிற்றிழிவது, (பிதற்றும்) ஜ்வராபிபதிதரைப்போலே அக்ரமமாகக் கூப்பிடா நிற்பர்கள். (பிரான்) அவர்களுக்குத் தன்னை யநுபவிக்கக்கொடுத்த வுபகாரகன்.

(கருந்தேவன்) காளமேகநிபஸ்யாமமாய், திவ்யமான வடிவை யுடையவன். (எம்மான்) அவ்வடிவைக்காட்டி யென்னை யெழுதிக் கொண்டவன். நித்யஸூரிகளுக்குப்படிவிடும் வடிவைக்கிடீர்! எனக்கு உபகரித்தது. (கண்ணன்) தன்னிலைகுலையாமல்நின்று உபகரிக்கை யன்றிக்கே, அவதரித்துவந்துஉபகரிக்குமவன். (விண்ணுலகந்தருந் தேவனை) பரமபதத்தைத் தருவானாயிருக்கிற ஸர்வேஸ்வரனை. (சோரேல்கண்டாய்மனமே) அவனை யுடம்புவெளுக்கப்பண்ணாதே கிடாய்நெஞ்சே; இவன் விடுகையாவது அவனுக்கிழவுபோலேகாணு ம். அவன்பண்ணின க்ருஷி பலித்ததில்லையாமே; இல்லையாகில் அவன் வைலக்ஷண்யத்தை புத்திபண்ணாதே, "ஸுலபன்" என் னுக் காற்கடைக் கொள்ளாதேகிடாய். (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

மனமேயுன்னை வல்வினையேனிரந்து * கனமே சோல்லினே னிது சோரேல்கண்டாய் * புனமேவிய பூந்தண்டுழாயலங்கல் * இனமேதுமிலானை யடைவதுமே.

ப:—அநந்தரம், போக்யதையினுடைய நிரூபக வைலக்ஷண்யத்தை யுடையவனை நாம் கிட்டவேணுமென்னுமிடத்தைச் சிக்கெனச்சொன் னேன், இது நழுவவிடாதே கொள்ளென்கிறார்.

(இ - ள்.) மனமே - நெஞ்சே, உன்னை - என்னிலுமிவ்விஷயத்தில் ஸத்வரமானவுன்னை; வல்வினையேன் - விளம்பாக்ஷமம் படிப்ரபலபா

பத்தையுடையனான வென்சாபலத்தாலே, இரந்து - அர்த்தித்து, கன மே - த்ருடமாகவே, சொல்லினேன் - சொன்னேன், இது - இத்தை சோரேல்கண்டாய் - நழுவவிடாதேகொள்; எத்தையென்னில்; புனம் தன்னிலத்தில், மேவிய - வளர்த்தியாலே, பூ - செவ்விய, தண்டுழாய் திருத்துழாய், அலங்கல் - மாலையையுடையனாய், இந்தபோக்யதைக்கு எதும் - ஒருப்ரகாரத்தாலும், இனம் - ஒப்பு, இலானை - இல்லாதவைலக்ஷண்யத்தையுடையவனை, அடைவதும்-கிட்டவேணுமென்கிறவித்தை.

ஆறு;—(மனமே) பரமபோக்யனைப் தன்னோடொப்பாரின்றிக்கே யிருக்கிறவனை விடாதே கிடாய்நெஞ்சமே, உனக்கடியேனாயிருக்கிறேனென்று பின்னையும் நெஞ்சையிரக்கிறார். (௫)

ஈடு; அவ;—நெஞ்சே அவனைவிடாதே கிடாயென்றார்கீழ்;அவ்வார்த்தை தன்னை யோலக்கவார்த்தையாக நினைத்திராதே கிடாயென்கிறாரிதில்,

(மனமேயுன்னை) மோக்ஷஹேதுவாய் முற்பட்டு நிற்கிறவுன்னையன்றோ, பிற்பாடரைச் சொல்லுமாபோலே யிருக்கநான்சொல்லுகிறது. பகவத் ப்ராவண்யம் உனக்கு ஸ்வாபாவிகமாயிருக்க, என் செல்லாமையாலே சொல்லுகிறேனத்தனையிறே. (க)"முந்துற்றநெஞ்சே-இயற்றுவாயெம்மொடுநீகூடி" என்று - எனக்குஞ்சாற்கட்டவேண்டும்படி யநுபவத்திலே முற்பட்டுநிற்கிறவுன்னை. (வல்வினையேன்) பகவத்விஷயத்தில் க்ரமப்ராப்தி பற்றாதபடியான பாபத்தைப் பண்ணினேன்; உன்னையிரக்கவேண்டி யிரக்கிறேனல்லேன்,என் சாபலாதிசயத்தாலே யிரக்கிறேனித்தனை. (இரந்துகனமே சொல்லினேன்) உன்னைக்கால்பிடித்து த்ருடமாகச்சொன்னேன். இரந்து சொல்லுகைக்கு மணக்கால்நம்பியோடொப்பர்காணும்.

(இதுசோரேல்கண்டாய்) இன்னமும்நானே "பகவத்ப்ராவண்யமாகாது, இத்தைத்தவிரவேணும்" என்றுசொன்னாலும், நீயித்தைநெகிழவிடாதேகிடாய். கனம் - பொன், உனக்குப் பரமார்த்தத்தைச்சொன்னேனென்கை. (உ) "சாயால்கரியானை" இத்யாதி. (இதுசோரேல்) எத்தைத்தான் நீரிப்படிசொல்லுகிறதென்ன (புனமித்யாதி) நிரதிசயபோக்யனானவனை யாஸ்ரயிக்கையை. புனத்திலே மேவியிருப்பதான வழகியதிருத்துழாய்மாலையை யுடையவனாகை

(க) பெரியதிருவ-க- (உ) பெரியதிருவ-கச-

யாலே யொப்பின்றிக்கே யிருக்கிறவனை. அத்தோள்மாலையையுடைய வஞுகையிறே ஸர்வாதிகஞுகையாவது.

ஒரு திருமுளைத்திருநாளினன்றாக விப்பாட்டை யருளிச்செய்து, முன்னாள் கையார்சக்கரத்துக்குப் புறப்பட்டருளினபடி திருவுள்ளத்திலேகிடந்து, "புனமேவியபூந்தண்டுழாயலங்கலினமேதுமிலாஞுகையாவது - நேற்றுப்புறப்பட்டருளினபடியிறே" என்றருளிச்செய்தார். "அடைவது-சொல்லினேன், இதுசோரேல்கண்டாய்" என்று க்ரியையாகவுமாம்; எத்தைநீர்சொல்லுகிறதென்ன; இனமேதுமிலானை யடைவதென்று க்ரியையாகவுமாம். (ரு)

---

## ஆறாம்பாட்டு.

அடைவதுமணியார் மலர்மங்கைதோள் * மிடைவதுமசுரர்க் குவெம்போர்களே * கடைவதுங்கடலுளமுதம் * என்மன முடைவதுமவற்கே யொருங்காகவே. (கூ)

ப:—அநந்தரம், அநிஷ்டநிவ்ருத்தீஷ்ட ப்ராப்தி ஹேதுவான லக்ஷ்மீஸம்பந்தத்தை யுடையனானவனைப்பற்ற வென்னெஞ்சமொருபடிப் படஶிதிலமாகாநின்றதென்கிறார்.

(இ - ள்.) மலர்-பத்மவாஸிநியான வாபிஜாத்யத்தையும், மங்கை - பருவத்தையுமுடையளான லக்ஷ்மியினுடைய, அணி-ஆபரணங்களாலே ஆர் - நெருங்கின, தோள் - திருத்தோளையே, அடைவதும் - ஸம்ஶ்லேஷிப்பதும், அத்தோளோடுண்டான பரிஷ்வங்கம் வித்திக்கைக்காக, அசுரர்க்கு-ப்ரதிகூலரான வஸுரர்களுக்காற்றவரிய, வெம்-வெவ்விய, போர்களே - போர்களையே, மிடைவதும் - நெருங்கப்பண்ணுவதும், ஆஶ்ரிதார்த்தமாக, கடலுள் - கடலுக்குள்ளில், அமுதம்-அம்ருதத்தை, கடைவதும் - கடைவதும், அவற்கே-இப்படி லக்ஷ்மீவிஶிஷ்டனுமாய்-அநிஷ்ட நிவர்த்தகனுமாய், இஷ்டப்ராபகனுமானவவனுக்கே, என் - என், மனம் - நெஞ்சானது; ஒருங்காகவே-ஒருபடிப்பட, உடைவதும் - ஶிதிலமாகாநின்றது.

ஆறு;—( அடைவதும் ) "அவனைவிடாதேகிடாய்" என்று நான்சொல்லி முடிப்பதற்குமுன்னே அவனுடைய செயல்களிலே யென்னெஞ்சானது ஒருகடலுடைந்தாப்போலே யுடைந்து கிடக்கப்பெற்றேனென்று தம்முடைய நெஞ்சைப் புகழுகிறார். (கூ)

ஈடு; அவ;—தம்முடைய வுபதேசம்பலித்து, இவ்விஷயத்தி லே திருவுள்ளம் ப்ரிதிலமாகாநின்றதென்று ப்ரீதராகிறார்.

( அடைவதுமணியார் மலர்மங்கைதோள் ) மிகவுமழகிதான பெரியபிராட்டியார் திருத்தோளோடேஸம்ஶ்லேஷிப்பதும். அவன் றான் வைஶ்வரூப்யங்கொண்டிழிந்தாலும் தோளுக்கவ்வருகுபோக மாட்டான். (அணியார்மலர்மங்கை) (க) "மார்வத்துமாலை" என் கிறபடியே திருமார்வுக்கெல்லாம் தானேயாபரணமாகப் போரும்படி யாக விருப்பாளாய், போக்யதையால் குறைவற்றிருக்கிறவள் தோ ளோடேயாயிற்றணைவது.

( மிடைவதுமசுரர்க்கு வெம்போர்களே ) அவள் தோளணைக் கைக்கிடும் பச்சை (உ) "ஹ்ரூராரவஶிஷ்யஸஜே-பர்த்தாரம்பரிஷ ஸ்வஜே" என்றிறே அவளணைப்பது, ஆஶ்ரித விரோதிகளுக்கு வெம்போர்களே நெருங்கப்பண்ணுவது மென்னுதல், அவர்களை முடிக்கும்விரகே சிந்தியாநிற்குமென்னுதல்.

( கடைவதுங்கடலுளமுதம் ) ப்ரயோஜநாந்தரபருடைய ப்ர யோஜநத்துக்காகக்கடைவது மென்னுதல், பிராட்டியைப்பெறுகைக்கு வ்யாபரிக்கும்படி சொல்லுகிறதென்னுதல். அவளை ஸம்ஶ்லேஷிக் கும்படி சொல்லிற்று, அதுக்கிடும் பச்சைசொல்லிற்று, அவளைப் பெறுகைக்கு யத்நம்பண்ணினபடி சொல்லிற்று. இவர்திருவுள்ள முடைகுலைப் படுகைக்குஹேதுக்களிவை.

( என்மனமித்யாதி ) என்னுடையமநஸ்ஸு ஒருமடைப்பட வுடைகுலைப்படாநிற்பதும் ஏவம்விதமான சேஷ்டிதங்களை யுடைய வனுக்கே. அவன் * பணிக்கடலைக்கடைய, இவர் * மனக்கடலுடை யப்புக்கது. விரகராயிருப்பார், கோழைகளாயிருப்பாரை த்ரவ்யம் வாங்க நினைத்தால், முந்துற மிடுக்கராயிருப்பாரை நெருக்கிவாங்க வே இவர்கள் தாங்களே கொடுசென்று கொடுப்பார்களிறே; அவனும் மஹாத்தத்வமானகடலை யுலக்கைவிடுகையிட்டுநெருக்கி அதின் நல் லுயிரைவாங்கி, இவருடைய திருவுள்ளமுடையத் தொடங்கிற்று.

---

(க) கம-கம-உ. (உ) ரா-ஆர-௩ம-௩கூ-

# ஏழாம்பாட்டு.

ஆகஞ்சேர்நரசிங்கமதாகி * ஓராகம்வள்ளுகிராற் பிளந்தானுறை * மாகவைகுந்தங்காண்பதற்கு * என்மனமேகமெண்ணுமிராப்பகலின்றியே. (எ)

ப:—அநந்தரம், ப்ரபலாநிஷ்ட பஞ்ஜகனானவன் வர்த்திக்கிற ப்ராப்யபூமியே வேணுமென்று எப்போது மென்னெஞ்சமெண்ணா நின்றதென்கிறார்.

(இ-ள்.) ஆகம் - ஒருவடிவிலே, சேர் - பொருந்துவிக்கப்பட்ட, நரசிங்கமதாகி - நரத்வ ஸிம்ஹத்வங்களை யுடைத்தாய்க்கொண்டு, ஹிரண்யனுடைய, ஓர் - அத்விதீயமான, ஆகம் - மார்வை, வள் - வளைந்த, உகிரால் - உகிராலே, பிளந்தான் - பிளந்தவன், உறை - வர்த்திக்கிற, மாகவைகுந்தம் - ஸ்ரீவைகுண்டத்தை, காண்பதற்கு - காண்கைக்கு, என் - என், மனம்-நெஞ்சானது, இராப்பகல்-இராப்பகலாக, இன்றி- வேறுபாடின்றியே, ஏகம் - ஏகப்ரமாகாரக, எண்ணும்-எண்ணாநின்றது.

ஆறு;—(ஆகஞ்சேர்) இந்த வாஸ்சர்யத்தை யநுபவித்து, பின்னையும், ஏவம்விதசேஷ்டிதங்களைச் செய்தருளினவன்றன்னை அவனிருக்கிற திருநாட்டிலேசென்று காணவேணுமென் றாசைப்படாநின்றது; அதுவோ அதிதூரமாயிராநின்றது; என்னெஞ்சைக் கொண் டென்செய்கே னென்கிறார். (எ)

ஈடு; அவ;—அவன் நித்யவாஸம்பண்ணுகிற பரமபதத்தைச் சென்று காணவேணுமென்னாநின்ற தென்னெஞ்சென்கிறார்.

(ஆகஞ்சேரித்யர்தி) நரத்வஸிம்ஹத்வங்கள், சேர்ப்பாலுங் கண்டசர்க்கரையும்போலே ஸங்கடிதமான நர்ஸிம்ஹமாயென்னுதல்; நரஸிம்ஹத்தினுடையவடிவு இவர்நெஞ்சிலே சேர்ந்தபடியென்னுதல்; (க) "ஹ்ருதராவலவாணாநாம்-ஸ்மரந்ராகவபாணாநாம்" என்கிறபடியே மறக்கவொண்ணாதபடி திருவுள்ளத்திலே சேர்ந்தபடியைச் சொல்லிற்றுதல்; இரண்டுவடிவையுஞ் சேர்த்துக்கொடுவந்து தோன்றினபோது. இவர்நெஞ்சுக் கினிதாய்ச் சேர்ந்திருந்தபடியைச் சொல்லுதல். (ஓராகம்) அத்விதீயமான முருட்டுடம்பு. (வள்ளுகிரால்) கூரியவுகிர். வளைந்தவுகிரென்றுமாம். (பிளந்தானுறை) அநாயாஸேந இழித்துப்பொகட்டவன் நித்யவாஸம்பண்ணுகிற

(க) ரா-யு-கூO-ரு-

(மாகவைகுந்தம்) அக்ஷரலிம்ஹம் வர்த்திக்கிற முழுஞ்சுகாண வாயிற் ருசைப்படுகிறது. (க) "பரமாகாஶம்-பரமாகாஶம்" என்னக்கடவதிறே. என்னுடைய ஹ்ருதயமானது, எப்போதுமொக்க வுச்சிவீடுவிடாதே யித்தையே மநோரதியாநின்றது. (இராப்பகலின்றியே) இரா வொருகார்யமும், பகலொருகார்யமுமாயிறே நாட்டார்க்கிருப்பது; இவர்க்கெல்லாக்காலத்திலு மிதுவேயாயிற்று. (உ) (ஸமா ஸஹஸ்ராணி ராவஸ்ய நிவேஶநே - ஸமாத்வாதஶ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஶநே" என்று பிராட்டி திருவயோத்யையை நினைத்தாப்போலேயாயிற்று, இவர் திருவுள்ளத்துக்குப் பரமபதம் ஸ்வதேசமாயிருக்கிறபடி. (எ)

---

# எட்டாம்பாட்டு.

இன்றிப்போகவிருவினையுங்கெடுத்து* ஒன்றியாக்கைபுகாமை யுய்யக்கொள்வான் * நின்றவேங்கடம் நீணிலத்துள்ளது * சென்று தேவர்கள் கைதொழுவார்களே. (அ)

ப:—அநந்தரம், ஆஸந்நமாக வவன்வர்த்திக்கிற வபீஷ்டதேஶமாயுள்ள திருமலையைச்சென்றநுபவிப்பார் ஸூரிஸமராளிறேயென்று தம்முடையமைஶ்தில்யத்தை யருளிச்செய்கிறார்.

(இ - ள். இருவினையும் - புண்யபாபரூபமான கர்மங்களிரண்டையும். இன்றி - ஸத்தையழிந்து, போக-போம்படி, கெடுத்து-நசிப்பித்து, ஒன்றி - துர்விவேசமாம்படி அசித்தோடே ஸம்ஸ்ருஷ்டனாய், ஆக்கை புகாமை - தேவாதிஶரீரப்ரவேசம் பண்ணாதபடி, உய்யக்கொள்வான் அடிமைகொண்டுஜ்ஜீவிப்பிக்குமவன். நின்ற - அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிற, வேங்கடம் - திருமலையானது, நீணிலத்து - ஶ்லாக்ய பூமியிலே, உள்ளது-உண்டாயிருப்பதொன்று, சென்று - கிட்டி, கைதொழுவார்கள் - கைதொழுமவர்கள், தேவர்களே - மநுஷ்யரல்லரே, தேவர்களன்றோ (அ)

ஆறு;—(இன்றிப்போக) அவனைக் காண்கைக்குத் திருநாட்டிலே போகவேணுமோ, இங்கே யணித்தாகத் திருமலையிலேயன்றோ அவன் நின்றருளுகிறதென்னில்; அத்தாலென் எனக்கு; அங்குச்சென்றடிமை செய்வார்* அபர்வருமமரர்களல்லரோ வென்கிறார்.

---

(க) (உ) ரா ஸு ௩௩-கஎ.

எச திருவாய்மொழி, கூ-ப, ௩-தி, கூ-பா, தொழுது வ்யாக்யாநம்.

ஈடு; அவ;—இஶ்ஶரீர ஸம்பந்தமற்றால் போயநுபவிக்கும் பரமபதம் வேணுமோ, இஶ்ஶரீரத்தோடே யநுபவிக்குந் திருமலைபூமியதன்றோ, ஆனாலும் நமக்குத் திருமலையோடு பரமபதத்தோடு வாசியற்றதிறே யென்கிறார்.

(இன்றிப்போகவிருவினையுங்கெடுத்து) புண்யபாபரூப கர்மங்களானவை, இன்றிப்போம்படி - ஸவாஸநமாகப் போம்படிபண்ணி. தானே போக்கிக்கொள்ளப் பார்க்குமன்றிறே சிறிது கிடக்கப்போவது. (ஒன்றியித்யாதி) பின்னையும் ருசிவாஸனைகிடக்கில், அசித்தத்வத்தோடேபோய்க்கலசி, ஶரீரப்ரவேஶம்பண்ணி, அத்தால் வரும் க்லேஶமநுபவிக்க வேணுமிறே; அதுசெய்யாமை. (உய்யக்கோள்வானித்யாதி) (க) " உயிரளிப்பான் " என்கிறபடியே, ஸர்வரக்ஷணார்த்தமாக வவஸரப்ரதீக்ஷணைக்கொண்டுநிற்கிற திருமலை.

(நீணிலத்துள்ளது) திருமலையை யுடைத்தாகையாலே ஶ்லாக்யமான பூமியிலுள்ளது திருமலை. அத்தால் பெற்றதென் (சென்றித்யாதி) அவ்வளவு கால்நடைதந்து போகவல்லார் பாக்யாதிகரிறே; (உ) "நதேதசநஷ்டார்தைவாஜ்ஞ - நதேமநுஷ்யாதேவாஸ்தே' என்னுமாபோலே, அவனுடைய ஶீலாதிகுணங்களை யநுஸந்தித்துச் சொல்லுகிறார். ப்ரேமாந்தர்க்கு அவ்விடத்தோடு இவ்விடத்தோடு வாசியற்றதிறே யெட்டாமைக்கு. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

தொழுதுமாமலர்நீர் சுடர்தூபங்கொண்டு * எழுதுமென்னுமிது மிகையாதலில் * பழுதில்தொல்புகழ்ப் பாம்பணைப்பள்ளியாய் * தழுவுமாறறியேனுன்தாள்களே. (கூ)

ப:—அநந்தரம், ஆஶ்ரயணோத்யோகமும் மிகையாம்படியான வுன்னுடைய ஶீலாதிஶயத்தை யநுஸந்தித்து, உன்திருவடிகளிலொரு ப்ரவ்ருத்திக்கு க்ஷமனன்றிலேனென்கிறார்.

(இ - ள்.) மா - ஶ்லாக்யமான, மலர் - புஷ்பத்தையும், நீர் - அர்க்யாதிஜலத்தையும், சுடர்தூபம் - தீபதூபங்களையும், கொண்டு - ஸ்வீகரித்துக்கொண்டு, தொழுது - தொழுகைக்காக, எழுதும் - உத்யோகிப்

(க) திருவி-க- (உ) ரா-அயோ-கூஅ-கூக-

போம், என்னுமிது - என்னுமிது-உன்சீலாதிசயத்தாலே, மிகை-மிகையாய், ஆதலில் - இருத்தலால், பழுது - தூராராததையடியானபழுது, இல் - இன்றியே, தொல்புகழ் - ஸ்வாபாவிக ஸௌஶீல்ய ப்ரதையையுடையையாய், அதுக்கு ஸூசகமாம்படி, பாம்பு-திருவனந்தாழ்வானை, அணை - படுக்கையாய்க்கொண்டு, பள்ளியாய்-நித்யஸம்ஶ்லேஷம்பண்ணிக் கண்வளர்ந்தருளுகிறவனே, உன் - உன், தாள்கள் - திருவடிகளை தழுவும் ஸம்ஶ்லேஷிக்கும், ஆறு-ப்ரகாரம், அறியேன்-அறிகிறிலேன்.

அங்குத்தைக்கொரு ப்ரவ்ருத்தி யபேக்ஷிதையல்ல, நானொரு ப்ரவ்ருத்திக்கு க்ஷமனுகிறிலேனென்று கருத்து. (௬)

ஆறு;—(தொழுது) உமக்குத்தானங்கேசென் றடிமைசெய்கைக்குத் தட்டென்னென்னில்;

ஹேய ப்ரத்யநீக கல்யாணகுண விசிஷ்ட ஶேஷஶேஷாஶந கருடப்ரமுக திவ்யபுருஷர்களாலே பரிசரித சரணயுகளனை வுன் திருவடிமலர்களிலே, அத்யந்த மபக்ருஷ்டனை நானடிமைசெய்கைக் கர்ஹனோவெனகிறார். (௬)

ஈடு; அவ:—இப்படி ஸௌலப்யனை வுன்திருவடிகளிலே கிட்டப் பெற்றாலும், ஆஶ்ரயணத்தில் ஆபிமுக்யத்திலே ஸந்துஷ்டனாமுன் ஶீலவத்தையையநுஸந்தித்து, ஒருப்ரவ்ருத்திபண்ண க்ஷமனுகிறிலேனென்கிறார்.

அன்றிக்கே, "இங்ஙனேயொரு மூன்றுபாட்டுத் தம்முடைய வயோக்யதையைச் சொல்லுகிறார்" என்பாருமுண்டு; அதில்லையிறே - * கண்கள்சிவந்துக்குப் பின்பிவர்க்கு; "இத்தலையாலேயொன்றை யர்த்தித்துப்பெறுகை மிகையாம்படியாயிருக் கிறவனுடைய வுபாயபாவத்தைச் சொல்லுகிறார்" என்பாருமுண்டு. இவையெல்லாமல்ல, "அவன் ஸந்நிதியில் க்ரமத்தில் பரிமாற வொண்ணாதபடி யழிக்குமவனுடைய சீலகுணத்தைச் சொல்லுகிறது" என்று நம்முடையவர்கள் நிர்வஹிக்கும்படி.

(தொழுதித்யாதி) "ஶ்லாக்யமான புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டடிமைசெய்து உஜ்ஜீவிப்போம்" என்றால், இது மிகையாம் படியன்றோ உன்னுடைய ஶீலவத்தையிருப்பது. (க) "அநந்யத்தி-ண-[illegible]-அந்யத்பூர்ணதபாம்கும்பாத்" என்கிறவிஷயமிறே.

(க) பாரத-உத்யோ-

(ஆதலில்) இப்படி சீலாதிகனுகையாலே, "தூராராதன்" என்கிறபழுதின்றிக்கே, ஸ்வாபாவிகமான ஸ்வாராதத்வ ப்ரதையையுடையையாய், அதுக்கடியாகத் திருவநந்தாழ்வானோடே ஸம்ஶ்லேஷிக்கிறவனே. (தழுவுமாறறியேன்) 'உன் திருவடிகளை யணையும் விரகறிகிறிலேன். பலஹாநியாலே முதலிலேகிட்டுகையரிது, கிட்டினுலும் சீலாதிக்யத்தை யநுஸந்தித்தொரு ப்ரவ்ருத்திபண்ண க்ஷமனுகிறிலேன். (கூ)

# பத்தாம்பாட்டு

தாளதாமரையானுனதுந்தியான் * வாள்கோள்நீள்மழுவாளியுன்னுகத்தான் * ஆளராய்த் தொழுவாருமமரர்கள் * நாளுமென் புகழ்கோவுனசீலமே. (க0)

ப:—அநந்தரம், ப்ரயோஜநாந்தரபரார்க்கும் முகங்கொடுக்கு முன்னுடையசீலம் வாசாமகோசரமஹிமாவன்றோ வென்கிறார்.

(இ - ள்.) தாள - தாளையுடைத்தான, தாமரையான் - தாமரையிலேபிறந்தப்ரஹ்மா, உனது, உந்தியான்-உந்தியை யாஶ்ரயமாக வுடையவன்; வாள் - ஒளியை, கொள் - உடைத்தான, நீள் - பெரிய, மழு - பரசுவை, ஆளி - ஆண்டுகொண்டுபோருகிறருத்ரன், உன் - உன், ஆகத்தான் - திருமேனியிலொருபக்கத்தான்; ஆளராய் - ஸமாஶ்ரயணோபாதிஶேஷபூதராய், தொழுவாரும் - தொழுமவர்கள், அமரர்கள் ப்ரயோஜநாந்தரபரரானதேவதாந்தரவர்க்கம்; இப்படியநவதிகமான, உன - உன்னுடைய, சீலம் - சீலத்தை, நாளும் - காலதத்த்வமெல்லாங்கூடினுலும், என் - எத்தைச்சொல்லி, புகழ்கோ - புகழ்வேன். (க)

ஆறு: (தாளதாமரையான்) தம்முடைய வகர்ஹாநுஸந்தாநத்தாலே அவன்திருவடிகளி லடிமைசெய்கையில் தமக்குப்பிறந்த கூச்சமெல்லாம் போம்படியாகத் திருவேங்கட முடையானுடைய நிரவதிக ஸௌசீல்ய குணத்தைக்கண்டு புகழுகிறார். (க0)

ஈடு:-அவ;—தாஸ்யச்சுவடறியாத ப்ரஹ்மாதிகளுக்கும் ஸமாஶ்ரயணீயனுயிருக்கிற வுன்னுடைய ஶீலம் என்னுல் புகழ்ந்துமுடிக்கவொண்ணுதென்கிறார்.

(தாளதாமரையா னுனதுந்தியான்) தாமரைப்பூவை யுத்பத்திஸ்தாநமாக வுடைய ப்ரஹ்மா, உன் திருநாபியைப்பற்றி வர்த்தி

யாநின்றான்; கமலயோநித்வத்தால் வந்த தூர்மாநத்தையுடையவ னுக்கிறே யுடம்புகொடுத்தது. (வாளித்யாதி) ஒளியையுடைத்தாய், தொடங்கினகார்யத்தை முடிய நடத்தவற்றான மழுவையுடைய ருத்ரன், உன்திருமேனியி லேகதேசத்தைப்பற்றி வர்த்தியா நின்றான். அநந்யஸாரணத்வ லக்ஷணமான* தொடையொத்ததுளபமுங் கூடையுமாய்ப் புகுந்திருக்கிற னல்லனே.

(ஆளராய்த்தொழுவாருமமரர்கள்) அடியாரா யாஸ்ரயிக்கிறவர்களும் தேவர்கள். நித்யஸூரிகள்செய்யு மடிமையிறே, அமரத்வஸாம்யத்தாலே "நாங்களுமீஸ்வரர்கள்" என்றிருக்குமவர்கள் செய்கிறது. (நாளுமித்யாதி) காலத்தையடைய வொருபோகியாக்கி யெனக்குப் புகழுகைக் குறைப்பாக்கி னால்தான், என்னாலே புகழ்ந்து தலைக்கட்டலா யிருந்ததோ வுன்னுடைய சீலகுணம். [உனசீலம்-நாளுமென்புகழ்கோ.] (௧௦)

## பதினொன்றாம்பாட்டு.

சீலமேல்லையிலானடிமேல்* அணிகோலநீள்குருகூர்ச்சடகோபன்சோல் * மாலையாயிரத்துள்ளிவைபத்தினின் பாலர்* வைகுந்தமேறுதல் பாண்மையே (௧௧)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக் பரமபதப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

(இ - ள்.) சீலமெல்லையிலான் - அபர்யந்தமான சீலத்தையுடையவன், அடிமேல் - திருவடிகளின்மேலே, அணி - அணியப்பட்டதாய், கோலம் - தர்ஸநீயமானரூபமாய், நீள் - ஆயாமவிஸ்தார வத்தான, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய சொல் - ஸப்தாத்மகமான, மாலை - மாலையாயிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்தினின் - இப்பத்தினுடைய, பாலர் - பரிஸரத்திலே ஸப்தமுகத்தாலேயாதல் அர்த்த முகத்தாலேயாதல் அந்வயமுடையவர்கள், வைகுந்தம் - பரமபதத்தில், ஏறுதல் - ஏறப்பெறுகை, பான்மை - ஸ்வபாவம். இது - கலிவிருத்தம். (௧௧)

ஆறு:—(சீலம்) சீலமெல்லையிலாறு யிருந்த திருவேங்கடமுடையான் திருவடிகளுக்குத் திருவணிகலமா யிருந்த வித்திரு

வாய்மொழியோடே யொருஸம்பந்தமுடையார், வைகுந்தமேறுகை யாஸ்சர்யமன்றென்கிறார். (கக)

ஈடு; அவ;—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் பரமபதத்தே செல்லுகையாஸ்சர்யமன்று, ப்ராப்தமென்கிறார்.

(சீலமேல்லேயிலானடிமேல்) அமர்யாதசீலனானவனுடைய திருவடிகளிலே. இத்திருவாய்மொழியால் ப்ரதிபாதிக்கப்பட்டது-சீலாதிக்யமாயிற்று, அத்தை நிகமிக்கிறார். (அணிகோலநீள் குருகூர்ச் சடகோபன் சோன்மாலே) அழகுமிக்கிருந்துள்ள திருநகரியையுடைய வாழ்வார். அன்றிக்கே, கோலநீளென்று - ஸம்பந்தந்தானேயுண்டாகையாலே "அடிமேலணி - மாலே" என்று கூட்டிக்கொள்ளவுமாம்.

(ஆயிரத்துள்ளிவைபத்தினின்பாலர்) இப்பத்தின் பரிஸரத்திலேயுள்ராமவர்கள். உச்சிமாத்ரம், பாடதாரணம், அர்த்தாநுஸந்தாநம், ஒருவழியாலே யிதிலேயந்வய முடையவர்கள். (வைகுந்தமித்யாதி) பரமபதத்திலே செல்லுகை ப்ராப்தம். * மாகவைகுந்தங்காண்பதற் கேகமெண்ணினரிவர்; இப்பாசுரத்தே யந்வயித்தவர்களுக்குப்ரார்த்த்யமன்று, ப்ராப்தம். பித்ருதநம் புத்ரனுக்கு தாயப்ராப்தமாயிருக்குமிறே. (கக)

மூன்றும் திருவாய்மொழி முற்றிற்று.

---



ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

# ஒன்பதாம்பத்து.

# நான்காம் திருவாய்மொழி.

## மையார் ப்ரவேஶங்கள்.

ஆறு:—(மையார் கருங்கண்ணி) இப்படி யெம்பெருமானுடைய ஸௌஶீல்யாநுஸந்தாநத்தாலே நிர்ப்பீகராய், ததநுபவத்திலே ப்ரவ்ருத்தராய் அதுகைவாராமையாலே தாம் அவஸந்நராய், அவஸந்நஸர்வகரணருமாயிருந்தவாழ்வார், *

ப:—காலாந்திருவாய்மொழியில், கீழே அவன்சீலாதிசயத்தை யநுஸந்தித்துஶிதிலரானவர், "ஶீலவானாய் ஶ்ரிய꞉பதியானவனையநுபவிக்கவேணும்" என்றபிநிவேஶித்து, அந்தவபிநிவேஶாநுரூபமான லக்ஷ்மீ விஶிஷ்டத்வத்தையும், அத்யபிநிவேஶவிஷயத்வத்தையும், ஆஶ்ரிதரக்ஷகத்வத்தையும, அபேக்ஷப்ரதிஸம்பந்தித்வத்தையும், காரணத்வாதிகுணயோகத்தையும், பரமபத நிலயத்வத்தையும், ஹ்ருத்யதாதிஶயத்தையும், ஸர்வாந்தராத்மத்வாதிகளையும், கிஞ்சித்காரவிஷயத்வத்தையும், நிருபாதிகஸம்பந்தத்தையு மநுஸந்தித்து "ஏவம்பூதனானவனையநுபவிக்கவேணும்" என்கிற ஆகாங்க்ஷையாலே, தம்மோடு கரணங்களோடு வாசியற வீடுபட்ட விவருடைய வார்த்திதீரும்படி முகங்காட்டவநுபவித்து ஸந்துஷ்டராய், ஆஶ்ரிதாநுபாவ்யமான திருவாய்மொழியை அவன்திருவடிகளிலே பாடி யுஜ்ஜீவிக்கப்பெற்றேனென்று மிகவும் ஹ்ருஷ்டராகிறார்.

ஈடு;—ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்துக்கடி அவன்றானாயிருக்கும்; சீலாதிகுணங்களுக்கடி பிராட்டியாயிருக்கும். இதிலே வந்தவாறே ஸ்வாதீனமன்றிக்கே யொழிகிறதோவென்னில்; அங்ஙனுமாயிராது; நிரூபித்தால், அந்தஸ்வாதந்த்ர்யத்தோபாதி இவளோட்டைச்சேர்த்தி நித்யமாயிருக்கையாலே. பாஷ்யகாரர்மேலே (க) "ஸ்ரீவல்லப꞉—ஸ்ரீவல்லப꞉" என்னநினைத்து, ஸ்வரூபத்தை நிரூபிக்கிறவிடத்திலே ஜ்ஞாநாநந்தங்களுக்கு முன்னே (க) "ஶ்ரிய꞉பதி꞉ – நிஶ்ய꞉பதி꞉" என்றாரிறே. இப்படியிருக்கிறவனுடைய சீலகுணத்தையும், அதுக்கடியான ஶ்ரிய꞉பதித்வத்தையு மநுஸந்தித்தார் – கீழிற்றிருவாய்மொழியிலே;

---

(க) கீதாபாஷ்யம்.

கடுகப்பெறவேண்டும்படி குணாதிகனுமாய், பெறுவிப்பாருமரு கே யுண்டாயிருக்கையாலே, இப்போதே பெறவேண்டும்படியான சாபலம்பிறந்தது; அப்போதே பெறக்காணமையாலேவிஷயாநுரூப மாக விடாய்த்தார்; பெறவேண்டும்படி குணாதிகனுமாய், பெறுவிப் பாருமருகேயுண்டாயிருக்க, பெறாவிட்டா லாறியிருக்கப்போகாதே. ஆகையாலே, சேதநஸமாதியாலே தனித்தனியே கரணங்களும்விடா ய்த்து, தாமும் விடாய்த்தார்* முடியானேயில் வாஸனையாலே; இது தானெல்லாத் திருவாய்மொழியோடுங்கூடி யிருப்பதொன்றாயிற்று- ஒரு-"செஞ்சொற்கவி," "வீற்றிருந்தேழுலகு," "என்றைக்கு மென்னை," "முடியானே," இவையித்தனையிலுமோடுகிற பாவவ் ருத்தியையுடைத்தாயாயிற்றிருப்பது.

இப்படி யிந்த்ரியங்களும் தனித்தனியே விடாய்த்துத் தாமும் விடாய்த்தபடி. ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய வார்த்திக்குத்தோற்றி ... ரான் "க்ரமத்திலேவந்தான்" என்னலாமபடி ஆறாமை க்கு க்ரமத்திலே தோற்றப்பற்றாதே, தூணிலேவந்துதோற்றினாப் போலே தோற்றவேண்டும்படியாயிற்று. இப்படிப்பட்ட தம்தசை யையும், அதுக்கடியான விடாயையும், அவன்விடாயறிந்து அதுக்கு உதவவந்து முகங்காட்டினபடியையு மநுஸந்தித்து ஹ்ருஷ்டராய, "நான்க்ருதக்ருத்யனானேன், அடிமைசெய்யப்பெற்றேன், வாழ்ந் தேன், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் நானுபகாரகனும்படியா னேன், இதொருவன் பெறும்பேறிருந்தபடியே!" என்று தமக்குப் பிறந்தலாபத்தை யநுஸந்தித் தினியராய், அத்தைப்பேசி த்தலைக் கிறார். *

## முதற்பாட்டு.

மையார்கருங்கண்ணிகமலமலர்மேற் செய்யாள் * திருமார்பி னிற்சேர்திருமாலே * வெய்யார்சுடராழி சுரிசங்கமேந்துங் கையா* உன்னைக்காணக் கருதுமென்கண்ணே. (க)

ப:—முதற்பாட்டில், நிரதிசயபோக்யதாப்ரகாசகமான லக்ஷ்மீ ஸம்பந்தத்தையும், அந்தபோக்யதையைக்காத்தூட்டு மாயுதபூர்த்தியை யுமுடைய வுன்னைக்காணவாசைப்படாநின்றது என் கண்ணென்கிறார்.

(இ-ள்.) மையார் - அஞ்ஜநாலங்காரத்தையுடைத்தாய், கரு - (க), "அஸிதேக்ஷணா-அஸிதேக்ஷணா" என்னும்படி ஸ்வாபாவிகமான

(க) ரா-ஸு-கக-டு-

கருணையையுடைத்தான, கண்ணி - திருக்கண்களையுடையளாய், கமல மலர்மேல்-தாமரைப்பூவின்மேலேயிருப்பாளாய், செய்யாள் பத்மவர்ணையாகையாலே சிவந்த நிறத்தையுடையளான லக்ஷ்மியானவள், (க) "அகலகில்லேனிறையும்" என்று, திருமார்வினில்-திருமார்பனழகிலேயீடுபட்டு, சேர்-சேரும்படியாய், அவளுடைய அவயவஸௌபாகிலு மாபிஜாத்யத்திலும் துவக்குண்டு, திரு - அவள்பக்கலிலே, மாலே - அதிஶயித வ்யாமோஹத்தைப்பண்ணுமவனாய், இந்தச்சேர்த்திக்கு அஸ்த்தாநேபய ஶங்கிகளாய், ரக்ஷோத்யோகத்தாலே ப்ரதிபக்ஷத்திலே, வெய்யார் - வெம்மைவிஞ்சின, சுடர் - ஜ்வாலையையுடைய, ஆழி - திருவாழியையும் சுரி - வடிவுதானே யெதிரிகளையுமழித்து ஆஶ்ரிதர்க்கநுபாவ்யமாம்படியான வடிவிலே ரேகாவலயத்தையுடைய, சங்கும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், ஏந்தும் - ஏந்தும், கையா - திருக்கையையுடையவனே, உன்னை - இப்படி ஶ்ரிய:பதியாய் ஶங்கசக்ரதாரனானவுன்னை, என் - என்னுடைய, கண் - சபலமானகண்ணானது, காண - ஸசரீகளோபாதி ஸதா தர்ஶநம்பண்ண, கருதும் - மநோரதியாநின்றது. (க)

ஆறு:—லக்ஷ்மீகடாக்ஷ ஸம்ஶ்லேஷைக போகனாய், தத்பரவஶனாய், சங்கசக்ர திவ்யாயுத விபூஷிதகரனான வுன்னழகை யென் கண்ணானது காணவாசைப்படாநின்றதென்கிறார். (க)

ஈடு; அவ:—"ஶ்ரிய:பதியானவனைக் காணவேணும்" என்று தம்முடைய சக்ஷுரிந்த்ரியத்துக்குப் பிறந்த சாபலத்தை யருளிச்செய்கிறார்.

(மையார்கருங்கண்ணி) "அவனைப்பெறவேணும்" என்றிருப்பாராசைப்படுவதும் அவள்முன்னாகவாய், பெற்றால் பின்னை கைங்கர்யம்பண்ணுவதும் இருவருமான சேர்த்தியிலே யாயிருக்குமிறே. (மையார் கருங்கண்ணி) ஒன்றால் ஸமாதாநம் பண்ணவேண்டாதபடி ஸ்வாபாவிகமான வழகையுடைத்தாயாயிற்றுத் திருக்கண்களிருப்பது. இனி மங்களார்த்தமாக தரிக்குமித்தனையிறே அஞ்ஜநம். "கருங்கண்ணி" என்றுநிற்கச்செய்தே, "மையார்" என்னும்போது-மங்களார்த்தமாக வஞ்ஜநம்தரித்ததா யித்தனையிறே. (கமலமலர்மேற்செய்யாள்) இதுவாயிற்று ஸௌகுமார்ய மிருக்கும்படி.

(திருமார்வித்யாதி) தாமரைப்பூவில் பரிமளமும் தாதும் அடிக்கொதித்தால், உன்மார்விலே யடிமாறி யிடவேண்டும்படி மார்வு

படைத்தவனே. இவளிவ்வேற்றமெல்லாங்கொண்டும் அம்மார்வுக்கவ் வருகுபோகமாட்டாள். அவ்வகல மெல்லாம் போக்யமா யிருக்கை யாலே, அவ்வருகு போகவேண்டாவே' ( திருமாலே ) அவனும், இவள் மார்வில் படும்பாட்டை, இவளுடைய ஸர்வாவயவங்களிலும் பிச்சேறியிருக்குமாயிற்று. அவனுக்குத் திருக்கண்கள் சிவந்தாயிற் றிருப்பது. அவனிவளை நிரந்தரகடாக்ஷம்பண்ணுகையாலே, அவன் கண்ணின்சிவப்பு இவள்மேலேயூறியிவள்திருமேனி சிவந்திருக்கும்; இவள் அவனை நிரந்தரகடாக்ஷம் பண்ணுகையாலே, இவள்கண் ணில் கறுப்பு அவன்திருமேனியிலேபரந்து அவன்திருமேனி ஶ்யா மளமாயிருக்கும்.

இவளுக்குத் திருக்கண்கள் குளிர்ந்திருக்கும்; அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சி யிருக்கும். அவனோட்டைச் சேர்த்தியாலேயா யிற்று இவளுக்குத் தண்ணளிவிஞ்சியிருப்பது; இவளோட்டைச் சேர்த்தியாலேயாயிற்று அவனுக்கு வாத்ஸல்யம் விஞ்சியிருப்பது. ஆக, இருவர்க்கு மிரண்டும் குறைவற்றிருக்கும் ப்ரணயித்வத்தா லே. வரவிட்டவாளழியச்செய்யப்புக, (க) "நகஶ்சிந்நாபராத்யதி " என்னுமிவள்; (உ) "என்னடியாரது செய் யார்" என்று அவள் தன்னோடே மறுதலைக்கும்படியாயிற்று அவ னிருப்பது; ஆகையாலே, இருவருமான சேர்த்தியிலே யிவை யிரு வர்க்கும் குறைவற்றிருக்குமென்றுமாம்; வ்யதிரேகித்தவன்றும்தனி த்தனியே குறைவற்றிருக்குமென்றுமாம். (திருமார்வினில்சேர்.) நித்யாநுபவம் பண்ணாநிற்கச்செய்தேயும், (௩) "அகலகில்லேனிறை யும்" என்று இன்று வந்து கிட்டின புதியார்படுவதையெல்லாம் படாநிற்கும், சேரென்கிற வர்த்தமாநம் - இத்தைக் காட்டுகிறது.

(வெய்யாரித்யாதி) இவள்கையில் லீலாரவிந்தம் அவனுக்கு போக்யமாயிருக்குமாபோலே யாயிற்று அவன்கையில் திவ்யாயுதங் கள் இவளுக்கினிதாயிருக்கும்படி. இவளுகப்புக்காக ஆஶ்ரிதவிரோ திகளை யழியச்செய்கைக்குமுதலாய் தர்ஶநீயமாயிருக்குமாயிற்று. ப்ரதிபக்ஷத்தின்மேலே மிக்கவெம்மையை யுடைத்தாய், புகரோடு கூடியிருக்கிறதிருவாழி. ஸந்நிவேசமேயமைந்து வேறொருகார்யங் கொள்ளவேண்டாதே, வைத்தகண்வாங்காதே கண்டுகொண்டிருக் கவேண்டும்படியான ஸ்ரீபாஞ்சஜந்யம். (ஏந்துங்கையர்) வெறுமி

(க) ரா-யு- ககசு-சச- (உ) பெரியா-ச-கு-உ- (௩) சு-கഠ-கഠ-

திருவாய்மொழி, கூ-ப, ச-தி, உ-பா, கண்ணே வ்யாக்யாநம். அங்

வையுமன்று, கையுமன்று' இரண்டினுடையவுஞ் சேர்த்தியாயிற் றிவாசைப்படுகிறது. (க) "கூராராழிவெண்சங்கேந்தி-வாராய்" என்னுமவரிறே.

(உன்னை) லக்ஷ்மீஸம்பந்தத்தோடும், திவ்யாயுதங்களோடும், திவ்யவிக்ரஹத்தோடுங் கூடியிருக்கிற வுன்னை. இவருடையவுத்தேஸ்யவஸ்து விருக்கிறபடி யிதுகாணும். (காணக்கருதும்) (உ) "ஸஜலஜலதகாய: ஸ்ரீவத்ஸவக்ஷா: ஸங்கசக்ரகதாதர: - ஸ்ரீவத்ஸவக்ஷா:" என்கிற வுன்வடிவைக்காண வாசைப்படாநின்றது; அவனையாசைப்படுவாராசைப்படுவது ஒருகார்யங்கொள்ளவன்று, காணவாயிற்று, (ங) * திருவேங்கடத்தானைக் காணவிறே. (ச) * காரார்திருமேனிகாணுமளவுமிறே. நித்யஸூரிகளும் ஸதா தர்ஸநம்பண்ணுமித்தனையிறே. (ரு) "அணியரங்கனென்னமுதனைக் கண்டகண்கள் மற்றொன்றினைக்காணா" என்று இவ்வளவிலே தேக்கிட்டுவிடுவார்களிங்குள்ளார்; (உ) "ஸதா பஸ்யந்தி ஸூரய:-ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி" என்று இவ்வளவிலேதேக்கிட்டுவிடுவர்களங்குள்ளார். (என்கண்ணே) ஸம்ஸாரிகளில் தமக்குண்டான சாபலத்தோபாதியும் போருமாயிற்று இவர்தம்மிற்காட்டிலுமிவருடைய திருக்கண்களுக்கு. இவர்க்கு நேத்ரபூதரான வேற்றமுண்டிறே அவற்றுக்கு. (க)

---

## இரண்டாம்பாட்டு.

கண்ணே யுன்னைக்காணக்கருதி * என்னெஞ்ச மெண்ணே கொண்ட சிந்தையதாய் நின்றியம்பும் * விண்ணோர் முனிவர்க்கென்றுங் காண்பரியாயை * நண்ணுதொழியேனென்று நானழைப்பனே. (உ)

ப:—அநந்தரம், "உன்னைக்காணவேணும்" என்கிற வபிநிவேசத்தாலே, என்னெஞ்சும் நானு மலற்றாநின்றோமென்கிறார்.

(இ - ள்.) கண்ணே-எனக்கு தர்ஸநஸாதநபூதனாய்க்கொண்டு த்ருஷ்டியானவனே, உன்னை - ஸாதநபூதனான வுன்னையே, காண - ஸதா தர்ஸநம்பண்ணி யநுபவிக்க, கருதி - கருதி, என்னிலும் சபலமான'

---

(க) கூ-கூ-க- (உ) ஸா-யு-கசச-கரு- (ங) ச-திருவ
(ச) சிறியதிரு... (ரு) அமலனாதி- (சு) சாந்தோ-

என் - என், நெஞ்சம் - நெஞ்சானது, எண்ணே கொண்ட - பஹுஸங்க்யாதமான சிந்தையதாய் - மநோரதங்களைப் பண்ணி, நின்று - நின்று காண்கையிலும், ப்ரதிபந்தகம்போகையிலும், அடிமைசெய்கையிலுமுண்டான அபிநிவேசத்தாலே, இயம்பும் - அலற்றாநிற்கும், நான் - கரணியானநான், விண்ணோர் - ப்ரஹ்மாதிகளுக்கும், முனிவர்க்கு - ஸநகாதிகளுக்கும், என்றும்-என்றும், காண்பு-காண, அரியாயை-அரிய வுன்னை, நண்ணு தொழியேன் - கிட்டாமல் விடேன், என்று - என்று வ்யவஸிதனாய்க்கொண்டு, அழைப்பன்-த்வரையாலே கூப்பிடாநின்றேன். (உ)

ஆறு;—(கண்ணே) என்னெஞ்ச முன்னைக்காண வாசைப்படாநின்றது, ப்ரஹ்மாதிகளுக்கும் காண வரிதாயிருக்கச்செய்தே, எனக்கு த்ருஷ்டிபூதனாயிருந்த வுன்னையொழிய வேறெனக்குச் செல்லாமையாலே யுன்னைக்காணு தொழியில் தரியேனென்று நானிடந்து கதறாநின்றேனென்கிறார். (உ)

ஈடு; அவ;—தமக்கும் தம்முடைய நெஞ்சுக்குமுண்டானசாபலத்தை யருளிச் செய்கிறார்.

(கண்ணே) எனக்கு த்ருஷ்டியானவனே. (உன்னைக்காணக் கருதி) நிரதிசயபோக்யனான வுன்னைக்காணவாசைப்பட்டு. கண்ணைக் கொண்டே கண்ணைக்காண விருக்குமாபோலேகாணுமிவரிருக்கிறது; காண்கைக்கு ஸாதநமான கண்ணும், காணப்படும் விஷயமு மவனென்கிறார். (க) "சக்ஷுர்தேவஸ்ய நாராயண:-சக்ஷுர்த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:" என்னக்கடவதிறே; அவன்றன்னாலே யவனைப்பெறுமவரிறேயிவர், ப்ராப்யத்தில் நியதிபோலே, இவர்க்கு ப்ராபகத்தில் நியதியும்.

(என்னெஞ்சம்) பந்தஹேதுவாய்க்கொண்டு, விஷயங்களிலே "பரகுபரகு" என்று வாராநிற்குமிறே ஸம்ஸாரிகளுடைய நெஞ்சம்; * மயர்வற மதிநலமருளப்பெற்றார் நெஞ்சிறே, (உ) "தொழுதெழு" என்பது. (எண்ணேயித்யாதி) எண்கொண்ட மநோரதத்தையுடைத்தாய்-பஹுமநோரதங்களைப்பண்ணி "காணவேணும், காணுதேபட்ட துக்கத்தைப்போக்கவேணும், அடிமைசெய்யவேணும்" என்று. (நின்றியம்பும்) நிரந்தரமாகக்கூப்பிடாநிற்கும். பரவ்ருத்தியையுந் தானே யேறிட்டுக்கொள்ளாநிற்கும்.

(க) ஸுபால- (உ) க-க-க.

(கண்ணே) என்கையாலே - "ப்ராபகனவனே" என்றதாய், (உன்னைக்காண) என்கையாலே-"ப்ராப்யவஸ்துவுமவன்" என்றதாய், (எண்ணேகோண்ட) என்கையாலே - "அந்தப்ராபகத்தைக் கொண்டு இந்தப்ராப்யத்தைப்பெறவேணும்" என்றிருக்குமதிகாரியுடைய யாத்ரையிருக்கும்படி சொல்லிற்று.

(விண்ணோரித்யாதி) இதுதான் நெஞ்சுக்கேயாய் நான்கைவாங்கியிருக்கிறேனோ. ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கு மென்று மொக்கக் காணவரியையா யிருக்கிற வுன்னை நான் கிட்டாதொழிவனோ. "பெற்றமுடிப்பன்" என்று நான் கூப்பிடாநின்றேன். "பெற்றமுடிப்பன்" என்கிறது இவரொன்கொண்டென்னில்; "விலக்ஷண தேசவாஸிகளாய், தங்களுக்கென்ன வொருகைம்முதலுண்டாயிருக்கிறவர்க ளாகையாலே விளம்பஹேதுவுண்டு அவர்களுக்கு; அங்ஙனொரு கைம்முதலில் லாதவர்களுக்கு விளம்பஹேதுவுண்டோ" என்று கூப்பிடாநின்றேன்.

(நண்ணுதோழியேன்) அவனைக்கிட்டாதொழியில் நான் தரியேன். இது ஆப்த்தான் நிர்வாஹம். (நண்ணுதோழியேன்) என்றவிடம்-மஹா விஸ்வாஸஞ்சொல்லுகிறது. அவர்கள் விலக்ஷண தேசத்திலே யிருக்கையாலே க்ரமத்திலே பெறக்கலாம்; அங்ஙனன்றிக்கே, ஸம்ஸாரத்தேயகப்பட்டுநிற்கிற விவரையிறே கடுகவெடுக்கவேணுவது. எடுக்கவேண்டும் நிலத்திலேயிருந்தேன்; எடுக்கவேணுமென்றிருந்தேன்; எடுப்பான் தானுயிருந்தான்; எடுத்தால் பெறுவது தன்னையாயிருந்தது; ஆனபின்பு, எனக்கென்ன கண்ணழிவுண்டு. (உ)

## மூன்றும்பாட்டு.

அழைக்கின்றவடிநாயேன் நாய் கூழைவாலால் * குழைக்கின்றதுபோல வென்னுள்ளங்குழையும் * மழைக்கன்று குன்றமேடுத்தாநிரைகாத்தாய் * பிழைக்கின்றதருளென்று பேதுறுவனே.

ப:—அநந்தரம், ஆர்த்தியேபற்றுசாக ஆஸ்ரிதரக்ஷகனுன வுன்னுடைய க்ருபையானது என்னை நழுவவிடுகிறதோவென் றஞ்சாநின்றேனென்கிறார்.

(இ-ள்.) அழைக்கின்ற - அபிநிவேசாதிசயத்தாலே யழைத்துக் கூப்பிடாநிற்பேனுய், அடி - அநந்யகதியான ஸம்பந்தத்தை யுடையேனுய், நாயேன் - அனுகில் அவத்யாவஹமான நிகர்ஷத்தையுடைய என்-என்னுடைய, உள்ளம் - துக்கக்ஷீணமான நெஞ்சானது, உன்னுடையஸந்நிதியிலே, நாய் - நாயானது, தன்னினைவை, கூழை-கூழையான, வாலால்-வாலையசைத்து, குழைக்கின்றதுபோல-ப்ரகாசிப்பிக்குமாபோலே, குழையும் - ஶிதிலமாகாநின்றது, இந்த்ரன், அன்று - அம்மமவர்ஷமுகத்தாலே ஆர்த்தியைஜநிப்பித்தவன்று, மழைக்கு - அந்தவர்ஷத்துக்கு நிவாரணமாம்படி, குன்றம்-மலையை, எடுத்து - எடுத்து ஆ-ரக்ஷாபேக்ஷைபண்ணவு மறியாதபசுக்களுடைய, நிரை - திரளை, காத்தாய் - ரக்ஷித்தவனே, உன்னுடைய, அருள் - நிரவதிகக்ருபையானது, என்னளவில், பிழைக்கின்றது - தப்புகிறதோ, என்று - என்று, பேதுறுவன் - கலங்காநின்றேன். உனக்குத்தப்புகிறதோவென்றுமாம். (உ)

ஆறு:—(அழைக்கின்ற) என்னெஞ்சானது, தன்னுடைய வயோக்யதையையும், ஸாமக்ரீவைகல்யத்தையும் பாராதே, தன்னுடையசாபலத்தாலே யுன்னையாசைப்பட்டு விடமாட்டுகிறதில்லை; இப்படி யென்னுடைய ஸர்வகரணங்களும் தளராநிற்கச்செய்தே பேசாதிருந்தருளுகையாலே, உபாயஸாந்பரா யாபந்நராயிருப்பாரை ரக்ஷிக்கக்கடவதான வுன்னுடைய நிரவதிககாருண்யவெள்ளத்திலும் நானகப்படேனோவென் றஞ்சாநின்றேனென்கிறார். (ரு)

ஈடு; அவ:—இப்படி கூப்பிடச்செய்தேயும் வரக்காணாமையாலே, ஆர்த்தியேகைம்முதலாக ரக்ஷிக்கக்கடவ வுன் குணத்துக்குப் புறம்பானேனோவென்கிறார்.

(அழைக்கின்றவடிநாயேன்) அயோக்யனுய் க்ஷுத்ரனுயிருந்து வைத்து, ஆர்த்தியாலே கூப்பிடாநின்றேன். ருசியாலே தவிரமாட்டார். கிட்டினுல் அத்தலைக்கவத்யமாம்படி யாயிற்றுத் தம்முடைய நிலை. நாய், தன்னையுடையவனுக்குத் தன்னபிமதத்தில் ருசியைத் தெரிவிப்பது வாலாலேயாயிற்று; அவ்வால்தான்கூழையானுல் தெரிவிக்கையரிதாமிறே; அதுபோலே, என்மநஸ்ஸானது நோவுபடாநின்றது. இத்தால்-தமக்கோடுகிற க்லேசம் பேச்சுக்கு நிலமன்றென்கை, நிஸ்ஸாதநனுய்வைத் தாசைப்படாநின்றே னென்றுமாம்.

(மழைக்கித்யாதி) இந்த்ரன் அஶ்மவர்ஷத்தை வர்ஷிக்கிறவளவிலே, மலையையெடுத்து இடையரையும் பசுக்களையுமார்த்தியே கைம்முதலாக ரக்ஷித்தவனே. (பிழைக்கின்ற தருளென்றுபேதுறுவனே) "வரையாதே ரக்ஷித்தமஹாகுணம் எனக்குதவாமையாலே யிழக்கப்புகாநின்றாய்' என்று பேகணியாநின்றேன்" என்றுளவந்தாரருளிச்செய்யும்படி. அத்தை யெம்பெருமானார் கேட்டருளி, "இது பொருளழகிது; ஆனாலிப்போ திவர்க்கோடுகிற தசைக்குச்சேராது; ஆனபின்பு, 'பசுக்களுமிடையரும் வர்ஷத்திலே நோவுபடாதபடி மலையையெடுத்துமறித்த விம்மஹாகுணத்துக்கு நான் புறம்பாகிறேனோ' என்று பேதுறுநின்றேன்" என்று. (௩)

## நான்காம் பாட்டு.

உறுவதிது வென்றுனக்காட்பட்டு * நின்கண் பெறுவதேது கோலென்று பேதையேன்னெஞ்சம்* மறுகல்செய்யும் வானவர்தானவர்க்கென்றும் * அறிவதரியவரியாயவம்மானே.

**ப:**— அநந்தரம், உத்தேஶ்யமான சேஷத்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியான வுனக்கடிமையாய்வைத்து, என்பேறேதாயிருக்கிறதோவென்று என்னெஞ்சு கலங்காநின்றதென்கிறார்.

(இ-ள்.) ஸம்பந்தமொத்திருக்கச்செய்தேயும், வானவர்-அநுகூலரானவானவரோடு, தானவர்க்கு - ப்ரதிகூலரானதாநவரோடுவாசியற, ஆஶ்ரித ஸௌலப்யத்திலும் ஸர்வேஶ்வரத்வத்திலும், என்றும் - என்றுமொக்க, அறிவது - அறிய, அரிய-அரியையாம்படியான, அரியாய-நரஸிம்ஹமான, அம்மானே - ஸ்வாமியே, இது - இந்தசேஷத்வமாகிற ஸ்வரூபமே உறுவது-உத்தேஶ்யம், என்று என்றறுதியிட்டு, உனக்கு-தத்ப்ரதி ஸம்பந்தியானவுனக்கு ஆட்பட்டு-தாஸ்யாநுமதியைப்பண்ணி, நின்கண் - ஸ்வாமியான வுன்பக்கல், பெறுவது - பலமாகலபிக்கவருகிறது, எதுகொல் - ஸ்வரூபாநுரூபகைங்கர்யமோ, ஸம்ஸாரஸ்திதியோ ஏதாயிருக்கிறது; என்று, பேதையேன் - ஏதேனுமொன்றை நீசெய்தபடிகண்டிருக்கை ப்ராப்தமென்னுமறிவில்லாத வென்னுடைய நெஞ்சம் - நெஞ்சானது, மறுகல்செய்யும்-கலங்காநின்றது. (௪)

ஆறு;—( உறுவதிது ) நீ ஆஶ்ரிதஸுலபனு யிருக்கச்செய்தே சிலருக்கரியை யாயிருக்கையாலே, எனக்கு மரியையாயிருக்கிற் செய்வதென்னென்று, என்னெஞ்சு நடுங்காநின்றதென்கிறார். (ச)

ஈடு; அவ;—நீரிங்ஙன் பயப்படுகிறதென்னென்ன ; "தேவாதிகளுக்கரியையாகையாலே யெனக்குமரியையாகிறுயோ" என்றென்னெஞ்சு கலங்காநின்றதென்கிறார்.

(உறுவதிதுவென்று) சீரியது - அடிமைசெய்யு மிதுவென்று. (உனக்காட்பட்டு) உனக்கடிமைபுகுந்து. "ஸ்வரூபம் பகவத்பாரதந்த்ர்யம்" என்றறிந்தால், சீரியப்ரயோஜநம் கைங்கர்யமேயிறே. (நின்கட்பெறுவதேதுகோலென்று) உன்பக்கல் பெறுவதேதோவென்று. ஸ்வரூபத்தையுமுணர்ந்து, "கைங்கர்யமே சீரியதும்" என்றறிந்து, "ஈஶ்வரன் அநந்யப்ரயோஜநர்க்கு வேறொன்றைக்கொடுத்து விடுவானொருவனல்லன்" என்றுமறியுமிவர், "உன்பக்கல்பெறுவதேது" என்கைக்கு ஹேதுவென்னென்னில் ; "க்ரமத்திலேசெய்கிறோம்" என்று ஸம்ஸாரத்திலிருப்பே சேஷித்துவிடப்புகுகிறதோ, என் த்வரையறிந்து சடக்கென முகங்காட்டுகிறுயோவென்கை. (பேதையேன் நெஞ்சம்மறுகல்செய்யும் ) "நாமபிஸந்திபண்ணினபடியே பலிக்கும்" என்னுமறிவின்றிக்கேயிருக்கிற வென்னெஞ்சம் கலங்காநின்றது.

இங்ஙன் கலங்குகைக்கடி யென்னென்னில் ; நெஞ்சினுடைய விவேகமூர்க்யதையிறேயிதுக்கடி. நீதானுமிதுக்கடி (வானவர்த்யாதி) (க) *"தெவா நாஜாநவா நா ஷ- அம்மானுயிருந்துவைத்துஸர்வே" ப்ரனுயிருந்துவைத்து, தேவர்களுக்கு மஸுரர்களுக்கு மென்று மொக்க வறியவரியையாய், அந்நிலைதன்னிலே ஒருசிலுக்கனுக்கு உன்னையுள்ளபடி யறியலாயிருந்தாய, அதில் நானெக்கோடியிலே யாகிறேனோவென்றறியாமை. தேவாஸுராஷிபாகம்பண்ணின வநந்தரம், அர்ஜுநன் "நானெக்கோடியிலாகிறேனோ" என்றஞ்சினுப்போலே, பின்னை அவனிதுக்குப்பண்ணின பரிஹாரமென்னென்னில்; தன்ஸௌலப்யத்தை ப்ரகாசிப்பிக்கையிறே.எளியோமாகையுமொருகோடியுண்டாக நீர்சொன்னீராகில், நீர்தாமக்கோடியிலேயுள்ளாரொருவராயிருந்தீராகில்,உமக்கினி நாம் கைப்புகுந்தோ மென்றிருக்கையமையாதோ வென்கையிறே. (ச)

(க) ஜிதந்-க-உ-

## ஐந்தாம் பாட்டு.

அரியாய வம்மானை யமரர்பிரானை * பெரியானைப்பிரமனை முன்படைத்தானை * வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற * கரியான்கழல்காணக் கருதுங்கருத்தே.

ப:—அநந்தரம், காரணத்வாதிகுண யோகத்தையுடையனான வுன் திருவடிகளைக்காணவேணுமென்று என்னுடைய நெஞ்சானது நினையாநின்றதென்கிறார்.

(இ - ள்.) அரியாய - விரோதிநிரஸநசீலனான, அம்மானை - ஸ்வாமியாய், அமரர் - நிரஸ்தஸமஸ்தவிரோதிகளான ஸூரிகளுக்கு, பிரானை - போகப்ரதனாய், பெரியானை - அவர்களாலும் பரிச்சேதித்தநுபவிக்கவொண்ணாத பெருமையையுடையனாய், முமுக்ஷுவிஸ்ருக்ஷையாலே ஜகத்தைஸ்ருஷ்டிக்கைக்கு, முன் - முற்படவே, பிரமனை-ப்ரஹ்மாவை, படைத்தானை - உத்பாதித்தவனாய், உத்பந்நஜகத்ரக்ஷார்த்தமாக, வரி-வரியையும், வாள் -ஒளியையுமுடைத்தான, அரவினணை-திருவரவணையிலே, பள்ளிகொள்கின்ற - பள்ளிகொண்டருளுகிற, கரியான் - படுக்கைக்குப்பரபாகமான ஶ்யாமளவிக்ரஹத்தை யுடையவனை, கழல்-திருவடிகளிலே, காண - காணவேணுமென்று, கருத்து - புத்தியானது, கருதும்-நினையாநின்றது. கரியானையென்கிற விரண்டாம்வேற்றுமையெஞ்சிக்கிடக்கிறது. கரியான்றனையென்றும் பாடஞ்சொல்லுவர். (ரு)

ஆறு:—( அரியாய ) உம்முடையவபேக்ஷிதந்தானேதென்னில்; அண்டாதிபதியான ப்ரஹ்மாவுக்கும் காரணபூதனாகையாலே ஸர்வேஶ்வரனாய், * அயர்வறுமமரர்களதிபதியாய், ஸகலஜநமநோநயநஹாரி திவ்யஸௌந்தர்ய விசிஷ்டனாய், ஆஶ்ரிதர்க்காத்மதாநம் பண்ணுகைக்காகத் திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற கரியான்கழல்காண வாசைப்படாநிற்கு மென்னெஞ்சென்கிறார்.

ஈடு; அவ;—நாமெளியோமானு,கோடியிலேயன்றோ, உமக்குப்பேறுகைபுகுந்திருக்க நீரிங்ஙன் படுகிறதென்னென்ன; என்னெஞ்சுகாண்கையிலே த்வரியாநின்றதென்கிறார்.

(அம்மானை) ஸர்வேஶ்வரனை. ( அமரர்பிரானை ) நித்யஸூரிகளுக்குத் தன்னைக்காட்டிக் கொடுத்தநுபவிப்பிக்குமுபகாரகனை. (பெரியானை) அவர்களுடைய ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தன்னதீந

மாய், தன்னை அவர்களால் பரிச்சேதிக்கவொண்ணாதவனே. (பிரம னைமுன்படைத்தானே) சதுர்முகனுக்கு ஜநகனாயுள்ளவனே. அரியாய வென்று-கீழேகூட்டுவது. ஸ்ருஷ்டமானஜகத்திலே, ஆஸ்ரிதார்த்த மாகவவன் ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலே தன்னையழியமாறிவந்தவதரித் தவனே.

(வரிவாளித்யாதி) ஆஸ்ரிதர்க்கு உதவுகையன்றிக்கே. தத்ஸம்ஸ லேஷஸ்வபாவனாயுள்ளவனே. (வரிவாளரவு) வரியையுமொளியையு முடையவரவு. வரி - அழகு. (கரியான்) வெளுத்ததிருநிறத்தை யுடைய திருவநந்தாழ்வான்மேலே ஒருகாளமேகம் சாய்ந்தாப்போ லேயாயிற்றுக் கண்வளர்ந்தருளுவது. (காணக்கருதும் கருத்தே) காண்கையிலே த்வரியாநின்ற என்மனஸ்ஸு. படுக்கைக்கு பரபாக மானவடிவும், அதுக்குப்பரபாகமான திருவடிகளும் இத்தையாயிற் றுக்காணவாசைப்படுகிறது. (௫)

---

# ஆறாம் பாட்டு.

கருத்தேயுன்னைக் காணக்கருதி * என்னெஞ்சத் திருத்தாக விருத்தினேன் தேவர்கட்கெல்லாம் * விருத்தாவிளங்குஞ் சுடர்ச் சோதியுயரத் தொருத்தா * உன்னையுள்ளு மென்னுள்ளமுகந்தே.

ப:—அநந்தரம், நான் மநோரதித்தபடியே, பரமபதநிலயனாய் ஸூரிஸேவ்யனான வுன்னை யென்னெஞ்சானது கண்டநுபவியாநின்ற தென்கிறார்.

(இ - ள்.) கருத்தே - நான் நளராதபடி யெனக்கு பலகாரணமாக் கொண்டு நெஞ்சுவலியானவனே, உன்னை-உன்னை, காண - கண்டநுப விக்கவேணுமென்று, கருதி - மநோரதித்து என் - என், நெஞ்சத்து - நெஞ்சுக்குள்ளே, இருத்தாக - எழுந்திராதபடி, இருத்தினேன் - இருத் திக்கொண்டேன், தேவர்கட்கெல்லாம் - ஸூரிகளுக்கெல்லாம், விருத் தா - மூப்பான சேஷியாய், விளங்கும் - உஜ்ஜ்வலமான, சுடர் - ப்ரபை யையுடைத்தாய், சோதி - தேஜோமயமாய், உயரத்து - (க "விஸ்வதஃ ப்ருஷ்டேஷு ஸர்வதஃப்ருஷ்டேஷு - விஸ்வதஃ ப்ருஷ்டேஷு ஸர்வதஃப்ருஷ்டேஷு" என்றுஸர்வோத்தரமான பரமபதத்திலே,

---

(க) சாந்தோ-௩-௧௩-

திருவாய்மொழி, ௯-ப, ௪-தி, ௬-பா, கருத்தே வ்யாக்யாநம் ௯க்

ஒருத்தா-அத்விதீயனா யிருக்குமவனே, என்-என்னுடைய உள்ளம்-அந்தஃகரணமானது, உன்னை - நிரதிசயப்ராப்யபூதனானவுன்னை, உகந்து-அத்யந்தப்ரேமவிசிஷ்டமாய்க்கொண்டு, உள்ளும் - அகவாயிலேயநுபவியாநின்றது. (௬)

ஆறு:—(கருத்தே) இப்படி நானுன்னைக்காண விச்சிக்குமளவில் திருநாட்டி லிருக்கும்படியேவந்து என்னெஞ்சிலே புகுந்தருளின வுன்னை யென்னெஞ்சு உகந்து புஜியாநின்றதென்கிறார். (௬)

ஈடு; அவ:—காணவாசைப்பட்டவளவிலே அவன் தம்முடைய திருவுள்ளத்திலே புகுந்தருள, தம்முடையநெஞ்சு உகந்தநுபவிக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(கருத்தேயுன்னைக் காணக்கருதி) எனக்குமிடுக்கான வுன்னைக் காண வாசைப்பட்டவளவிலே முகங்காட்டினாய், இவ்விஷயத்தை லபிக்கைக்கு ருசியேயமையுமென்கை, "கண்ணேயுன்னைக்காணக் கருதி" என்றார் கீழ்; "கருத்தேயுன்னைக்காணக்கருதி" என்றாரிங்கே. அநுபபத்தியைக்கொண்டு அர்த்தாபத்தியாலே கல்பித்தல், அநுமாநத்தாலே அதீந்த்ரியமென்றறிதல்செய்யும் வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்று மநோரதிக்கிறார். இவர்க்குக் கண்ணுங் கருத்து மவனாயிற்று.

(என்னேஞ்சத்திருத்தாகவிருத்தினேன்) * மறுகல்செய்தநெஞ்சிலே, * மறுகலிலீசனைப் பரமபதத்திலேயிருக்குமாபோலேயிருத்தினேன். "இவர்பக்கலிசைவுபெற்றிலோம்" என்றிருக்கிறவன் இத்தனை யிசைவுபெற்றால் பின்னைத்தள்ளிக் கதவடைத்தாலும் போகானிறே.(க) [யதிஹஸம்ஹாஸெளநௌநகா ஸஹாயஸாய-ஸெநிநிநெத-யதிஹ ஸாதோஸேகாஸ்த்வயாஸார்த்தமநிந்திதே](உ)[ஐஸவஷ்ராஹிஸஸளிநெஹ் ஸாய-ஸெஸெத நவக்ஷிணா- இஹவத்ஸ்யாமி ஸௌமித்ரே ஸார்த்தமேதேநபக்ஷிணா] ஐயர் கண்வட்டத்திலே வர்த்திக்கவேணுமென்று நினைத்திருந்தோம், நடுவிலாய்ச்சிக்குப்ரியஞ்செய்யவேண்டுகையாலே அதுசெய்யப்பெற்றிலோம், இனி இவர் சிறகின்கீழேயாகிலும் வர்த்திக்கப்பாராநின்றோமென்றாரிறே. அன்றிக்கே, (இருத்தாக) மித்ரபாவமேகிடீரென்பக்கலுள்ளதென்னுதல்.

(க) ரா-அயோ-௬௪.கடு- (உ) ரா-ஆர-கரு-௬௬-

(தேவர்கட்கேல்லாம்விருத்தா) "இனியவ்வருகில்லை" என்னும்படி யுயர்ந்தவர்களுக்கு மவ்வருகானவனே, தலைமகனையும் தலைமகளையும் "கிழவனுங்கிழத்தியும்" என்று தமிழர் சொல்லக்கடவர்களிறே; அவளையும் (க) "மலர்க்கிழத்தி" என்றார்களிறே. (விளங்குமித்யாதி) (உ) "அத பதஃபரோ திவோஜ்யோதிர்த்தீப்யதே" என்கிறபடியே, எப்போது மொக்கவிளங்காநிற்பதாய், நிரவதிகதேஜோரூபமா யிருக்கிற பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிற அத்விதீயனே. ப்ராகாரத்திலேயிறே நாநாத்வமுள்ளது; ப்ராகாரியொருவனேயிறே.

(உன்னையித்யாதி) சடக்கென முகங்காட்டின வுன்னை, கண்டு கலங்கின வென்னெஞ்ச முகந்தே யநுபவியாநின்றது. "தேவர்கட்கெல்லாம்விருத்தா, விளங்குஞ்சுடர்ச்சோதி யுயரத்தொருத்தா" என்று சொல்லுகிற விவ்விசேஷணங்களுக்குக் கருத்து-மேலாரினுக்கும் மேலாய் பரமபதத்திலே யெழுந்தருளியிருந்து அவர்களை யநுபவிப்பிக்குமாபோலே, தன்னையநுபவித்த வென்னெஞ்சம் ப்ரீதமாகாநின்றதென்கை. (சா)

## ஏழாம் பாட்டு.

உகந்தே யுன்னையுள்ளு மென்னுள்ளத்தகம்பால் * அகந்தானமர்ந்தே யிடங்கொண்டவமலா * மிகுந்தானவன்மார் வகலமிருகூறுநகந்தாய * நரசிங்கமதாயவுருவே.

ப:—அநந்தரம், ஹ்ருத்யனுய்க்கொண் டென்னெஞ்சிலே யிருந்து விரோதிநிரஸநசீலனான வுன்னை யென்னகவா யுகந்தநுபவியாநின்றதென்கிறார்.

(இ-ள்.) அகந்தான் - அகவாயிலே, அமர்ந்து-பொருந்தி, இடங்கொண்ட - இடங்கொண்டு, அதுதானே ப்ரயோஜநமாகவிருந்த, அமலா - உஜ்ஜ்வலஸ்வபாவனுய், ப்ரபலமான துர்மாநத்தை யழித்திருந்தமைக்கு ஸூசகமென்னலாம்படி, மிகும்-வரபலபுஜபலங்களாலேமிக்க, தானவன்-அஸுரனான ஹிரண்யனுடைய, மார்வு-மார்பத்திலே, அகலம்-பெரியவிடத்தை, இருகூறு - இருகூறும்படியாக, நகம் - நகத்தை, தா-

(க) தி-ச-வி-ககஅ- (உ) சாந்தோ-

தாவும்படிபண்ணின, நரசிங்கமதாய - நரஸிம்ஹமான, உருவே - ரூப த்தையுடையவனே, என் - என், உள்ளத்து - உள்ளத்தின், அகம்பால் - அகவாயானது, உன்னை - உன்னை, உகந்தே - உகந்தே, உள்ளும் - அநுபவியாநின்றது.

ஆறு:—(உகந்தே) என்னுள்ளே புகுந்தருளின வுன்னழகை யுஞ் செயலையு மென்னெஞ்சுகந்துகொண் டநுஸந்திக்க, இதுகாரண மாக நீமிகவும் ப்ரீதனாய், உன்னைக்காணப் பெறாமையாலே கலங்கின வென்னெஞ்சு தெளியும்படி யென்னெஞ்சையெற்றைக்கு மிடமாகக் கொண்டருளினா யென்கிறார். (எ)

ஈடு; அவ;—தூணிலேதோற்றி ப்ரஹ்லாதனுடைய வார்த்தி யைத்தீர்த்தாப்போலே தம்மார்த்தியைத்தீர்த்தபடியை யநுஸந்தித் தேத்துகிறார்.

(உகந்தேயுன்னையுள்ளும்) பிரிந்து க்லேசத்தோடே தலைக்கட்டு முகப்பன்றிக்கே, ஏகரூபமாக வுன்னையநுபவிக்கும்படி. (என்னுள் ளத்து) * எண்ணேகொண்ட சிந்தையுடைத்தான வென்னுள்ளத்து. (அகம்பாலகந்தான்) உள்ளுக்குமுள்ளே. "உள்ளுளாவி" என்னும் படியே கமர்பிளந்தவிடமெங்கும் மறுநனையும்படி. (அமர்ந்தே) தன் பேறாக வத்யபிநிவேசத்தைப்பண்ணி (இடங்கொண்ட) அவகாச முள்ள விடமெங்கும் தானேயாம்படிநிறைந்த. (அமலா) இவ்விருப் புக்கவ்வருகொருப்ரயோஜநத்தைக்கணிசித்தன்றிக்கே, ஒருஹேது வைப்பற்றிய மன்றியேயிருக்கை, "எண்ணேகொண்ட சிந்தைய தாய்" என்றத்தை ஸாதநமாக நினைத்திருக்கிறிலர்.

(மிகுந்தானவன்) ப்ராதிகூல்யத்திலோரளவில் நில்லாததாந வன். தன்னையில்லைசெய்கையன்றிக்கே, தன்னுயிர்நிலையிலே நலிந்த வன்; (க) "ஜ்ஞாநீத்வாத்மைவ-ஜ்ஞாநீத்வாத்மைவ" என்னக்கட வதிறே. (மார்வகலமிருகூறாநகந்தாய்) அகன்றமார்வானது இரண் டுகூறாம்படி பண்ணவல்ல நகத்தையுடையவனே. நகத்தாயென்கிற வல்லொற்றை மெல்லொற்றாக்கிக்கிடக்கிறது. (நரசிங்கமதாய வுருவே) (உ) "ஸநைகரூபரூபாய" என்கிற விக்ரஹத்தையே! இப்படிகொள்வது; இரண்டுவடிவைக் கொள்ளுவதே!

(க) கீதை-எ-கஅ- (உ) வி-பு-க-உ-க-

௯௭ திருவாய்மொழி, ௯-ப, ௪-தி, ௮-பா, உருவாகிய வ்யாக்யாநம்.

இத்தால்சொல்லிற்று யிற்றென்னென்னில்; ஆஶ்ரிதருடைய ப்ரதிஜ்ஞாஸமகாலத்திலேவந்துதோற்றுமவனாகையாலே, தூணிலே தோற்றினாப்போலேவந்து தோற்றி, ஹ்ருதயாவகாசமுள்ள விட மெங்கும் புகுந்து, கமர்பிளந்தவிடமெங்கும் நீர்பாய்ச்சுமாபோலே. நிரம்பவென்னை யநுபவிப்பித்தானென்கிறார். (௭)

## எட்டாம் பாட்டு.

உருவாகியவாறு சமயங்கட்கெல்லாம் * பொருவாகிநின்றா ன
வனெல்லாப்பொருட்கும் * அருவாகியவாதியைத் தேவர்கட்கெல்
லாம் * கருவாகியகண்ணனைக் கண்டுகொண்டேனே.

ப:—அநந்தரம், ஸர்வாந்தராத்மாவாய், ஸர்வகாரணபூதனாய், ஸர்வஸுலபனான வுன்னைக்காணப்பெற்றேனென்கிறார்.

(இ-ள்) உருவாகிய-ஆபாதப்ரதீதியிலொன்றுபோலே யிருக்கக் கடவதான, ஆறுசமயங்கட்கெல்லாம் - சார்வாக பௌத்த க்ஷபண வைசேஷிக ஸாங்க்ய பரசுபதரூபமான பாஹ்யஸமயங்களாறுக்கும், பொருவாகி - (க) "அறுவகைச்சமயமு மறிவருநிலையினை" என்கிறபடியே ப்ரதிபடனாய்க்கொண்டு, நின்றானவன் - அப்ரகம்ப்யனாயிருக்குமவனாய், எல்லாப்பொருட்கும் - ஸமஸ்தபதார்த்தங்களுக்கும் அருவாகிய-அந்தராத்மாவாய்க்கொண்டு, ஆதியை - ப்ரதாநனாய், தேவர்கட்கெல்லாம் - ப்ரஹ்மாதிதேவர்களுக்கடங்க, கருவாகிய-காரணபூதனாய், கண்ணனை-ஆஶ்ரித ரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாயவதரித்தவனை, கண்டுகொண்டேன்-கண்டநுபவிக்கப்பெற்றேன். பொரு-எதிர். (அ)

ஆறு;—(உருவாகிய) வேதபாஹ்யமான ஷட்ஸமயங்களில் நான்புகாதபடி பரிஹரித்து, ஸர்வாத்மபூதனான தன்னை யெனக்குக் காட்டியருளினவனை நான்காணவும் பெற்றேனென்கிறார். (அ)

ஈடு; அவ;—ஸகலபதார்த்தங்களுக்கு மந்தராத்மாவாய் ப்ரஹ்மாதிகளுக்குக் காரணபூதனானவனைக் காணப்பெற்றே னென்றினியராகிறார்.

(உருவாகியவாறுசமயங்கட்கெல்லாம்) ஆபாதப்ரதீதியிலொன்றுபோலேயிருக்க, சிலவற்றைவிதிப்பது, சிலவற்றைநிஷேதிப்பது

(க) திருவெழுகூற்றிருக்கை.

நிஷித்தபரிஹாரத்தைச்சொல்லுவதாய்க்கொண்டுஉபதேசிப்பாரும் கேட்பாருமாய்ப் போருகிற. பாஹ்யஸமயங்களெல்லாவற்றாலும். (பொருவாகிநின்றானவன்) பொருவென்று-தடை. அவற்றால் தன்னையில்லை செய்யவொண்ணாதபடி அப்ரதிஹதனாய்நின்றான்.

(எல்லாப்பொருட்கு மருவாகியவாதியை) ஸகலபதார்த்தங்களுக்கு மந்தராத்மாவாய், நியாமகத்வத்தாலே ப்ரதாநனுமானவனை. (தேவர்கட்கெல்லாம் கருவாகிய) ப்ரஹ்மாதிதேவர்களுக்கெல்லாம் காரணபூதனாயுள்ளவனை. (கண்ணனை) கார்யங்களிலே யொன்றுக்குத்தான் கார்யமானவனை, (கண்டுகோண்டேனே) அவதாரத்துக்குப் பிற்பாடாராயிருக்க, (கண்டுகொண்டேன்) என்கிறாரிறே; ப்ரேமார்த்ரசித்தர்க்கென்றுங்காணலாம், அவதாரஸமகாலத்திலுங்காணவொண்ணாது சிசுபாலாதிகளுக்கு,

பாஹ்யஸமயங்களா லவிசால்யனாய், ஸர்வாந்தராத்மாவாய்க்கொண்டு ஸர்வநியந்தாவாய், ப்ரஹ்மாதிகளுக்கு முத்பாதகனாயிருந்துவைத்து, ஆச்ரிதஸுலபனானவனைக் காணப்பெற்றேனென்கிறார்.

---

## ஒன்பதாம்பாட்டு.

கண்டுகோண்டேன் கண்ணிணை யாரக்களித்து * பண்டைவினையாயின பற்றோடறுத்து * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன் * அண்டத்தமரர் பெருமானடியேனே.

ப:—அநந்தரம், என்னுடைய ஸ்வரூபாநுரூபமாகக் கண்டநுபவித்து, விரோதியுங்கழிந்து, ப்ராப்யபூதனானவன் விஷயத்திலே, பாகவதர்க்கு போக்யமாம்படி வாசிககிஞ்சித்காரம் பண்ணப்பெற்றேனென்கிறார்.

(இ - ள்.) ஜ்ஞாநப்ரேமாத்மகமான, என் - என், கண் - கண்கள், இணை - இரண்டும், ஆர - வயிறுநிறையும்படி, கண்டுகொண்டு - கண்டுகொண்டு, களித்து - களித்து, இந்த ஸ்வரூபஜ்ஞாநமடியாக, பண்டை - அநாதிஸித்தமான, வினையாயின - அஹங்காரமமகாராதி ஸமஸ்தவிரோதிகளையும், பற்றோடு - ஸவாஸநமாக, அறுத்து - போக்கி, அண்டத்து - பரமபதத்திலே, அமரர்பெருமான் - * அபர்வறுமமரர்களதிபதியான ப்ராப்யபூதனுக்கு, அடியேன் - நித்யகிங்கரனான நான், தொண்டர்க்கு-

அவனடியார்க்கு, அமுதுண்ண - உகந்தநுபவிக்கலாம்படி, சொல்மாலைகள் - ஶப்தஸந்தர்ப்பரூபமான வாசிககைங்கர்யத்தை, சொன்னேன் - பண்ணினேன்.

இப்பாட்டில் - மந்த்ரத்தில் ப்ரதம பதார்த்தமான ஸ்வரூபஜ்ஞாநத்தையும், மத்யமபதார்த்தமான விரோதி நிவ்ருத்தியையும், சரம பதார்த்தமான கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தையும், கைங்கர்யவ்ருத்திவிசேஷத்தையும், மந்த்ரதாத்பர்யமான ததீயசேஷத்வத்தையுஞ் சொல்லிற்றாயிற்று.

ஆறு ;—(கண்டுகொண்டு) இப்படி கண்ணாரக்கண்டுகொண்டு அவனையேத்தவும் பெற்றேனென்கிறார். (கூ)

ஈடு; அவ;—தன்னையநுபவிக்கப்பெற்று, அதுக்குமேலே, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யமாம்படி திருவாய்மொழி பாடவும்பெற்றேனென்கிறார்.

(கண்டுகொண்டு) "நானழைப்பன்" என்ற விடாயெல்லாங் கெடக் காணப்பெற்று. (என்கண்ணிணையார) "காணக்கருதுமென்கண்ணே" என்ற கண்கள்விடாய்கெட. (கண்ணிணையார - கண்டுகொண்டு) கவியர் 'வயிறாரவுண்டு" என்னுமாபோலே. (களித்து) மறுகின நெஞ்சுகளித்து. (பண்டைவினையாயின பற்றோடறுத்து) இவ்வுகப்புக் கிடைச்சுவரான ப்ராக்தநகர்மங்களை ஸவாஸநமாகப்போக்கி.

(தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்) என்னளவு மன்றிக்கே வைஷ்ணவர்களுக்கு முபகாரகனாகப்பெற்றேன். "நானுமுண்டு, என்பரிகரமும் ஜீவித்து, என்பந்துக்களுக்கும் விருந்திடவல்லேனானேன்" என்பானைப்போலே. (சொன்மாலைகள்சொன்னேன்) ததீயஶேஷத்வபர்யந்தமான பேற்றைப்பெற்றேன். பெற்றபேற்றின் கனமிருந்தபடியாலே, இது தான்றோன்றியான கைப்பற்றடியாகவந்த தொன்றல்ல (அண்டத்தமரர்பெருமானடியேனே) ஸர்வேஶ்வரனாலே விஷயீக்ருதனானேன். (கூ)

---

## பத்தாம்பாட்டு.

அடியானிவனென்றெனக்காரருள்செய்யும் * நெடியானைநிறை புகழஞ் சிறைப்புள்ளின் கொடியானை* குன்றாமலுலகமளந்த வடியானை * அடைந்தடியேனுய்ந்தவாறே. (கo)

ப:—அநந்தரம், இந்தவநுபவத்துக்கடியான நிருபாதிகஸம்பந்தத்தை யுடையவனைக்கிட்டி நானுஜ்ஜீவித்த ப்ரகார மென்னென்று ஹ்ருஷ்டராகிறார்.

(இ - ள்.) இவன் - இவன், அடியான் - நமக்கு ஸ்வதஸ்ஶேஷபூதன், என்று - என்றுதிருவுள்ளத்திலேகொண்டு, எனக்கு - எனக்கு, ஆர் - பரிபூர்ணமான, அருள் - க்ருபையை, செய்யும் - பண்ணுகிறகச் செய்தே, நெடியானை - ஒன்றுஞ்செய்யாதபடி மேன்மேலெனப் பாரிப்பையுடைய பெரியவனாய், நிறை - இந்த்ரக்ஷணத்துக் கநுரூபமான, புகழ்-ஸீலஸௌலப்யஜ்ஞாந ஶக்திப்ரமுகமான ப்ரதையையுடையனாய், அம் - விலக்ஷணமான, சிறை - சிறகையுடைய, புள்ளின் - பெரியதிருவடியை, கொடியானை - ரக்ஷணப்ரதைக்குக் கொடியாகவுமுடையனாய், குன்றாமல்-அந்யாபிமாநமாகிற குறைவுவாராமல், உலகம்-லோகத்தை, அளந்த-அளந்துகொண்ட, அடியானை - நிருபாதிகஸம்பந்தப்ரகாஶகமான திருவடிகளை யுடையவனை, அடைந்து-கிட்டி, அடியேன்-ப்ரகாசிதமான ஶேஷத்வஸ்வரூபத்தையுடையநான், உய்ந்தவாறே-உஜ்ஜீவிக்கப் பெற்றபடியே. (கo)

ஆறு:—( அடியானிவன் ) பெரியதிருவடி, தன்திருவடிகளில் செய்யும் வ்ருத்திகளெல்லாவற்றையும், என்னையிட்டு நிர்மேஹதுகமாகச்செய்வித்துக் கொண்டருளினானொருவனையாஸ்ரயித்து நானுய்யும்படியே! என்கிறார். (கo)

ஈடு; அவ;—இப்படி அவனைப்பெற்று க்ருதார்த்தனானேனென்கிறார்.

(அடியானிவனென்று) "மேல் பண்ணப்புகுகிற வௌதார்யம் ப்ராப்தம்" என்று சொல்லுகைக்காக, "அடியான்" என்றொரு பேரையிட்டாயிற்று உபகரித்தது. (எனக்காரருள்செய்யும்நெடியானை) கொள்ளுகிறவென்னளவன்றிக்கே, தன்னளவிலே யுபகரித்த ஸர்வேஸ்வரனை. * அருள்பெறுவாரடியாரிறே. புத்ரர்களுக்கு அம்ஶமேயிறேயுள்ளது ; எல்லாவற்றிலும் கூறுண்டாயிருக்குமிறே யடியார்க்கு.

பிள்ளை யகளங்கப்ரஹ்மராயர், " பட்டரை ஸமாதாநம்பண்ணவேணும் " என்று, " இருகைமதவாரணம் " என்கிறவனை வரக்காட்டினாராய், "அவனைத் திருவுள்ளத்திலே விஷயீகரித்திருப்பர்"

என்னுமத்தைப்பறற ; அவனும்வந்து சிலவார்த்தைகளை விண்ணப்பஞ்செய்து, திருவுள்ளமும் ப்ரஸந்நமாயிருக்கிறவளவிலே ; " இவனுடைய வைஷ்ணவத்வமிருக்கும்படி திருவுள்ளம்பற்றி யிருக்கை யுண்டே " என்றார்களாய்; "சொல்லவேணுமோ, கர்ப்பதாஸர்களன்றோ " என்றது தொடக்கமாக, இப்பாட்டை யருளிச்செய்தார்.

(ஆரருள்செய்யும்) பெறுகிற வென்னளவிலேபன்றிக்கே, தருகிற தன்னளவிலே தந்தான். தனக்களவு தானென்னென்ன (நெடியானை) "ஸர்வேஶ்வரன்" என்னுமித்தனை. (நிறையித்யாதி) இது தான் நானின்றிருந்து உபபாதிக்கவேண்டியிருந்ததோ?. கட்டிக்கொண்டிருக்கிறகொடியிலே தெரியாதோ?. ஶௌர்யவீர்யாதி குணப்ரதையையுடையனாய், நிரந்தர பகவதநுபவத்தாலே தர்ஶநீயமான வேஷத்தையுடையனாயிருக்கிறபெரியதிருவடியை த்வஜமாகவுடையவனை. பெரியதிருவடியை விஷயீகரித்தாப் போலே யென்னை விஷயீகரித்தவனை.

இப்படி விஷயீகரிக்கைக்கு இத்தலையிலென்ன நன்மையுண்டென்னில் (குன்றுமலுலகமளந்தவடியானை; ) - குணகுண நிரூபணம்பண்ணாதே திருவுலகளந்தருளினாப்போலே, நிர்ஹேதுகமாக வென்கிறார். ஓரடியுங்குறைபாமே பூமிப்பரப்பை யளந்துகொண்ட திருவடிகளையுடையவனை, தன்பெருமையையும் ஸௌலப்யத்தையும் என்னை யநுபவிப்பித்தான். (அடைந்தடியேனுய்ந்தவாறே) ஶேஷத்வமே ஹேதுவாக வுஜ்ஜீவித்தபடியென்!, ஶேஷத்வஜ்ஞானத்துக் கித்தனை ப்ரயோஜநமுண்டோ! (கo)

---

## பதினோராம் பாட்டு.

ஆறுமதயானை யடர்த்தவன்றன்னை * சேறார்வயல்தென்குருகூர்ச்சடகோபன் * நூறேசொன்னவோ ராயிரத்துளிப்பத்தும் * ஏறேதரும்வானவர்த மின்னுயிர்க்கே.

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக இதினுடைய நித்யஸூரிபோக்யதையை யருளிச்செய்கிறார்.

(இ - ள்) ஆறு-ஒருக்காலும் மட்டுப்படாத, மதம்-மதத்தையுடைய யானை - குவலயாபீடமாகிற யானையை, அடர்த்தவன்றன்னை - நிரவதி

க்த்க்ருஷ்ணனைப்பற்ற, சேறு - சேறு, ஆர் - மிக்க, வயல்-வயலையுடைத்தான, தென் - அழகிய, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார். நூறே - நூறுநூறாக, சொன்ன - சொன்ன, ஓர், ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தும் - இப்பத்தும், வானவர்தம்-நித்யஸூரிகளுடைய, இன்-உகந்த, உயிர்க்கு - நெஞ்சிலேசென்று, ஏறே தரும்-ஏறுகிற்கும். வானவர்தமின்னுயிர்க்கேறானஸர்வேஶ்வரனைத்தருமென்றுமாம். இது - கலிவிருத்தம். (௧௧)

ஆறு;—(ஆறுமதயானை) ப்ரதிகூலநிரஸநம்பண்ணினாப்போலே யென்னுடைய துஃக்கத்தையெல்லாம்போக்கி யருளினவனைச் சொன்ன விப்பத்தும் வானவர்தம் இன்னுயிர்க்கேறானவனைத் தருமென்கிறார். (௧௧)

ஈடு; அவ:—நிகமத்தில், இத்திருவாய்மொழி, தன்போக்யதையாலே நித்யஸூரிகள் ஹ்ருதயத்தை நோவுபடுத்துமென்கிறார்.

(ஆறுமதயானையடர்த்தவன்றன்னை) ஒருநாளும் மாறாதமதத்தையுடைய குவலயாபீடத்தை நிரஸித்தவனை. அத்தைநிரஸித்தாப்போலே யென்விரோதியைப்போக்கினவனை. (சேறார்வயல்) குவலயாபீடமோதான், திருநகரியில் வயலையுழுவது நடுவதாகவொட்டாதேகிடந்தது!.

(நூறேசொன்னவோராயிரம்) கிழிகிழியாகக்கொடுப்பாரைப்போலே, நூறுநூறாகச்சொன்னபடி; பாரதராமாயணாதிகளில்காண்டபர்வாதிபேதம்போலே, தரிப்பார்க்கெளிதாம்படி செய்தாரென்கை. இத்திருவாய்மொழி, நித்யஸூரிகள் ஹ்ருதயத்தைப்புண்படுத்துமென்னுதல்; நித்யஸூரிகளுக்கேறான ஸர்வேஶ்வரனைத் தருமென்னுதல். (௧௧)

நான்காம்திருவாய்மொழி முற்றிற்று.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# ஒன்பதாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### இன்னுயிர் ப்ரவேசங்கள்.

ஆறு;—( இன்னுயிர்ச்சேவலும் ) இப்படி யெம்பெருமானை ப்ரத்யக்ஷித்தாப்போலே திருவுள்ளத்தாலே விசதமாகவநுஸந்தித்து, பாஹ்யஸம்ச்லேஷத்திலே ப்ரவ்ருத்தராய், அதுகைவாராமையாலே, எம்பெருமானோடேகலந்து பிரிந்தாளொரு பிராட்டியைப் போலே அவஸந்நராய், அவளுடைய பாசுரத்தாலே தம்முடைய வ்யஸநத்தைப்பேசுகிறார்.

இப்பிராட்டிதான், எம்பெருமானைப் பிரிந்திருக்கிறஸமயத்திலே சிலகுயில்களுடைய கூக்குரல்களைக்கேட்டுத் தனியேசிந்திக்கிறாள்; எம்பெருமான் " என்னை முடிக்கவேண்டும் " என்றுகோலி, முடிக்குமிடத்தில் ஸ்வவிச்லேஷத்தாலல்லது முடிக்கவொண்ணாமையாலே, விச்லேஷந்தான் ஸம்ச்லேஷத்தை யொழியக்கூடாமையாலே, விச்லேஷார்த்தமாக ஸம்ச்லேஷித்து, பின்னை விச்லேஷிப்பதுஞ்செய்து, " இந்தவிச்லேஷத்தாலும் முடியாதொழியிலோ " என்னும் சங்கையாலே, "மத்விச்லேஷத்திலும் கொடிதானவென் குணங்களை அவளுடைய ஸந்நிதியிலேசொல்லி அவளைமுடியுங்கோள் " என்று சொல்லிக் குயில்களைப்போரவிட்டானென்று தன்னிலேசிந்தித்து,

ப:— அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ்-மாநஸமாக வபரோக்ஷித்தநுபவித்து ப்ரீதரானவர், அவ்வநுபவாநுரூபமாக பாஹ்யஸம்ச்லேஷத்திலே யபிநிவேசம்பிறந்து; அநுபாவ்யனை ஸர்வேச்வரனுடைய வாச்ரிதஸௌலப்யத்தையும், ஸௌசீல்யத்தையும், தத்பந்தமான வாகர்ஷகத்வத்தையும், ஆச்சர்யகுணயோகத்தையும், அநந்யார்ஹத்வாபாதகத்தையும் அநுபாவ்யமான அவயவசோபையையும், சைதில்யஜநகமான ரூபவைலக்ஷண்யத்தையும், அவஸாதகரமான நாமவத்தையையும், போக்யமான புண்டரீகாக்ஷத்வத்தையும். ப்ராப்யதேசவர்த்தித்வத்தையு மநுஸந்தித்து, ஏவம்பூதனானவனோடு யதாமநோரதங்கலந்து பரிமாறப்பெறாதவார்த்திக்கு மேலே, ஸ்வச்சந்தவர்த்திகளான லௌகிக பதார்த்தங்களும் தத்குணவிக்ரஹாதிகளுக்கு ஸ்மாரகமாக

அத்தாலேஶிதிலராய், கத்யந்தரஶூந்யதையாலே அவனுடைய குணாநுஸந்தாநத்தாலே தரித்த ப்ரகாரத்தை, நாயகனான ஈஶ்வரனைப்பிரிந்தாளொருநாயகி தன்னாற்றாமையாலே "லௌகிகமான பக்ஷ்யாதிபதார்த்தங்களைக்கண்டாகிலும் போதுபோக்குவோம்" என்றபிஸந்திபண்ணி பரஸ்பரஸம்ஶ்லிஷ்டஙகளாய் ரஸித்துத்திரிகிறவவை அவனுடையஸம்ஶ்லேஷத்துக்கும் வடிவுக்கும் பேச்சுக்கும் ஸ்மாரகமாய்க்கொண்டு நலிய, அத்தாலே யீடுபட்டுப் போலிகண்டிரங்கினவள்; பின்னும் போக்கில்லாமையாலே அவனுடையகுணங்களை ஸ்மரித்து தரித்தபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஈடு;—"தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றுகளித்தவர், தம்முடைய ப்ராணரக்ஷணத்துக்கு திர்யக்குக்களின் காலிலேவிழும்படியாயிற்று. "தேவர்கட்கெல்லாம் கருவாகிய கண்ணனைக்கண்டுகொண்டேனே" என்னும்படி வைஶத்யம்பிறந்தபோதே, பாஹ்யஸம்ஶ்லேஷத்திலே யபேக்ஷைபிறந்தது. "இவர்க்கின்னம் விடாயைப்பிறப்பித்து முகங்காட்டவேணும்" என்று இவரபேக்ஷிதத்தைச் சடக்கெனத்தலைக்கட்டிற்றிலன் ஈஶ்வரன்.

நினைத்தபோதே யபேக்ஷிதம் பெறாமையாலே தளர்ந்து, "லௌகிகபதார்த்தாநுஸந்தாநத்தாலே ஹ்ருதயத்தை யந்யபரமாக்கி தரிப்போம்" என்றும், "அவனோடுபோலியானபதார்த்தங்களைக்கண்டாகிலும் தரிப்போம்" என்றும் லௌகிகபதார்த்தங்களிலே கண் வைத்தார்; அவை யாஶ்வாஸஹேதுவன்றிக்கே, ஸ்மாரகமாய் பாதகமாகப்புக்கது. ஏதேனுமொருபதார்த்தம் தோற்றிலும், அவற்றினுடைய ஸத்பாவம் அவனையொழியவில்லாமையாலே, அவனைக்காட்டிக்கொண்டிறே தோற்றுவது. லௌகிகபதார்த்தங்கள் அவனுக்கு ஸ்மாரகமாய் நலிய, அவற்றால் நோவுபடுகிறபடியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார்.

எம்பெருமானோடேகலந்து பிரிந்தாளொருபிராட்டி, தன்னாற்றாமையாலே "அவனோடு போலியான பதார்த்தங்களைக் கண்டாகிலும் தரிப்போம்" என்று, அவ்வாற்றாமை கைகொடுக்க உத்யாநத்திலேபுறப்பட, அங்குண்டான குயில்மயில் தொடக்கமானவை அவனுடைய பேச்சுக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய்நலிய, "இவைநலிகைக்கு இவற்றோடு நமக்கொருபகையில்லை, இவைநலிகைக்கு ஓரடி

யுண்டாகவேணும், அவன், நம்மை 'முடிக்கவேணும்' என்று பார்த்தான், 'அதுக்கு உபாயம் விஶ்லேஷம்' என்றுபார்த்து, பிரிவுகலவியை யொழியக் கூடாமையாலே கலந்தான் பிரிந்தான். பிரிந்தவிடத்திலும் நாம் முடியாதிருந்தோம், பிரிந்து நோவுபட்டிருக்கிற ஸமயத்திலே 'நம்மோடுபோலியான பதார்த்தங்களைக்காட்டி முடிப்போம்' என்று பார்த்து வரவிட்டானித்தனை; உங்களுக்கு நினைவிதுவாகில் இப்பாரிப்பெல்லாம்வேணுமோ" என்று அவற்றுக்கு வார்த்தை சொல்லி. "நம்மைப் பார்த்தாலிறே யிப்படிநோவுபடவேண்டுவது, அவனைப்பார்த்தால் நோவுபடவேண்டாவிறே" என்று அவன் குணஜ்ஞாநத்தாலே, வருந்தி தரித்துத் தலைக்கட்டுகிறதாயிருக்கிறது.

---

# முதற்பாட்டு.

இன்னுயிர்ச் சேவலும் நீருங்கூவிக்கொண்டிங் கெத்தனை * என்னுயிர்நோவமிழற்றேன்மின் குயிற்பேடைகாள் * என்னுயிர்க் கண்ணபிரானை நீர்வரக்கூவுகிலீர் * என்னுயிர்கூவிக்கொடுப்பார்க் குமித்தனைவேண்டுமோ. (க)

ப:—முதற்பாட்டில், ஆஶ்ரிதஸுலபனான க்ருஷ்ணனை வரவழையாதே உங்களில் நீங்களழைத்து மிழற்றி யென்னைநலியாதே கொள்ளுங்கோளென்று, சேவலோடேசேர்ந்த சில குயிற்பேடைகளைப் பார்த்துச்சொல்லுகிறாள்.

(இ - ள்.) குயில்பேடைகாள்-குயிற்பேடைகாள், இன்னுயிர்-பஹிஶ்சரமான ப்ராணன்போலே போக்யமாய் தாரகமான, சேவலும்-சேவலும், இன்னுயிர்நீரும் - அதுக்கினியவுயிராய், என்னோடு ஸ்த்ரீத்வஸாஜாத்யத்தையுடைய நீரும். கூவிக்கொண்டு - ஒருவர்க்கொருவர் ஸம்ஶ்லேஷார்த்தமாக வழைத்துக்கொண்டு, இங்கு-என்ஸந்நிதியிலே, எத்தனை - மிகவும், என் - என், உயிர்-ப்ராணனானது, நோவ-ஈடுபடும்படிக்கீடாக, மிழற்றேன்மின் - அநக்ஷரரஸமான ஸம்ஶ்லேஷ சப்தங்களைப் பண்ணாதே கொள்ளுங்கோள், என் - எனக்கு, உயிர் - தாரகனாயுள்ள, கண்ணன் - க்ருஷ்ணனாகிற, பிரானை - உபகாரகனை, நீர் - நீங்கள், வரக்கூவுகிலீர் - வரும்படி அழைக்கிறிலீகோள், உங்கள்-கூவுதலால், என் - என், உயிர் - ப்ராணனை, கூவி - அபஹரித்து, கொடுப்பார்க்கும் - அவனுக்குக்கொடுப்பார்க்கும், இத்தனை-இத்தனை வ்யாபாரம். வேண்டுமோ-வேணுமோ. (க)

ஆறு;—இக்குயில்களைநோக்கி "அவன்திருநாமங்களைச் சொல்லிக்கூவி யென்னை நோவுசெய்யாதே கொள்ளுங்கோள், இங்கத்தனைக்கு விஷயமுண்டோ" என்ன, இக்குயில்கள் "உன்னைநோவுசெய்கைக்காகவோ அவனை நாங்கள்கூவுகிறது" என்ன; அன்றாகில். அவனை வரக்கூவுகிறிலிகளோ, என்னைமுடிக்கவிறேகூவுகிறது, என்னைமுடிக்கும்போ தித்தனைபாரிப்பு வேணுமோவென்கிறார். (௧)

ஈடு-அவ;—சில குயிற்பேடைகளைக்குறித்து, என்னை முடிக்கைக் கித்தனைபாரிப்பு வேணுமோவென்கிறாள்.

(இன்னுயிர்ச்சேவலும்) நற்சீவனான சேவலும், பஹிஃசராணனைப்போலே கண்வட்டத்திலேவர்த்தியாநிற்கை. பிரிந்து படுகுலையடிக்கும் சேவலைப்போலன்றிக்கே, பேடைக்கு தாரகமாயிருக்கும் சேவலுமுண்டாகாதே?. போக்யமுமாய் தாரகமுமா யிருக்கும் சேவலுமுண்டாகாதே!. (நீரும்) சேவலுக்கின்னுயிரான நீரும். (கூவிக்கொண்டு) சேர்த்தியைக்காட்டி நலிகிறதுக்கு மேலே, பேச்சாலும் நலியவேணுமோ!. ஸம்ஶ்லேஷார்த்தமாக பரஸ்பரநாமக்ரஹணம் பண்ணிக்கொண்டு. (இங்கேத்தனை) இங்கத்தனைக்கு விஷயமுண்டோ! இந்தப்பிரிவாலே சென்றற்றது, உங்கள் பாரிப்புக்கு விஷயமுண்டோ!. (௧) "ஊயிகூ௦ெஶாஹெதெ-அதிகம்ஶோபதே" என்னுமாபோலே நலியாநின்றதாயிற்று.

அன்றிக்கே, (எத்தனை யென்னுயிர்நோவமிழற்றேல்மின்) பிரிவிலே தளர்ந்திருக்கிற வென்னுயிர்நோவ மிகவும்ப்ரணயகூஜிதத்தைப்பண்ணுதேகொள்ளுங்கோள். (உயிர்நோவ) என்கையாலே - உடல் பண்டேசென்றற்றதென்கை. ராமசரம்போலே உயிரிலேபுக்குவ்யாபரிக்கவும் வற்றாயிற்றிந்தத்வநி, (என்னுயிர்) என்கையாலே - இவற்றின்பேச்சுக் கேட்கத்தளிர்க்குமவனில் வ்யாவ்ருத்தி. மிழற்றுகையாவது-திரம்பாமென்சொல்; ஸம்ஶ்லேஷதசையில் சொல்லத்தொடங்கித் தலைக்கட்டாதபேச்சுக்கள். (நோவமிழற்றேல்மின்) இப்பேச்சிவள் செவிப்படில் முடியுமென்றறிந்து, பேசாதிருக்கவேண்டாவோ!. ஸ்த்ரீவதமென்றறிந்தால் மீளவேண்டாவோ!. (குயிற்பேடைகாள்) விஜாதியர்செய்வதை நீங்களுஞ்செய்யவேணுமோ, சேவலைக்கொண்டு கார்யங்கொள்ளநினைத்தாலும், பேடையின்காலையிறே பிடிப்பது!.

---

(௧) ரா-கிஷ்-௧-௧00-

(என்னுயிர்க்கண்ணபிரானை) "எங்களைக் காதுகரைச்சொல்லுமாபோலே சொல்லுகிறதென்" என்றினவாகக்கொண்டு; எனக்கு தாரகனான க்ருஷ்ணனை வரக்கூவுகிறிலிகோள். தாரகங்கள், வ்யக்திதோறும் வ்யவஸ்த்திதங்களாயிறேயிருப்பது. திர்யக்குக்களுக்கு த்ருணம்; மநுஷ்யர்களுக்கு அந்நம், தேவர்களுக்கு அம்ருதம், இவளுக்கு க்ருஷ்ணன்; * எல்லாங்கண்ணனிறே (கண்ணபிரான்) பரார்த்தமாகத்தன்னை யோக்கிவைக்குமவன். (நீர்) அந்வயத்தில் ரஸமறியும் நீங்கள், வ்யதிரேகத்தில் நோவுமறியவேண்டாவோ!. (வரக்கூவுகிலீர்) நீங்களவன்முன்னேசென்று த்வநித்திகோளாகில், தானேசெல்லாமையை நினைத்துவாரானே; அது செய்கிறிலிகோள். என்னை நலியவேண்டுவன செய்திகோளித்தனை; நானுமவனும் சேருகைக்குவேண்டுவன செய்திலிகோள். அழிக்கவல்லவை சேர்க்கவும் வற்றென்றிருக்கிறாள். இவற்றின் வாயதுவானதொன்றிருக்கிறாள்.

(என்னுயிர்கூவிக் கொடுப்பார்க்கு மித்தனைவேண்டுமோ) என்னையு மவனையுஞ் சேர்க்கிறிகோளல்லாதபின்பு, இனியென்னை முடிக்கையாயிருந்ததிறே யுங்களுக்குக்கருத்து; அதுக்கிப்பாரிப்பெல்லாம்வேணுமோ?. பண்டேசென்றற்ற வென்னுயிரைவாங்கி அவன்கையிலேகொடுக்கையாகில்கருத்து, அதுக்கிதெல்லாம்வேணுமோ? நீங்கள்சேரவிருக்கையும், கலக்கையும், அந்யோந்யநாம க்ரஹணம் பண்ணுகையும், ப்ரணயகத்கதத்வநியும், இதெல்லாம்வேணுமோ?. நொந்தாரைஜீவிப்பிக்கையன்றோஅரிது?, முடிக்கையில் பணியுண்டோ?. (௧)

---

## இரண்டாம்பாட்டு.

இத்தனைவேண்டுவதன்றந்தோ வன்றிற்பேடைகாள் * எத்தனைநீரும்நுஞ்சேவலுங் கரைதேங்குதிர்* வித்தகன்கோவிந்தன்மெய்யனல்லனொருவர்கும்* அத்தனையாமினியென்னுயிரவன்கையதே.

ப:—அநந்தரம், பசுக்களுக்கும் ரக்ஷகனாம்படி ஸௌசீல்யனான க்ருஷ்ணனை மெய்யனாகநினைத்து, என்னை யவனுக்காக என்செய்யக்கலிகிறிகோளென்று, சிலவன்றிற் பேடைகளைச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) அன்றிற்பேடைகாள் - பிரிவில் தரிக்கமாட்டாத ஸ்வபாவத்தையுடையவன்றிற்பேடைகாள், நீரும் - சேவலின்நினைவறிந்து பரி

மாறும், சேவலும் - சேவலுமாய்க்கொண்டு, எத்தனை - எத்தனைப்ரகாரம், கரைந்து-ஸம்ஶ்லேஷரஸத்தாலே யுள்ளழிந்து, ஏங்குதிர்-ஶப்திக்கிறிகோள்- இத்தனை - இத்தனையதிப்ரவ்ருத்தி, வேண்டுவதன்று - வேண்டுவதன்று, அந்தோ! - என்னை நலியும்படி யுங்களைவரக்காட்டின, வித்தகன் - விஸ்மயநீய சேஷ்டிதனாய், கோவிந்தன் - பசுக்களையும் ரக்ஷிக்குமவனென்கிற ஸௌஶீல்யத்தைப்ரகாசிப்பித்துலோகத்தைவசீகரிக்கும் க்ருஷ்ணனானவன், ஒருவர்க்கும் - நாட்டாரோடு நல்லவர்களோடுவாசியற வொருவர்க்கும், மெய்யனல்லன்-மெய்பரிமாறுவானொருவனல்லன், ஆனபின்பு, அவன் நினைவின்படி யுங்கள் ப்ரவ்ருத்தியுண்டாகையாலே, இனி - இனி, என்னுயிர் - என்ப்ராணனானது, அவன்கையதேயாமத்தனை - அவன்கையதேயாமத்தனை. (உ)

ஆறு:—(இத்தனை) அன்றிற்பேடைகாள், "நீரும் நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர்; என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்கு மித்தனை வேண்டுவதில்லை" என்றுசொல்ல; அவையும், "உன்னோடுள்ளகலவியே தாரகமாக விருக்கிறவனொரு க்ஷணமுன்னைப்பிரியுமளவில் அவனையிங்ஙனே கொடுமைசொல்லவேணுமோ, தானே வருகிறானிறே" என்ன; அவனங்ஙனே ப்ரணயஸ்வபாவனைப்போலே யிருக்குமத்தனைகாண், அவனொருவர்க்கும் மெய்யாக ஸ்நேஹியல்லன், ஆனபின்பு, அவன்வருகையென்றொரு பொருளுண்டோ, இனியென்னுயிரானது முடிந்ததிறே யென்கிறாள். (உ)

ஈடு; அவ;—சிலவன்றிற்பேடைகளைக்குறித்து, உங்கள்சேவல்களும் நீங்களுமாய் ப்ரணயகூஜிதங்களாலே யென்னை நலிகிறதென்னென்கிறாள்.

(இத்தனைவேண்டுவதன்று) என்னை முடிக்கைக்கித்தனைவேண்டுவதில்லை. குயில்களைப்பார்த்து, "இத்தனைவேண்டுமோ!" என்னாநிற்கச்செய்தே, இடையிலே அன்றிலினுடைய த்வநிகலிய, அப்பாசுரமே யிவற்றுக்குஞ் சொல்லவேண்டும்படியிறே பிறந்ததசை. மஹாராஜரும் வாலியும் பொராநிற்க நடுவே பொளியம்பாகப் பெருமாள்விட்டாப்போலே; குயில்களு மிவளுமாய். "கூவாதேகொள்ளுங்கோள்" என்பது, அவையுயரக்கூவுவது, ஆகாநிற்கச்செய்தே, நடுவே அன்றிலானது, செவிவழியே நெருப்பையுருக்கிவார்த்தாப்போலே த்வநிக்க, புரிந்துபார்த்து, "இவையே யமையாதோ! நீங்களும் வேணுமோ!" என்கிறாள்.

இவளிப்படி சொல்லச்செய்தேயும் த்வநிக்கத்தொடங்கிற்று - (அந்தோ) "சரணம்" என்றவாயை யம்பாலே நிறைப்பாரைப்போலே, உங்கள்படி யிருந்தபடியென! ஐயோ! என்கிறாள், (அன்றிற்பேடைகாள்) குயிற்பேடைகளிற்காட்டி லுங்களுக்கொரு வாசிகண்டிலோம்; உங்கள்சேவலிற்காட்டி லொருவாசியுங் கண்டிலோம். நலிகைக்கு, ஸஜாதியரிலும் விஜாதியரிலும் அவ்வருகாயிருந்திகோள். "நாங்களென்செய்தோம்" என்ன (எத்தனை) மிகவும். (நீரும் நுஞ்சேவலும்) சேவலின்கருத்தறிந்து நடத்துகிறநீரும், உங்கள்கருத்தறிந்து பரிமாறுகிறவுங்கள் சேவலும் (க) "ஜஜ்ஞாதநிவ்ருத்தீ-அந்தர்ஜாதமபிவ்யக்தம்" என்னுமாபோலே, பேடையின்கருத்தறிந்து பரிமாறுநின்றதாயிற்றுச்சேவல். (கரைந்தேங்குதிர்) பிறரை நலிகைக்காகத் தங்காமையழித்துக் கொள்வாருண்டாகாதே!. ப்ரணயதாரையில் தானழிந்தவனன்றோ தோற்றப் பரிமாறுநின்றன. இருவர் கூடக்கலக்கும் ஸமயமோவிது!. கலந்தாற்றான், உங்கள் தசை தோற்றவாய்விடவேணுமோ!.

(வித்தகனித்யாதி) "அவனொரு க்ஷணகாலம் தாழ்க்குமளவில் எங்களையிட்டு அவன் நலிவிக்கிறானைச் சொல்லவேணுமோ" என்ன; அவன்படிகளையுட்புக்க வென்பக்கலிலேகேளுங்கோள் - (வித்தகன்) விஸ்மயநீயன்; இப்போது. அநுகூலர்க்கு * அரியவித்தகன். (கோவிந்தன்) ஸர்வரக்ஷகன் இக்கால் - ஸர்வரக்ஷகரைப்போலே யிருந்து பாதகனுமவன். ரக்ஷகனென்று பற்றப்போகாது, பாதகனென்று விடப்போகாது. (மெய்யனல்லனொருவர்க்கும்) "பரமப்ரணயி, ஸர்வரக்ஷகன" என்றுநினைத்து அவன்கார்யம செய்யப்போந்த வுங்களுக்கும் பொய்பேபனிப்பது.

(உ) "ராமோத்விர்நாபிபாஷதே" (ந) "நத்யஜேயம்-கதஞ்சந" (ச) "ஏதத்வ்ரதம்மம" என்னும் ராமாவதாரம்போலே யென்றிறே நீங்கள் நினைத்திருக்கிறது; பகலையிரவாக்குவது, "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுப்பதாகையிறே யிவ்வவதாரத்துக்கு க்ருத்யம். "ராமாவதாரத்தில் மெய்யும், க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யுமிறே ஆஸ்ரிதர்க்

(க) ரா-பா-எஎ உஎ. (உ) ரா-அயோ-கஅ-௩೨-
(௩) ரா-யு-கஅ-௩- (ச) ரா-யு-கஅ-௩உ-

குத்தஞ்சம்; அவன்பொய்யனாகிலென், மெய்யனாகிலென், இருந்த படியுகக்குமத்தனையன்றோநாங்கள் '' என்றுதொடங்கின கார்யத்தி லேமுதிராநின்றன.

(அத்தனையாமினி) இனியத்தனையாகாதே!. இவற்றிலொருப் பாடிருந்தபடியால், அவன்நினைவேதலைக் கட்டிவிட்டதாகாதே! என் கிறாள். என்ப்ராணன் அவன் கைப்பட்டபின்பு, என்னுடைய ரக்ஷ ணத்துக்கு உங்கள்கால் பிடிக்கவேண்டாவே. (உ)

## மூன்றாம்பாட்டு.

அவன்கையதே யெனதாருயிரன்றிற்பேடைகாள் * எவஞ்சொ ல்லிநீர்குடைந்தாடுதிர் புடைசூழவே * தவஞ்செய்திலாவினைபா ட்டியேனுயிரிங்குண்டோ * எவஞ்சொல்லிநிற்றும்நும்மேங்கு கூக் குரல்கேட்டுமே. (ங)

ப:—அநந்தரம், அவனுடைய ஸௌசீல்யாதிசயத்தாலே ஆக்ருஷ் டப்ராணையாயிருக்கிற நான் உங்கள் ஶப்தத்தைக்கேட்டும் எத்தைச் சொல்லி தரிப்பேனென்று, பின்னையும் அவ்வன்றிற்பேடைகளைக் குறி த்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) அன்றிற்பேடைகாள் - அன்றிற்பேடைகாள், அவன்கை யதே - அந்த ஸுஶீலனான கோவிந்தன்கையதே. எனதாருயிர் என்னு டைய ப்ராணனானது, நீர் - நீங்கள், எவம்சொல்லி - எத்தனை உக்திவி சேஷங்களைப்பண்ணி, குடைந்து-ஒன்றுக்கொன்றுள்ளே யாம்படி ஸம் ஶ்லேஷித்து, புடைசூழவே - என்னுடைய பரிஸரத்திலே, ஆடுதிர் - ஸஞ்சரிக்கிறிகோள், தவம் - அவனைப்போலே பிரிவுக்காறியிருக்கும் பாக்யத்தை, செய்திலா - பண்ணாதே, வினையாட்டியேன்-போலிகண் டுபடும்படியான பாபத்தைபண்ணின வென்னுடைய, உயிர் - ப்ராண ன் அங்கே போனபடியாலே, இங்கு - இங்கு; உண்டோ - உண்டோ நும்-உங்களுடைய, ஏங்கு-ஸம்ஶ்லேஷஶீதிலமான, கூக்குரல்-ஶப்தங் களை, கேட்டும் - கேட்டும், எவம்-எத்தை, சொல்லி-சொல்லி, நிற்றும்- நிற்பது. (ங)

ஆறு:—(அவன்கையதே) எம்பெருமானோடே கலந்து பரிமாறு கைக்கு பாக்யஹீனையானவென்னுயிர்; நும்மேங்குகூக்குரல்கேட்டு

மயங்கிக்கிடக்கச்செய்தே, அதின்மேலே யேதேனுஞ்சொல்லிக்கொண்டு ஏன்குடைந்து ஆடுகிறீகோள் என்னருகே நின்று என்கிறாள்.

ஈடு; அவ:—அவ்வன்றிற்பேடைகள் தம்மையே, திரியவும், தன்செயலறுதியாலே யிரக்கிறாள்.

(அவன்கையதேயெனதாருயிர்) என் ப்ராணன், அவன்கையதே. மிதுநமாகில் ப்ராணன்கள் மாறாடியன்றோவிருப்பது?, உங்களுக்கிது அவ்யுத்பந்நமோ?. (அன்றிற்பேடைகாள்) அநவயரஸமறிவார், பிரிந்தார் படுவதுமறியவேண்டாவோ?. (எவஞ்சொல்லி) ஏதேனும் சிலவற்றைச்சொல்லி. அவைசொல்லுகிற பாசுரஞ்சொல்லில் தன்வாய் வேம்போலேகாணும்!. (நீர்குடைந்து) ஒன்றிலேயொன்றவகாஹித்து. (ஆடுதிர்) பரிமாறாநின்றீகோள். (புடைசூழவே) சுற்றிலே ஸஞ்சரியாநின்றீகோள்; அடைமதிட் படுத்துவார் சுற்றிலேவிட்டுக் கொண்டிருக்குமாபோலே. செவியைப் புதைத்துப் பிழைப்பேனோ!, கண்ணைப்புதைத்துப் பிழைப்பேனோ!. பெருமாளும் பரிகரமும் லங்கையை யழிக்கைக்குச் சூழப்போந்தாப்போலே காணும் இவளுக்கிருக்கிறது. பாவியேன்!, உங்கள்பாரிப்புக்கு இங்கு விஷயமுண்டாகப் பெற்றதில்லை;

(தவஞ்செய்தில்லா) உயிரை யிங்கேவைத்து உங்களுக்குபகரிக்க பாக்யம்பண்ணிற்றிலேன். "அவனைப்போலே பிரிவுக்குச் சிளையாதபடி பாக்யத்தைப் பண்ணப்பெற்றிலேன்" என்று பிள்ளான் பணிக்கும். (உயிரிங்குண்டோ!) வல்லடிக்காரர்க்கு விளக்கேற்றிக் காட்டுமாபோலேகாணும், "இங்குண்டோ!" என்று காட்டுகிறபடி. (எவஞ்சொல்லிநிற்றும்) எத்தைச் சொல்லி தரிப்பது. (நும்மித்யாதி) ப்ரணயபரவசமான உங்களுடைய த்வநியைக்கேட்டும், பிரிவுக்கு தரித்திருக்கிலும், உங்கள் த்வநிக்குப் பிழைக்கவல்லோமோ!. உங்கள் த்வநி, கேட்டாரை முடிக்குமதன்றோ!. உங்கள் செவியைப்புதைத்தோ நீங்கள் கூப்பிடுகிறது?. (க) "நிலநம்வநாகாநாம் நிஸ்வநம்வாரிணாம் । வசுணாரீகவிஸாலாக்ஷீ கயமேஷாஸவிஷ்யதி-நிஸ்வநம்சக்ரவாகாநாம் நிஸம்யஸஹசாரிணாம் । புண்டரீகவிஸாலாக்ஷீ கதமேஷாபவிஷ்யதி." (ந)

---

(க) ரா-கி-நூ-கூ-

## நான்காம்பாட்டு.

கூக்குரல்கேட்டும்நங்கண்ணன் மாயன்வெளிப்படான்* மேற்கிளைக்கொள்ளேன் மின்நீரும்நுஞ்சேவலுங்கோழிகாள் * வாக்குமனமுங்கருமமும் நமக்காங்கதே * ஆக்கையுமாவியுமந்தரநின்றுழலுமே. (௪)

ப:—அநந்தரம், ஆஶ்சர்யகுணசேஷ்டிதனை க்ருஷ்ணன் வருகிறிலன், நீங்களெனக்கு பாதகமாம்படி கூப்பிடாதே கொள்ளுங்கோளென்று, சிலமயிற்பேடைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) கோழிகாள் - மயில்காள், கூக்குரல் - நீங்களொன்றுக்கொன்றழைக்கிறகுரல், கேட்டும் - அவனிருந்தவிடத்திலும் கேட்கும்படியாயிருக்கச்செய்தேயும், நம் - எல்லாரும் "நம்முடையவன்" என்னும்படி பவ்யனாய், மாயன் - கிட்டினாரை யாஶ்சர்யகுண சேஷ்டிதங்களாலே யீடுபடுத்தும், கண்ணன் - க்ருஷ்ணன், வெளிப்படான்- வருகிறிலன், நும் - உங்கள், சேவலும் - சேவலும், நீரும் - நீருமாகச்சேர்ந்துகொண்டு, மேல் - மேலே, கிளைக்கொள்ளேன்மின் - திரளாகக்கூப்பிடாதே கொள்ளுங்கோள், நமக்கு - எங்களுக்கு, வாக்கும் மனமும் கருமமும் - வாங்மநஃகாயங்கள், ஆங்கதே - அவன்பக்கலிலேயாயிற்று; ஆக்கையும் - சரீரமும், ஆவியும் : ப்ராணனும், அந்தரம் நின்று-நடுவே, உழலுமே - அலமருகிறவித்தனை.

கோழி - மயில், கிளைத்தல் - சப்தித்தல். (௪)

ஆறு;—(கூக்குரல்) கோழிகாள், நீரும் நுஞ்சேவலும் மேன்மேலுமவனை யென்செய்யக் கூவுகிறிகளென்ன; "நாங்களவனைவரக் கூவுகிறோம்" என்று அவைசொல்ல; அவன்வருகைக்குக் கூவுகிறிகளாகில் அவன் வாராதொழிகிறதென்?, ஆதலால், அவன்வரக்கூவுகிறீரல்லீர், என்னை முடிக்கைக்காகக் கூவுகிறீர்தாமோ?, முன்னமேயென்னுடைய ஸர்வகரணங்களும் முடிந்தன, இனி யென்செய்யவருந்துகிறீர்கள்? என்ன; கரணங்கள் முடிந்தனவாகி லுன்னுடைய பேச்சு மிச்சேஷ்டிதங்களுங் கூடுகிறபடியெங்ஙனேயென்னில்; முடியச்செய்தே, என்னுடைய வாக்கையுமாவியும் நடுவேநின்று பழைய வ்யஸநவாஸநையாலே யுழைக்கிறனவத்தனை யென்கிறாள். (௪)

ஈடு; அவ:—சிலமயில்களைக்குறித்து, நீங்களுச்சமாகக்கூவி நலியாநின்றிகோளென்கிறாள்.

(கூக்குரல்கேட்டும்) நீங்கள் கூவுகிற த்வநியைக்கேட்டு வைத்தும். இவற்றின் த்வநி செல்லாதவிடமில்லை யென்றிருக்கிறாள். (நங்கண்ணன்) வடயக்ஷப்ரஸிக்திபோலேகிடீர் பவ்யமென்னுமிது. (மாயன்) ஆஶ்சர்யசீலன்; கலக்கும் ஸமயத்தில் மெய்போலே பரிமாற வல்லவன். (வெளிப்படான்) "இவள் பிழையாள்" என்று தோற்றுகிறிலன்; (க) "தாஸாஶாவிர ஹ்ருக-தாஸாமாவிரபூத்" என்னுமவன்கிடீர். ருஷியும், "ஆவிரஹ்ருக ஆவிரபூத்" என்றான்; இவளும், "வெளிப்படான்" என்றாள்.

(மேல்கீழைக் கொள்ளேல்மின்) மேலானகீழை-உச்சமான த்வநி ஜாத்யுசிதமாய் ப்ரணயவ்ருத்தமான உச்சஸப்தத்தைப்பண்ணாதே கொள்ளுங்கோள். இவளீடுபடப்பட, ஒருதானமெழ வைத்துக் கூவாநின்றனவாய்த்து. (நீருஞ்சேவலும்) ஒன்று தொடங்கின கார்யத்தை ஸஹசரமுந்தொடங்கிக் குறையுங்கூட முடியாநின்றது. (கோழிகாள்) ஸ்த்ரீவதம்பண்ணுகைக் கொருஜாதியாக வொருப்படவேணுமோ. கோழியென்கிறது-மயிலை. "'நீர் நலியாதே கொள்ளுங்கோள்' என்னுமளவும் பார்த்தன்றே நாங்களிருக்கிறது, ஸர்வ கரணங்களையு மபஹரிக்கவந்த நாங்கள் தவிருவோமோ, தொடங்கினகார்யம் தலைக்கட்டவேணுமே யெங்களுக்கு" என்று கருத்தாக, அதுக்காகில் பின்னை அங்கே போங்கோளென்கிறாள்.

(வாக்கும் மனமும் கருமமும் நமக்காங்கதே) என்னுடைய ஸர்வகரணங்களு மவன்பக்கலின. "அங்கேபோயிவை த்வநிக்க அவனுக்குத் தரிப்பரிதாய்வந்து முகங்காட்டும்" என்னும் நினைவாலே சொல்லுகிறாள். அங்கேபாகி விப்ரலம்பச்சும் சேஷ்டிதங்களும் கூடினபடியென்னென்ன (ஆக்கையுமாவியு மந்தரநின்றுழலுமே) வ்யஸநவாஸநையாலே, தேஹமும் ப்ராணனும் நடுவே நின்று க்லேஸப்படுகிற வித்தனை. பிடித்துவிட்டகொம்புபோலே வாஸனையேயுள்ளது. நோவுபடவேண்டுவதுண்டு, நலிகைக்காஶ்ரயமில்லை. (சு)

## ஐந்தாம் பாட்டு.

அந்தரநின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள்* நுந்திறத்தேதுமிடையில்லை குழறேன்மினோ * இந்திரஞாலங்கள்காட்டி யிவ்வேழுலதுங்கொண்ட * நந்திருமார்வன்நம் மாவியுண்ணநன்கெண்ணினான். (ரு)

(க) பார-கூ0-ரு-உ-

ப:— அநந்தரம், க்ருத்ரிமசேஷ்டிதங்களைக்காட்டி ஸர்வலோகத்தையும் பிறர்க்காகாதபடி பண்ணுமவன். உள்ளாளான வுங்களையிட்டு நம்முடைய ப்ராணாபஹாரம்பண்ணுகைக்கு நன்றாக வெண்ணினானென்று தன்னுடைய பூவைகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) நலிகைக்கு விஷயமின்றிக்கே யிருக்கச்செய்தே, அந்தரநின்று - நடுவே, உழல்கின்ற - நிஷ்ப்ரயோஜநமாகவலமருகிற, யானுடைப்பூவைகாள் - நான் என்னுடையவை என்றபிமாநித்த பூவைகாள், நுந்திறத்து - உங்களிடையாட்டத்தில், என்னை நலிகைக்கு, ஏதுமிடையில்லை ஓரவகாசமில்லை. குழறேன்மின் - நீங்கள், அநக்ஷரரஸமாம்படி சப்தியாதே கொள்ளுங்கோள்; இந்திரஞாலங்கள்காட்டி - இந்த்ரஜாலங்கள்போலே, மெய்யென்று - ப்ரமிக்கும்படியாக குணவிக்ரஹ சேஷ்டிதங்களைக்காட்டி, இ - இந்த, ஏழுலகும் - ஸப்தலோகத்தையும், கொண்ட - பாரிமாநத்தையும் ஸ்வாமிமாநத்தையு மறுத்துத் தனக்கேயாம்படி பண்ணிக்கொண்டு, நந்திருமார்வன் - நமக்கு, தன் திருமார்விலேயிருக்கிற பிராட்டிபக்கல் ப்ரணயித்வத்தைக்காட்டி யகப்படுத்தினவன், நம் - நம்முடைய, ஆவி - ப்ராணனை, உண்ண - க்ரஸித்துக்கொள்ளுகைக்கு, நன்கு - நன்றாக, எண்ணினான் - நிரூபித்தான். (ஞ)

ஆறு;—(அந்தரநின்று) உங்களுக்கு நானென்ன அநிஷ்டம் பண்ணினேன்; "நீங்கள்நடுவேநின்று அவன் திருநாமங்களைச் சொல்லி யென்னைபாதியாதே கொள்ளுங்கோள்" என்று பூவைகளை நோக்கிச்சொல்லி, பண்டிந்தலோகத்தைத் தனக்காக்கிக்கொள்ளுகைக்குச் சிலபொய்செய்தாப்போலே - என்னோடேகலந்து பரிமாறுகிறானாகத் தோற்றும்படி சிலபொய்களைச் செய்தகன்றுபோன விது; என்னை முடிக்கைக்கு நல்லவிரகுபார்த்தான், என்னசதுரனோ! என்று தன்னிலேநொந்து சொல்லுகிறாள். (ரு)

ஈடு; அவ:— தன்னினவாயிருந்தாலிகிற பூவைகளைக்குறித்து, அவன்றான் என்னைமுடிக்கைக்கு நல்லவிரகுபார்த்தான், இனியுங்களுக்கிங்குவிஷயமில்லை யென்கிறாள்.

(அந்தரநின்றுழல்கின்ற) உங்களுக்கிங்குவேண்டிய விஷயமின்றிக்கேயிருக்க, நடுவேநின்று வ்யர்த்தமே க்லேசப்படுகிறகோளிதகளை (யானுடைப்பூவைகாள்) என்னுடைப்பூவைகாள். ஸர்வஸாதாரணராயிருப்பார் செப்பவற்றை, சிலர்க்கு ஸ்வமாயிருப்பார் செய்யக்

கடவதோ?. நான் எனக்கு என்னவளையுமாகாதே பாதிக்கைக்கு! ; அவனும் என்னுடையவனானையிறே நலிந்தது!.

(நுந்திறத்தேதுமிடையில்லை) உங்களிடையாட்டத்தில், என்னை நலிகைக்கோ ரவகாசமில்லை; உங்கள்பாரிப்புக் கென்பக்கலோ ரவகாச மில்லையென்றுமாம். ( குழறேல்மின் ) அநக்ஷரஸமானபேச்சைக் காட்டி முடியாதேகொள்ளுங்கோள். அவன் தானதிகரித்தகார்யத் தில் நெகிழநின்றானிலன்றோ, நீங்களிப்படி முதிரநிற்கவேண்டுவ து!; அதுக்கு உங்களுக்கவகாசம்வைத்தானோ!.

(இந்திரஞாலங்கள்காட்டி) கண்டார்க்கு விடவொண்ணாதவடி வையும். சீலத்தையும், சேஷ்டிதத்தையுங்காட்டி. இவைநிலைநில்லா மையாலே "பொய்கள்" என்கிறாள். இந்திரஞாலமென்றும், பொய் யென்றும், பர்யாயம். (ஏழுலகுங்கொண்ட) பிறருடைய வஸ்துவை யபஹரிக்கப்புக்கால், அவர்களுக்கொன்றும் சேஷியாதபடி யபஹ ரிக்குமவன்.

( நந்திருமார்வன் ) ப்ரணயித்வத்தால்வந்த ப்ரஸித்தியை யெனக்குக்காட்டி, பிராட்டியோடே பழகிற்றும், ப்ரணயியாயன்று; அத்தைக்காட்டிக்கண்டாரை யகப்படுத்திக்கொள்ளுகைக்காக. சில பொய்களைக்காட்டி பூமியைக்கொண்டாப்போலே, கலந்து பரிமாறு கிறானென்று தோற்றும்படி சிலபொய்களைச்செய்து விஶ்லேஷிக் கை, என்னைமுடிக்கைக்கு உபாயமென்றுமாம். ( நம்மாவியுண்ண நன்கெண்ணினான்) நம்மைமுடிக்கைக்கு நல்விரகுபார்த்தான். உங் களுக்கிங்கவகாசமில்லை; ஸர்வஶக்தியுத்யோகித்தகார்யத்திலே குறை கிடப்பதாய், அதிலே நீங்களும் ஸஹகரிக்கிறிகோளோ!.

" நம்மைமுடிக்கப் பார்த்தபார்வை அழகிதாகப் பார்த்தான் " என்று தன்னிலே நொந்துசொல்லுகிறாளென்றுமாம். (௫)

---

# ஆறாம்பாட்டு.

நன்கெண்ணி நான்வளர்த்த சிறுகிளிப்பைதலே * இன்குரல் நீமிழற்றேல் ஓருயிர்க் காகுத்தன் * நின்செய்யவா யொக்கும் வாயன் கண்ணன் கைகாலினன் * நின்பசுஞ்சாமநிறத்தன் கூட் டுண்டுநீங்கினான்.

ப:—அநந்தரம், தர்ஶநீயமான அவயவசோபையையுடைய சக்ர வர்த்தித்திருமகன் கலந்துபிரிந்தான், அவனுக்கு ஸ்மாரகமான வடி வோடேயிருந்துஉன்னுடைய ம்ருதுபாஷணத்தாலே நலியாதேகொள் ளென்று, தான்வளர்த்ததொரு கிளியைச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) என் ஆருயிர்-எனக்கு வ்யதிரேகத்திலே தரிக்கவரிதான ப்ராணனாய், காகுத்தன்-(க) "மற்றிலேன் தஞ்சமாகவே" என்னும்படி யான சக்ரவர்த்தித்திருமகன், நின் - உன்னுடைய, செய்ய - சிவந்த, வாய் - வாயை, ஒக்கும் - ஒக்கும், வாயன் - வாயையுடையனாய், கண் ணன் - அத்தோடொக்கும் கண்ணையுடையனாய், கைகாலினன் - அத் தோடொக்கும் கைகாலையுடையனாய், நின் - உன்னுடைய, பசும் - பசு மை மயழியாத. சாமம் - ஶ்யாமநிறம்போலேயிருக்கிற, நிறத்தன் - நிறத் தையுடையவனாய்க்கொண்டு, கூட்டுண்டு-என்னோடேஸம்ஶ்லேஷித்து நீங்கினான் - பிரிந்தான்; நன்கு - எனக்காபத்துக்குதவு வுதியென்கிற நன்மையை. எண்ணி-எண்ணி, நான்-நான், வளர்த்த-வளர்த்துப்போ ந்த, சிறு - சிறியவடிவையுடைத்தாய், பைதல் - மூக்தமான, கிளியே- கிளியே, இன்-இனிமையாலே என்னையீடுபடுத்துகிற, குரல் - குரலை, நீ-அவன்வடிவுக்கு ஸ்மாரகமாய் நலிகிறநீ, மிழற்றேல் - அர்த்தோக்தி ஸரஸமாகப்பண்ணாதே கொள். (சு)

ஆறு;—(நன்கெண்ணி) அவன்பிரிந்ததசையில் அவன் திரு நாமங்களையும் சொல்லாமைக்கன்றோ வுன்னைநான்வளர்த்தது?, ஆன பின்பு, அவன்திருவடிவுபோலேயிருக்குமுன்வடிவைக்காட்டி, அதின் மேலே அவன்திருநாமங்களையுஞ்சொல்லி யென்னை நோவுசெய்யா தேகொள்ளாயென்று தன்கிளியைக்குறித்துச் சொல்லுகிறாள். (சு)

ஈடு; அவ:—தன்தசையையறியாதே திருநாமத்தைச்சொல்லு கிறகிளிப் பிள்ளையைக்குறித்து, " எனக்கஸஹ்யமானதசையிலே சொல்லவோ வுன்னைவளர்த்தது " என்று அத்தைநிவர்த்திப்பிக் கிறாள்.

(நன்கெண்ணி) திருநாமம், ஸாத்மிக்குந்தசையறிந்து சொல் லவும் அஸஹ்யமானதசையில் தவிரவுமன்றோ வுன்னைவளர்த்தது?. ( நான்வளர்த்த ) ஏகபுத்ரைகளைப்போலே யாய்த்துவளர்த்தது நானொன்றையாதரிக்கவமையுமாகாதே அந்யதாவாகைக்கு!; அவ னும் கிளியோபாதிபவ்யனாயிறேயிருப்பது; ( சிறுகிளிப்பைதலே )

சிறுமை - பருவம். பைதல் - வ்யஸநத்துக்குத்தக்க பாகமுமின்றிக் கேயிருக்கை, உன்பசற்றனமிறே நலிகைக்கடி, (இன்குரல்) "கூரிய வேல்" என்னும்போலே. (நீமிழற்றேல்) நிரம்பாமென்சொல்லி லென்னைமுடியாதேகொள்; மாத்ருவதத்திலேயும் ப்ரவர்த்திப்பா ருண்டோ!

(என்னுருயிர்க்காகுத்தன்) வ்யதிரேகத்தில் தரிக்கையரிதாம் படியிறே கிட்டினபோது பரிமாறிற்று. (க) "தயாதற்கு மகன்றன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாக" என்றிறே இவரிருப்பது. (நின் செய்யவாயொக்கும்வாயன்) உன்னுடையவர்ப்போலே யிருக்கும் வாயையுடையவன். உபமாநத்தைச் சொல்லிச் சேர்த்துவிடு மித்தனையொழிய, உபமேயந்தன்னைப் பேசமுடியாது. (கண்ணைன்கைகளின்ன்) உன்னைப்போலே சிவந்தகண்ணையும், கையையும், திருவடிகளையுமுடையவன்.

(நின்பசுஞ்சாமநிறத்தன்) உன்னுடைய குளிர்ந்த ஶ்யாமமான நிறத்தையுடையவன். (பசுஞ்சாமம்) ஶ்யாமமாய் ஏரித்திருக்கையன்றிக்கே, குளிர்ந்திருக்கை; ஒருடம்பிலே இத்தனை வகைமேதடிவைக்கலாமோ!. (கூட்டுண்டுநீங்கினான்) கலந்து என்ப்ரக்ருதியைப்பிரிந்தவைத்துப்பிரிந்தான், அவன்கூடவிருந்தாலன்றோ உன்படிகளநுகூலமாயிருப்பது?. தனியிருப்பில் நலிவார் ராவணாதிகளன்றோ?, அநுகூலரும் நலிவரோ? (௬)

---

## ஏழாம்பாட்டு.

கூட்டுண்டுநீங்கிய கோலத்தாமரைக் கண்செவ்வாய்* வாட்டமிலென்கருமாணிக்கங்கண்ணன் மாயன்போல் * கோட்டியவில்லோடு மின்னுமேகக்குழாங்கள்காள் * காட்டேன்மின்நும்முரு வென்னுயிர்க்கதுகாலனே. (எ)

ப:—அநந்தரம், தன்னை யீடுபடுத்தின க்ருஷ்ணன்வடிவுக்குப் போலியான மேகஸமூஹத்தைக்கண்டு, என்னை முடிக்கைக்கு ஹேதுவான வுங்களுடையரூபத்தைக்காட்டாதே கொள்ளுங்கோளென்கிறாள்.

(இ-ள்.) கூட்டுண்டு-என்னோடேக்ரஸமாம்படி ஸம்ஶ்லேஷித்து நீங்கிய- பிரிந்ததசையில், கோலம் - தர்ஶநீயமான், தாமரை-தாமரை

பேரலேயிருக்கிற, கண் - கண்ணையும். செ - சிவந்த, வாய் - அதரத்தை யுமுடையனாய், வாட்டமிலென் கருமாணிக்கம்-இடைவிடாமலெனக்கு ஸ்ம்ருதிவிஷயமான நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையனாய்க் கொண்டு, எனக்கு, கண்ணன்-பவ்யனான க்ருஷ்ணனாகிற, மாயன்போல் ஆஸ்சர்யபூதனைப்போலேயிருக்கிற, கோட்டிய - வளைக்கப்பட்ட, வில் லொடு - வில்லோடேகூட, மின்னும் - மின்னுகிற, மேகக்குழாங்கள் காள் - மேகஸமூஹங்காள், என்-என்னுடைய, உயிர்க்கு-ப்ராணனுக்கு அது - அது, காலன் - ம்ருத்யுருபமாயிருக்கும், நும்முரு - உங்கள்வடி வை, காட்டேல்மின் - காட்டாதேகொள்ளுங்கோள். (எ)

ஆறு;—( கூட்டுண்டு ) என்னோடே கூட்டுண்டுநீங்கி, அதினா லொருவாட்டமின்றியே ஆஸ்சர்யமான அழகையுடையவனாய், சார்ங் காதிதிவ்யாயுதோபேதனாய், ஹாரகேயூராதி திவ்யபூஷண பூஷிதனா யிருந்த கண்ணனைப் போலேயிருந்த, கோட்டியவில்லொடு மின்னு மேகக்குழாங்கள்காள், இந்த வ்யஸநத்தின்மேலே, காட்டேல்மின் நும்முரு, என்னுயிர்க்கதுகாலன் என்கிறாள். (எ)

ஈடு; அவ:-அவன்வடிவுக்குப்போலியான மேகமாலையைக்கண்டு, உங்கள்வடிவைக்காட்டி யென்னை முடியாதேகொள்ளுங் கோளென் கிறாள்.

(கூட்டுண்டித்யாதி) "ஏகதத்வம்" என்னும்படிகலந்து பிரிந் தபின்பு அவனுடைய அவயவசோபையிருந்தபடி யென்னுதல் ; இவ ளோட்டைக்கலவியால்வந்த சோபையென்னுதல்.(கோலத்தாமரைக் கண்செவ்வாய் ) அழகியதாமரைபோலேயிருக்கிற திருக்கண்களை யும், சிவந்தவதரத்தையுமுடையனாய் ;

( வாட்டமித்யாதி ) கலந்தபோதைச்செவ்வி, விரஹத்திலும் தலைச்சாவிவெட்டபோகிறதில்லைகாணும்?. இத்தலை ஐயவெறுந்தரை யாக்கினபின்பு இரட்டித்தபடி. (என்கருமாணிக்கம்) பிரிந்தபின்பும் மறக்கவொண்ணாதபடி நலிகிற, நீலரத்நம்போலேயிருக்கிற திருநிற த்தையுடையனாய். (க) "நைவதம்ஸாஸ்ஸோகா-நைவதம்ஸாந் நமஸாகாந்" என்று அவனிருக்க, அரைக்ஷணந் தாழ்த்தானென்று இவ்வார்த்தையைச் சொல்லுகிறாளிறே!. (கண்ணன்மாயன்போல்) ஆஸ்சர்யபூதனான க்ருஷ்ணனைப்போலே ; கலந்தபோது காலைக்கை யைப்பிடித்துப் பரிமாறி பவ்யனாயிருந்தபடி.

(க) ஸு-ஸு-ரு-நச-கஉ.

(கோட்டியவில்லித்யாதி) வளைத்தவில்லோடேகூடி மின்னுகின்றுள்ள மேகஸமூஹங்கள். கௌஸ்துபம் திருமேனிக்கு ப்ரகாசமாக மாமாபோலே யிராநின்றதுமின். (காட்டேன்மின்நும்முரு) ம்ருத்யு ஸத்ருசமான வுங்கள்வடிவைக்காட்டாதே கொள்ளுங்கோள். அவ்வடிவைக்கொண்டு அகலவிருந்தவனோடு உங்களோடு வாசியில்லையாயிருந்ததீ! "அதுவென்" என்னில் (என்னுயிர்க்கதுகாலனே) விரஹம் தின்றுபண்டேதற்றற்ற வென்ப்ராணனுக்கு, அது ம்ருத்யுவாகாநின்றது. (குழாங்கள்காள்காட்டேல் மின்நும்முரு) என்றுவைத்து, (அது) என்கிறது. காணமாட்டாமை, முகத்தைமாறவைத்துச் சொல்லுகிறாள். (எ)

---

## எட்டாம்பாட்டு.

உயிர்க்கது காலனென்றும்மை நாளிரந்தேற்கு * நீர் குயிற்பைதல்காள் கண்ணன்நாமமே குழறிக்கொன்றீர் * தயிர்ப்பழஞ்சோற்றோடு பாலடிசிலுந்தந்து * சொற்பயிற்றியநல்வள மூட்டினீர் பண்புடையீரே.

ப:—அநந்தரம், அவஸாதகரமானக்ருஷ்ணன் நாமங்களைச்சொல்ல வேண்டாவென்னச் செய்தேசொல்லி முடித்திகோளே! என்றுதான் வளர்த்த சிலகுயில்களைச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) நான்-நான், இவ்வவஸ்த்தையில், அது-அது, உயிர்க்கு - ப்ராணனுக்கு, காலனென்று - ம்ருத்யுரூபங்கிடிகோளென்றுசொல்லி, உம்மை - உங்களைக்குறித்து, இரந்தேற்கு - ப்ரார்த்தித்த வெனக்கு, குயிற்பைதல்காள் - குயிற்பிள்ளைகாள், நீர் - நீங்கள், உங்கள்-பிள்ளைத்தனத்தாலே, கண்ணன்நாமமே - பவ்யனான க்ருஷ்ணனுடைய திருநாமங்களை, குழறி - அக்ஷரமதுரமாகச்சொல்லி, கொன்றீர் - முடித்துவிட்டிகோளிறே, உங்கள் பால்யத்துக்கீடாக, தயிர்ப்பழஞ்சோற்றொடு இளம்போதைக்குத் தயிரையுடைத்தான பழஞ்சோற்றோடே, பாலடிசிலும் - பிற்காலுக்குப்பாலுஞ்சோறுமாக, தந்து-உங்களுக்குத்தந்து, சொல் - அவன்திருநாமங்களாகிறசொற்களை, பயிற்றிய-அப்யஸிப்பித்தவதுக்கு ப்ரத்யுபகாரமாக, நல்வளம் - நல்லஸம்பத்தை, ஊட்டினீர் - அநுபவிப்பித்தீர், பண்பு-நல்லசீர்மையை, உடையீர்-உடையீராயிருந்தீர். (அ)

ஆறு;—(உயிர்க்கது) "கண்ணனுடைய திருநாமங்களைச்சொல்லில் நான்முடிவன், அவற்றைச்சொல்லாதொழியவேணும்" என்று உங்களைநானிரக்க, பின்னையுமவற்றையேசொல்லிக்கொன்றீர்கோள்; நானுங்களைவளர்த்த ப்ரயோஜநமழகிதாகப் பெற்றேனென்று, தன் குயில்களை யின்னாதாகிறாள். (அ)

ஈடு; அவ,—சில குயில்களைக்குறித்து. திருநாமஞ்சொல்லவேண்டாவென்று நானிரக்க, அத்தையே சொல்லி நலிந்திகோள், உங்களை வளர்த்த ப்ரயோஜநம்பெற்றேன் என்கிறாள்.

(உயிர்க்கது) தோற்புரையேபோமதன்று; அதுவென்கிறாள், தன்வாயாலே சொல்லமாட்டாமையாலே. (காலனென்று) நலிகையன்றிக்கே முடிக்குமென்று. (உம்மை) இரந்து என்கார்யஞ்செய்யுமுங்களை. (நான்) உங்களுக்கு மறுக்கவொண்ணாதபடி ஜநநியான நான், (இரந்தேற்கு) உங்களைநியமித்தேனோ, என்செல்லாமையாலே சரணம் புகுந்தவெனக்கு.

(நீர்) நியாம்யரானநீங்கள். சரணாகதகாதகரானிகோள். (குயிற்பைதல்காள்) உங்கள்பால்யம் என்ப்ராணனோடே போய்த்திறே!; பருவம்நிரம்பாமையிலும் தாய்வாசியறியவேண்டாவோ!, "நாங்கள் செய்ததென்" என்ன (கண்ணன்நாமமே குழறிக்கொன்றீர்) தீராமாற்றால், நெஞ்சைப்புண்படுத்திவைக்கும் க்ருஷ்ணன் திருநாமங்களையே அவ்யக்தமாகச் சொல்லிமுடித்திகோள். * ம்ருதஸஞ்ஜீவநமான ராமகுணங்களையுமொருக்கால் சொன்னாலாகாதோ!.

(தயிர்த்யாதி) தயிரும் பழஞ்சோறும், பாலும் வெஞ்சோறும் அவ்வவகாலங்களிலேதந்து திருநாமங்களைக்கற்பித்த வதுக்கு ப்ரத்யுபகாரம்பண்ணினிகோள்!, (நல்வளமூட்டினீர்) நல்லஸம்பத்தை புஜிப்பித்திகோள்!. நான் காலந்தோறு முங்களுடைய ரக்ஷணம் பண்ணிப்போந்தேன், நீங்களும் இவ்விடங்களிலேவந்து நலிந்துபோந்திகோள், இக்குயில்களுக்கு அந்நதோஷம் பலித்துவிட்டதோ! (பண்புடையீரே) ப்ராப்தியும் பவ்யதையுங்கிடக்க, சாலநீர்மையுடையீராயிருந்திகோள்!. ரக்ஷகவிஷயத்தில் நிர்த்தயராயிருந்திகோள்!.

# ஒன்பதாம்பாட்டு,

பண்புடைவண்டோடு தும்பிகாள் பண்மிழற்றேன்மின் * புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும் நும்மின்குரல்* தண்பெருநீர்த்தடந்தாமரைமலர்ந்தாலொக்குங் கண்பெருங்கண்ணன் * நம்மாவியுண்டெழ நண்ணினான்.

ப:—அநந்தரம், நிரதிசயபோக்யமானகண்ணழகையுடைய க்ருஷ்ணன் எங்களுடைய ப்ராணாபஹாரம் பண்ணிப்போனான். புண்ணிலே வேலைக்கொடு குத்தினாற்போலே பாடாதே கொள்ளுங்கோள் என்று, சிலவண்டுகளையும் தும்பிகளையுங்குறித்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) பண்புடை - பாட்டின்நீர்மையை யுடைத்தான, வண்டொடுதும்பிகாள் - வண்டுகளோடுகூடின தும்பிகாள், நும்மின்குரல் - உங்களுடைய இனியகுரலானது, புண்புரை - புண்ணின்புரையிலே, வேல்கொடு - வேல்கொண்டு, குத்தாலொக்கும்-குத்தினாற்போலேயிராநின்றது, நீங்கள், பண்மிழற்றேன்மின் - பண்ணை மதுரமாக ஶப்தியாதே கொள்ளுங்கோள், தண்-குளிர்ந்து, பெரு - நிரம்பின, நீர்-நீரையுடைய தடம் - தடாகம், தாமரைமலர்ந்தாலொக்கும்-தாமரைமலர்ந்தாப்போலே, பெருங்கண் - கண்ணின்பெருமையையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனானவன். நம் - நம்முடைய, ஆவி - ப்ராணனை, உண்டு-அபஹரித்து எழநண்ணினான் - அகலப்போனான்.

(பண்புரை) என்று பாடமானபோது, ஸ்வாபாவிகமான ஶப்தத்தையுடையவை யென்றுமாம். (க)

ஆறு:—(பண்புடை) பண்புடைவண்டொடுதும்பிகாள், அவனைப்பிரிந்த வ்யஸநத்தின்மேலே அவன் திருநாமங்களைப்பாடுகிற விதுவொன்றும் பொறுக்கலாயிருந்ததில்லை, பண்டேமிழற்றேல்மின் என்ன, "அவன்திருநாமங்களைப் பாடுகை உனக்கத்யந்தப்ரியமல்லவோ" என்று அவைசொல்ல; அவன் தன்னழகைக்காட்டி யென்னைமாய்த்துப் போனான்காண் என்கிறாள். (கூ)

ஈடு-அவ:—மதுபாநமத்தமாய்ப்பாடுகிறன சிலவண்டுகளையும் தும்பிகளையுங்குறித்து, உங்கள் த்வநி யெனக்கு துஸ்ஸஹமாயிருந்தது, நீங்கள்பாடாதேகொள்ளுங்கோள், என்கிறாள்.

(பண்புடைவண்டோடு தும்பிகாள் பண்மிழற் றேன்மின்) நீர்மையுடைய வண்டோடேகூடினதும்பிகாள், பண்மிழற்றேன்மின்

பண்மிக்க ஆளத்திவையாதே கொள்ளுங்கோள். (பண்புரை) என்று பாடமானபோது, பண்பானவுரையாய்; மூரலுகையைச் சொல்லுகிறது; பண்ணை மூரலாநின்றவென்றுமாம்.

(புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும் நும்மின்குரல்) முன்பே மற்றையவற்றின் த்வநியாலே புண்பட்டிறேயிருக்கிறது, அதிலே வேலைக்கொடுகுத்தினாப்போலேயிராநின்றது உங்கள் த்வநி.

(தண்பெருநீரித்யாதி) குளிர்ந்த பெரியநீரையுடைய பொய்கையிலே தாமரைப்பூவலர்ந்தாப்போலேயாய் அவ்வளவன்றிக்கே பெரிய கண்ணையுடையக்ருஷ்ணன். (நம்மீத்யாதி) அவ்வடிவழகைக்காட்டி யென்னைமுடித்துப் பிரிந்துபோனான். (௯)

## பத்தாம் பாட்டு.

ஏழநண்ணி நாமும்நம் வானநாடனோ டொன்றினோம்* பழன நன்னாரைக்குழாங்கள்காள் பயின்றெனினி* இழைநல்ல வாக்கையும் பையவேபுயக்கற்றது * தழைநல்லவின்பந் தலைப்பெய்தெங்குந்தழைக்கவே.

ப:—அநந்தரம், பரமபதநிலயனோடே நாங்களொன்றுபட்டுவிட்டோம்; இனியுங்கள் திரட்சிக்கு ப்ரயோஜநமென்? என்று, சிலநாரைத்திரளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

(இ.-ள்.) அவன் நினைவுக்கீடாக, நாமும் - நாமும், ஏழநண்ணி - போக்கிலே யொருப்பட்டு, நம் வானநாடனோடு - நமக்கு ப்ராப்யமான பரமபதத்திலே யிருக்கிறவனோடே, ஒன்றினோம் - ஏகஹ்ருதராய்விட்டோம், பழனம் - நீர்நிலத்திலே, நல் - தர்ஶநீயமாய்க்கொண்டு, நாரைக்குழாங்கள்காள் - திரண்டிருக்கிற நாரைக்குழாங்கள்காள், இனி பயின்றென் - இனிச் செறிந்து விசாரிக்கிறதுக் கென்னப்ரயோஜநமுண்டு, இழைநல்ல - அவனுக்காபரணம்போலே ஸ்ப்ருஹணீயமான, ஆக்கையும் - சரீரமும், பையவே - க்ரமத்திலே, புயக்கற்றது - கைவிட அய்யவியாநின்றது, இனி என் துக்கங்காணுமையாலே, எங்கும் - எல்லாதேசமும், தழை - விஸ்தீர்ணமாய், நல்லவின்பம் - நன்றான ஸுகத்தை, தலைப்பெய்து - பெற்று, தழைக்க - ஸம்ருத்தமாகக்கடவது.

"புயக்குதல் - புயத்தல், - வாங்குதலாய், விடுகையைச்சொன்னபடி.

ஆறு:—(ஏழநண்ணி) அவன்கருத்தின்படியே நானும்முடிந்தேன், என்னுடையவாக்கையுந் தளர்ந்தது, பழனநன்னாரைக் குழாங்கள்காள் பயின்றென்னினி, என்றுசொல்லி, பின்னையும், "நான் பட்டபாடொருவரும் படாதொழிந்திடுக" என்று சொல்லிக்கொண்டு முடிந்தாளென்கிற திப்பாட்டு. (௧0)

ஈடு-அவ;—திரளவிருக்கிற நாரைக்குழாங்கள் தன்னைமுடிக்க மந்த்ரிக்கிறனவாகக்கொண்டு, நான் முடிந்தேன், இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென் என்கிறாள்.

(ஏழநண்ணி) போக்கிலே யொருப்பட்டு (நாமும்நம்வானநாடனோ டொன்றினோம்) கடலைக் குளப்படியிலே மடுத்தாப்போலே தன்னை யிலக்காக்கி இத்தலையை வெறுந்தறையாக்கித் தன்னைக் கொண்டகன்றான். நாமும்,* அயர்வறுமமரர்க ளதிபதியோடேயொருமிடறானோம். நித்யஸூரிகளு மவனுமாகவிருந்து நம்மைமுடிக்க வெண்ணினபடியே, நாமுமிசைந்தோம். அவன் முடிக்க நினைக்க, நாம் ஜீவிக்கவெண்ணி, இடக்கைப்புரி முறுக்குகைதவிர்ந்து, நாமும் முடிகையிலேதுணிந்தோம். நித்யஸூரிகளும் சந்தாநுவர்த்திகளாகையாலே, அவன்கருத்தே கருத்தாயிருப்பர்களிறே.

(பழனநன்னாரைக்குழாங்கள்காள்) நீர்நிலங்களிலே வர்த்திப்பனவாய், தொடங்கினகாரியம் முடிக்கவல்ல ஸாமர்த்யத்தையுடைத்தான நாரைக்குழாங்கள்காள். (பயின்றென்னினி) இனி நீங்கள் திரண்டு ப்ரயோஜநமென். நானவன்கருத்தைப் பின்செல்லாதவன்றன்றோ உங்கள் மந்த்ரத்துக்கு ப்ரயோஜநமுள்ளது; முதலிகள் திரள்திரளாகவிருந்து பெருமாளையும் பிராட்டியையும் சேர்க்கைக்கு விரகு பார்த்தாப்போலே, இவை திரள்திரளாகவிருந்து தன்னையுமவனையும் பிரிக்கைக்கு விரகுபார்க்கிறனவென்றிருக்கிறாள்.

"அவன் வேண்டுவாரைச்சேர்க்கையும், வேண்டாதாரை முடிக்கையும், திர்யக்குக்களுக்குப்பணி" என்றிருக்குமிறே ராமாவதாரத்தில் வாஸனையாலே. "வானநாடன் - நாரைக்குழாங்கள்காள்" என்கையாலே, உபயவிபூதியும் வேணுமோ ஓரபலையை முடிக்கைக்கு. (இழைநல்லவாக்கையும்) ஆபரணத்தாலே அழகிதானசரீரமென்னுதல், ஆபரணம் பூண்டாப்போலேயிருக்கிற விலக்ஷணசரீரமென்னுதல், (பையவே புயக்கற்றது) க்ரமேண பசையற்றதென்னு

தல், க்ரமத்திலே போகத்தொடங்கிற்றென்னுதல்; புயத்தலென்று-போதலாதல், புயக்கென்று - ஆகர்ஷகமாதல்.

( தழைநல்லவித்யாதி ) ஈஸ்வரவிபூதி ஸம்ருத்தமாகவேணு மென்கிறாள். "தாந்தாம் முடியநிவேப்பார் 'நாடுவாழ்க' என்பாரைப்போலே சொல்லுகிறாள்" என்று ஆளவந்தார் நிர்வாஹம் - "நான்பட்டபாடு நாடுபடாதொழியவேணும்" என்று எம்பெருமானார்; "நான்முடிய என்னார்த்திகண்டு நோவுபடாதே, லோகமடங்கப் பிழைக்குமாகாதே" என்று பட்டர். (க0)

## பதினொன்றாம் பாட்டு.

இன்பந்தலைப்பெய்தெங்குந் தழைத்தபல்லூழிக்கு * தன்புகழேத்தத்தனக்கருள் செய்தமாயனை * தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள்ளிவ்வை * ஒன்பதோ டொன்றுக்கு மூவுலகுமுருகுமே.

ப:— அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக, இதுகேட்ட ஸர்வலோகத்தினுடையவும் மநோவிகாரத்தை யருளிச்செய்கிறார்.

(இ - ள்.) இன்பந்தலைப்பெய்து-இன்பத்தை உண்டாக்கா நின்று கொண்டு, எங்கும் தழைத்த - எங்கும் வ்யாப்தமான, தன்புகழ்-தன்னுடைய குணப்ரதையை, பல்லூழிக்கு-காலதத்த்வமுள்ளதனையும், ஏத்த-ஏத்தும்படியாக, தனக்கு - தமக்கு, அருள்செய்த - நிரவதிக க்ருபை பண்ணின, மாயனை - ஆஸ்சர்யபூதனை; தென் - கட்டளைப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்த; ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, இவை ஒன்பதோடொன்றுக்கு - கீழொன்பது பாட்டில் க்லேஸமொருகூறும் பத்தாம்பாட்டில் க்லேஸமொருகூறுமான இவற்றுக்கு, மூவுலகும் - த்ரைலோக்யமும், உருகும் - ப்ரேமத்தாலே த்ரவியாநிற்கும்.

இது கலித்துறை. (கக)

ஆறு:— ( இன்பம் ) பின்னையும் (க) "ஷிரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்ய"-ஸிரோணஸம்ஜ்ஞாம்ப்ரதிலப்ய" என்னும்படியாலே தாமுளராய் மேலருளிச்செய்கிறார்.

---

(க) ரா-ஸு-கூஉ-அ-

அநுபவிதாக்களுக்கு நிரவதிக ஸுகாவஹமாய் லோகமெல்லாம் நிறைந்த தன்புகழை, ஸர்வகாலமு மேதேனும் தூர்த்தஸம்ஸாரிகளினுமேத்தும்படி தனக்கருள்செய்தமாயனைத் தென்குருகூர்ச்சடகோபன்சொல்லாயிரத்துள் இத்திருவாய் மொழியில் சொன்னவார்த்தியை அநுஸந்திப்பார் என்படுவார்களோ வென்கிறார். (௧௧)

ஈடு; அவ;—நிகமத்தில் இத்திருவாய்மொழியிற் பாசுரம் ஹ்ருதயத்திலேபடில், ஆரேனுமாகிலும் தரியாரென்கிறார்.

( இன்பந்தலைப்பெய் தேங்குந்தழைத்த ) எங்குந்தழைத்த வின்பந்தலைப்பெய்து-லோகமெல்லாம் வெள்ளமிட்ட நிரதிசயப்ரீதியையுடையராய்க்கொண்டு. ( பல்லூழிக்குத் தன்புகழேத்த ) காலமுள்ளதனையும் குணங்களை யேத்தும்படி. (தனக்கருள்செய்த) ஸம்ஸாரிகளிலே அந்யதமரானவர்க்கு, * மயர்வறமதிநலமருளிச்செய்தபடி. (மாயனை) ஸம்ஸாரிகள்நடுவே யென்னை யொருவனையும் விஷேஷகடாக்ஷம்பண்ணின வாஸ்சர்யபூதனை.

அங்ஙனன்றிக்கே, (இன்பந்தலைப்பெய்தேங்குந்தழைத்த - தன் புகழேத்த - பல்லூழிக்கு - தனக்கருள்செய்தமாயனை ) அநுபவிப்பார்க்கு நிரதிஸயாநந்தத்தை விளைப்பதாய் எங்குமொக்கப்பரம்பின தன்கல்யாணகுணங்களை.;காலதத்வமுள்ளதனையும் நானநுபவிக்கும்படி பண்ணினுனென்னுமாம்.

இவர் “ குணஜ்ஞாநத்தாலேதரித்தார் ” என்கிறது, “தன்புகழேத்தத் தனக்கருள்செய்த ” என்ற வித்தைக்கொண்டிறே. நித்யஸூரிகளநுபவத்தையும், தமக்கவர்களோடொத்த ப்ராப்தியையுமநுஸந்தித்து நோவுபட்டார் ; என்றுமொக்க விழுந்திருக்கிற ஸம்ஸாரிகள் படியைப்பார்த்தவாறே, இந்நோவுதானே பேறாய்த்தோற்றிற்று. “ சடகோபன் சொல் ” என்று பரோக்ஷநிர்த்தேசத்தாலே, (தனக்கருள்செய்த) என்னலாமிறே; (௧) “வால்மீகிர் பகவாந்ருஷி:-வால்மீகிர்ப்பகவாந்ருஷி: ” என்னுமாபோலே.

( ஒன்பதோடொன்றுக்கும் ) “ இமொன்பதுபாட்டிலுமுண்டான வ்யஸநம் ஸுகம்” என்னும்படி வ்யஸநம் மிக்க பத்தாம்பாட்

(௧) ரா-பா-௬-௧-

டையுடையவிவை. ஸ்மாரகபதார்த்தங்களாலே ஜீவநத்தில் நசை யோடே நோவுபட்டவொன்பதுபாட்டோடே, ஜீவநத்தில் நசையற்ற வொருபாட்டுக்கும். (மூவுலகுமுருகுமே) ஆரேனுமாகிலும் தரியார். "என்னுடைய ஆர்த்தநாதத்தாலே நாட்டில் பிறவேண்டாவாகாதே" என்றவர்க்கு, பின்னையும் நாட்டார்க்கு ஸைதில்யமே பலித்துவிட்டது.

[எங்குந்தழைத்த-இன்பந்தலைப்பெய்து - பல்லூழிக்குத்தன் புகழேத்த, - தென்குருகூர்ச்சடகோபன்-தனக்கருள்செய்தமாயனை சொல்லாயிரத்துள் ளிவையொன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகும்.] (கக)

ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

---



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஒன்பதாம்பத்து.

# ஆறாந்திருவாய்மொழி.

## உருகுமால் - ப்ரவேஸங்கள்.

ஆறு;— (உருகுமால்) இப்படி யெம்பெருமானைப் பிரிந்த வ்யஸநத்தாலே முடிந்து பின்னையும் நெடும்போது கூட லப்த ஸம்ஜ்ஞராயிருந்தவாழ்வார்.

ப:—ஆறாந்திருவாய்மொழியில், கீழ் இவர் ஸ்மாரகதர்ஸநத்தாலே அயந்தமவஸந்நரானவளவிலே, ஆஸ்வாஸகரமாம்படி ஈஸ்வரன் தன் குணங்களை ப்ரகாசிப்பிக்க; அவனுடைய வாஸ்சர்யப்ரகாரத்தையும், அநுபஹித பந்தத்தையும், ஒளதார்யஸ்வபாவத்தையும், அதிஸயிதசீலத்தையும், ஆஸ்ரிதபவ்யதையையும். அத்யந்தவ்யாமோஹத்தையும், வ்யாமோஹபர்யவஸாநத்தையும், அபேக்ஷா நிரபேக்ஷமான நித்யாதரத்தையும், அநுபாவ்யஸௌந்தர்யத்தையும் அபிநிவேஸக்ஷைர்யத்தையுமநுஸந்தித்து, இந்தகுணங்களினுடைய வைலக்ஷண்யாநுபவத்தால் பிறந்த ப்ரீத்யதிசயத்தாலே, மிகவும் ஸிதிலராகிறார்.

ஈடு;—"எழுநண்ணிநாமும் நம்வான்நாடனோடொன்றினோம்" என்று தம் ஜீவநத்தில் நசையற்றுச் சொன்னவார்த்தைபிறே கீழ்; இவ்வளவில் வந்து முகங்காட்டி யிவரைப் பெறுதல், இல்லையாகில் இழத்தல் செய்யவேண்டும்படியான தசையாய்த்து.

இவ்வவஸ்த்தையிலே; திருவடிசென்று கிட்டினபோது, முன்பு நெடுநாள்பட்ட வ்யஸநமுறங்கிடக்கச்செய்தே, பெருமாளும் வாராதிருக்க, (க) "ஸீதா ஹ்ருஷ்டதரா ஹா ராவணஸ்ய நிவேஸநே। ஸஞ்ஜாதநாதோ நக்ஷாநுஹோஹாநு ஸவஹீகாசிஸய்ஜ்ஜீ நீ - ஸநாத் வாதஸ தத்ராஹம் ராகவஸ்ய நிவேஸநே। புஞ்ஜாநா மாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ" என்கிறபடியே, பன்னிரண்டாண்டு பெருமாளுந்தானுமொருபடிப்படக் கலந்த கலவிவந்து பிராட்டிக்கு ஸ்ம்ருதிவிஷயமானாப்போலே; * இருத்தும்வியந்தில் தலைதடுமாறாகப் பிறந்த கலவிவந்து ஸ்ம்ருதிவிஷயமாய்த்து.

---

(க) ரா-ஸு-ருடு-தக.

அதுக்கடி, இவரதிகரித்த கைங்கர்யத்தை முடியச்செய்து தலைக்கட்டுகைக்கிடான இவருடைய ஜீவநாத்ருஷ்டமாவது; அன்றிக்கே, இவர் சொல்லக் கேட்கையிலே பாரித்துக்கொண்டிருக்கிற வீஶ்வரனுடைய பாக்யமாவது; பகவதநுபவப்ரீதி யுள்ளடங்காமை வழிந்து புறப்பட்ட விவர்சொல்லுக்கேட்டு பகவத்விஷயத்திலே ருசிபிறக்கவிருக்கிற சேதநருடைய பாக்யமாவது. இப்படி * இருந்தும்வியந்தில் ஸம்ஶ்லேஷம் வாரா ஸ்ம்ருதிவிஷயமாய்த்து. [ஸாஜாஷு - ஸமாத்வாதஸு] பிள்ளாய், "இன்றிங்ஙனே வெறுந்தறையாயிருக்கிறான், எங்கள் மாமனார்மாளிகையிலே பன்னிரண்டாண்டொருபடிப்பட ராமகுணங்களை விளைநீரடைத்துக்கொண்டேன்காண்" என்றருளிறே. இங்கு; * இருத்தும் வியந்துதன்னில் "மூவுலகுந்தன்னெறியா வயிற்றிற்கொண்டு - சிறியேனுடைச்சிந்தையுள்ளே - நின்றொழிந்தான்" என்று புறம்பெங்கும் முறையிலே பரிமாறினவன், இவரொருவரளவிலுமிறே முறைகெடப் பரிமாற்று;

அப்படிப்பட்ட பரிமாற்றந்தான், இப்போதொரு ஸ்ம்ருதிமாத்ரமாயிருக்கையன்றிக்கே, ததாநீந்தநபுத்திபிறந்தது; அப்படியே, மேன்மையுடையவன், அம்மேன்மையுங்கிடக்கச்செய்தே தாழநின்று பரிமாறினகுணத்தையும் வடிவழகையுஞ்சொல்லி, அதுதான் "இப்போதையநுபவமே" என்னும்படியாயிருப்பதொரு புத்திபிறந்து, அவனுடைய சீலகுணாநுஸந்தாநத்தாலே ஶிதிலராகிறார்.

"கடலைத்தரை காண்பாரைப்போலே, * இருத்தும்வியந்தி லநுபவத்தை யிதிலேகொண்டுவந்து சேர்ப்பதேநம்முதலிகள்!" என்று வித்தராயருளிச்செய்வர், அப்ராப்தியுங்கிடக்கச்செய்தே, ஶீலகுணாநுஸந்தாநத்தாலே சிதிலராகிறாராய்த்து. "அபரிதிகர்ப்ப குணாநுஸந்தாநம்" என்றாளவந்தாரருளிச்செய்யும்சந்தை இதுக்கு.

(க) [ஷஹவொ நூவ-பஹவோக்ருப] சக்ரவர்த்தி, "பெருமாளைத் திருவபிஷேகம்பண்ணவேணும்" என்றுகோலி, "நாம் அறுபதினாயிரமாண்டுகூட ஒருதலைமிதிக்க ஒருதலைகிளர இப்படி வருந்தி யடிப்படுத்தின ராஜ்யத்தை இன்று சிறியவன்தலையில்வைத்தால் இதுபொறுக்குமோ" என்றுபார்த்து, "இதுதன்னை நாட்

(க) ரா அயோ-உ-உ௬-

(திருமேனியடிகளுக்கு) ஸ்வரூபரூபகுணவிபூதிகளையொழிய வடிவழகாலே ஸர்வஸ்வாமியென்று தோற்றும்படியிருக்கிறவர்க்கு; வடிவழகாலே ஜகத்தையடையத் தோற்பித் தடிமைகொண்டிருக்கிறவர்க்கு என்றுமாம். (௧) "ஸவஶாஃரூதிவெஷிெ-அவஶாஃப்ரதிபேதிரே" என்கிறபடியே ப்ரதிகூலர்க்குமாகர்ஷகமாயிறே வடிவிருப்பது. (தீவினையேன் விடுதூதாய்) ஸர்வஸாதாரணமான உடம்பையிழந்து உங்கள் காலிலேவிழுவேண்டும்படியான பாபத்தைப்பண்ணின வென்னுடைய தூதக்ருத்யத்திலேயதிகரித்து.

(திருமூழிக்களமென்னும்) ஆர்த்தரக்ஷணத்துக்காகவந்து நிற்கிறவிடமென்று ப்ரஸித்தமானதேசம். (செழுநகர்) பரமபதத்திற்காட்டிலுண்டானவேற்றம், செழுநகர்வாய்வாழ்த்திக்கிற அழகியமூழிக்களென்னுதல்; செழுநகர்வாயடிகளுக்குச் செப்புமின்களென்னுதல்.

(திருமேனியவட்கருளீர்) பரார்த்தமான உடம்பை, ஆசைப்பட்டார்க்குக் கொடுத்தாலாகாதோ?. (௨) "ஹக்ஷாநாஜ்ஹபக்தாநாம்" என்கிறபடியே, இவ்வுடம்பு ஆசைப்பட்டாரதன்றோ? என்றுசொல்லுங்கோள். காமிநிகளுக்கு ஸ்வரூபாதிகளிற்காட்டில் வடிவிலேயிறேயபேக்ஷை. (அருளீர்) ப்ரணயித்வமன்றோ குடிபோய்த்து, க்ருபையும் மறுத்ததோ?. (என்றக்கால்) (௩) "வாவாயஶீஷவோவு-ஹி-வாசாதர்மமவாப்நுஹி" என்று உங்களுக்கொருவார்த்தையன்றோ நேரவேண்டுவது!. (உம்மை) இப்படி உபகாரகரான உங்களை.

(தன்திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே?) உங்கள் வடிவிற்புகரையும்போக்கி நிர்மலமான வாகாஶத்தினின்று மூங்களையோட்டுமோ?. உங்களுக்கு இதுக்குமுன்பில்லாதவற்றையும் உண்டாக்குமதொழிய, பண்டுள்ளவற்றைத்தவிர்த்து உங்களை தண்டிக்குமோ?, அல்பஸாத்ருஶ்யத்தைத்தவிர்த்து, (௪) "ஹாஶேஷாஶீஷவெதி-பரமம்ஸாம்யமுபைதி" என்கிறபடியே ஸர்வதாஸாத்ருஶ்யத்தையுந்தந்து, ஆகாசமாத்ரஸ்த்திதிகளன்றிக்கே பரமாகாஶத்தையுந்தாராரோ?. உங்களுடைய உக்திமாத்ரத்தாலே யென

(௧) பார-ஸபா-　　　(௨) ஜித ஞ-
(௩) ரா-ஸு-௩௯-௩௦-　　　(௪) முண்ட-௩-௧௩-

கடுஅ திருவாய்மொழி, கூ-ப, எ-தி, ரு-பா, தெளிவிசும்பு வ்யாக்யாநம்

க்கு மூன்களுக்கும் ப்ரயோஜநமொத்திருக்க, ஆறியிருக்கக் கடவி கோளோ, (ச)

---

# ஐந்தாம் பாட்டு.

தெளிவிசும்புகடிதோடித் தீவளைத்துமின்னிலகும்* ஒளிமுகில் காள்திருமூழிக்களத்துறையு மொண்சுடர்க்கு* தெளிவிசும்புதிருநா டாத்தீவினையேன்மனத்துறையும் * துளிவார்கட்குழலார்க் கென் தூதுரைத்தல் செப்புமினே. (ரு)

ப:—அநந்தரம், பரமவ்யோமஶப்தவாச்யமான நிரதிசயவிபூதியில் இருக்குமாபோலே என்னெஞ்சிலே யிருக்கிறவனுக்கு என்தூதாய்ச் சென்று வார்த்தைசொல்லக்குறையில்லை யென்று, அம்மேகந்தன்னை யேபார்த்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) தெளிவிசும்பு - நிர்மலமான வாகாசத்திலே, கடிதோடி - நிலத்திலே நடப்பாரைப்போலே என்கார்யத்துக்கு த்வரிக்கிறிகோ ளென்னலாம்படி கடிதாகவோடி, தீவளைத்து - அலாதசக்ரம்போலே மின் இலகும் - அழகிய மின் விளங்காநிற்க, ஒளிமுகில்காள் - அத்தாலே வடிவிலழகு வளர்ந்து தோற்றும்படியான முகில்காள், திருமூழிக் களத்து - திருமூழிக்களத்தில், உறையும் - நித்யவாஸத்தாலே. ஒண்சுடர்க்கு - ஸௌசீல்ய ஸௌலப்யாதி விலக்ஷண குணௌஜ்ஜ்வல்யத்தை யுடையராய், தெளிவிசும்பு-விமலமான திவ்யாகாசத்தை. திருநாடா - நிரதிசயவிபூதியாகவுடையராய்வைத்து, தீவினையேன்மனத்து ஸம்ஶ்லேஷமூகத்தாலே பரிதாபஹேதுவான பாபத்தையுடைய வென்னெஞ்சிலே, உறையும் - மூகந்தோன்றும விராநின்றுகொண்டு. துளி - துளித்து, வார் - ஒழுகுகிற, கள் - மதுவையுடைத்தான, குழலார்க்கு- மயிர்முடியழகை ப்ரகாசிப்பித்துக்கொண்டிருக்கிறவருக்கு, என்தூதுரைத்தல் - * கேசவனுனவிது க்லேஶநாசகனுகைக்கன்றோ என்கிற தூதவாக்யத்தை, செப்புமின் - சொல்லுவகோள்.

திருக்குழல் மதுவாருகிறது - அகவிதாகவைத்த பூவிற் செவ்வியாலே.

(சு)

ஆறு:—(தெளிவிசும்பு) அவனுக்கருளீரென்னவமையுமோ, இன்னுருக்கருளீரென்னவேண்டாவோவென்னில்; யாவனொருத்தி

யுடைய நெஞ்சையுமக்குத் திருநாடாகக்கொண்டு நீருறைகிறீர், அவளுக்கருளீர் என்று சொல்லிகோளென்கிறாள். (இ)

ஈடு; அவ;—"எங்கள் வார்த்தையை அவனங்கீகரிக்குமோ" என்றிருந்தனவாக; பரமபதத்திற்பண்ணின வாதரத்தை யென் பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியாதொழியான், ஆனபின்பு என க்காக வொருவார்த்தைவிண்ணப்பஞ்செய்யவேணு மென்கிறாள்.

(தெளிவிசும்புகடிதோடி) நிர்மலமாய் நிராலம்பநமானவாகா சத்திலே, பூமியிலே ஸஞ்சரித்தாப்போலே கடுநடையிலே ஸஞ்சரித் து. இவற்றின் த்வரையெல்லாம் தன்கார்யத்துக் குடலென்றிருக் கிறாள். (தீவளைத்துமின்னிலகும்) கொள்ளிவட்டம்போலே மின் விளங்கா நிற்கிற. தன்வடிவி விருட்சிக்குக் கைவிளக்குக்கொண்டு திரிவாரைப் போலேயாய்த்து மின்னிக்கொண்டு ஸஞ்சரிக்கிறபடி. (ஒளிமுகில்காள்) பரபாகத்தாலே அழகிதான வடிவையுடைய முகில்காள்.

(திருமூழிக்களத் துறையுமொண்சுடர்க்கு) திருமூழிக்களத் திலே நித்யவாஸம்பண்ணுகையாலேபுகர்மிக்கிருக்கிறவர்க்கு; அவன் வடிவுக்குப் போலியாயிறே உங்கள்வடிவிருப்பது. (தெளிவிசும்பித் யாதி) பரமபதத்திற்பண்ணும் வ்யாமோஹத்தை யென்னெஞ்சிலே பண்ணி வர்த்தியாநின்றான். (தீவினையேன்) நெஞ்சிலே ப்ரகாசியா நிற்க, காணவொண்ணாதபடி பாபத்தைப் பண்ணினேன்.

இதுக்கு, சிற்றாள் கொண்டான், "கொம்பது பருத்தியாக அங்காடிபாரித்து, தனக்குப் பரமபதங்கலவிருக்கையாயிருக்க, அத் தைக் காற்கடைக்கொண்டு ஸம்ஸாரிகளைப்போலேயிருக்களென்னெஞ் சிலே ப்ரகாசியாநின்றான்" என்று. இதுதான் இத்திருவாய்மொ ழிக்குச் சொன்ன வாக்யார்த்தத்தோடு சேராது; ஓரோரவஸரங்க ளிலே சொல்லிப்போம் வார்த்தையிறே.

(துளிவார்கள்குழலார்க்கு) துளியொழுகும் மதுவையுடைத் தான திருக்குழலையுடையவர்க்கு. வல்லார் பூமுடித்தால் பூத்தோற் றக்கடவதன்றிக்கே மதுவொழுகக்காணு மத்தனையிறே. (என்தூது ரைத்தல் செப்புமினே) தலையிற் பூச்சருகாயிருக்கிற வென் தூத வாக்யத்தை யவர்க்குச் சொல்லுங்கோள், அபிநிவிஷ்டராய்த் தா

மே வருவாராகச்சொல்லிவைத்து, இப்போது தூதுவிட விருக்கிற படியை யறிவியுங்கோள். (ரு)

---

## ஆறும்பாட்டு.

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள்* போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும்* மாதரைத் தம்மார்பகத்தேவைத்தார்க்கென்வாய்மாற்றம் * தூதுரைத்தல்செப்புதிரேல்சுடர்வளையுங்கலையுமே. (சு)

ப:—அநந்தரம், நித்யாநபாயிநியான பிராட்டியைத்திருமார்விலே யுடையவர்க்கு, உங்கள் வார்த்தை யீடேறும்படி யச்சேர்த்தியிலே சொல்லுங்கோள் என்று, சிலவண்டுகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) தூமொழிவாய் - கந்தலற்றபேச்சில் வாய்ப்பையுடைய, வண்டினங்காள் - வண்டினங்காள், போதிரைத்து-புஷ்பவிகாஸதசையில் ஹர்ஷத்தாலேகோலாஹலம் பண்ணிக்கொண்டு, மதுநுகரும்-உங்களுக்குமதுபாநம் பண்ணலாம்படியான, பொழில் - பொழிலையுடைத்தான, மூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - வர்த்திப்பாராய், மாதரை * காரீணுமுத்தமையானலக்ஷ்மியை, தம்மார்பகத்தே வைத்தார்க்கு - அவளும் "அகலகில்லேன்" என்னும்படி போக்யமான தன்திருமார்விலே நித்யவாஸம்பண்ணும்படி வைத்தவர்க்கு, என்வாய் மாற்றம் - என்வாக்கின்பாசுரமான, தூதுரைத்தல் - தூதவாக்யத்தை, செப்புதிரேல் - சொல்லப்பார்த்திகோளாகில், சுடர் - உஜ்வலமான, வளையும் - வளையையும், கலையும் - வஸ்த்ரத்தையும், தூதுரைத்தல் - தூதுக்குப்பாசுரமாக, செப்புமின்கள் - சொல்லுங்கோள். (சு)

ஆறு.—(தூதுரைத்தல்) தூமொழிவாய்வண்டினங்காள், என்னுடையசுடர்வளையும் கலையுமிழந்தேனென்றுசொல்லவேணும்; சொல்லுமிடத்தில், அவனுங்கள்வார்த்தையை அநாதரியாமே, பிராட்டி ஸந்நிதியிலேவைத்துச் சொல்லவேணுமென்கிறாள். (சு)

ஈடு; அவ;—சிலவண்டுகளைக்குறித்து, உங்கள்வார்த்தை விலைச் செல்லும்படி பிராட்டி ஸந்நிதியிலே சொல்லுங்கோள் என் தூத வாக்யத்தையென்கிறாள்.

(தூதுரைத்தல் செப்புமின்கள்) என்று தவாக்யத்தை யறிவிக்கவமையும், கொண்டுவரவேண்டா. (தூமொழிவாய் வண்டினங்காள்) இனியபேச்சையுடையவண்டுகாள். அவனநாதரிக்கிலும் உங்கள் பேச்சினிமையாலே வரவேண்டும்படியிறே பேச்சிருப்பது. பெருமாளு மிளையபெருமாளும் கையும் வில்லுமாய் வருகிறபடியைக் கண்டு, "இவர்கள்வாலிவரவிட வருகிறார்களோ" என்றஞ்சி மஹாராஜர் நாலுமூன்றுயோஜந மவ்வருகேயோட, மீண்டுவந்து (௧) "வனகஂஉ-ஈஃவஂ ஸூவஂவ நள - ஏகம்துஃகம் ஸுகஞ்சநௌ" என்று விஜாதியமான விரண்டுதலையும் பொருந்தும்படியாக (௨) "சுமவஸஂஸூாரவஸஂவஃ-அதஸம்ஸ்காரஸம்பந்ந:" என்கிறபடியே வார்த்தைசொன்னனிறே.

(போதிரைத்துமதுநுகரும்பொழில்) பூக்களிலே இரைத்துக்கொண்டு மதுபாநம்பண்ணும்பொழிலென்னுதல்; போதிலே-காலத்திலேயென்னுதல், உங்களுக்கு மீட்சியிலேயாகவும்வேண்டா, * ததிமுகாதிகள் காப்பாருமில்லை, முன்பு மதுபாநம்பண்ணுகிறவர்களோடே மதுபாநம்பண்ணவமையும். (மாதரைத்தம்மார்பகத்தேவைத்தார்க்கு) நீங்கள் சொல்லுமத்தனையேவேண்டுவது. உங்கள்வார்த்தைகேட்டிருக்கவும், கேட்டுக்கொண்டாடுகைக்கும் புருஷகாரமுண்டென்கை.

(என்வாய்மாற்றமித்யாதி) என்பாசுரமான தூதவாக்யத்தைச் சொல்லப்பார்த்திகோளாகில், என்னுடைய வழுகியவளையும் கலையும் மிதிலமானபடியைச் சொல்லுங்கோள். செப்புதிகோளாகில், அதுதானே யெனக்குச்சுடர்வளையும் கலையுமென்னுதல். அறிவிக்குமதே குறை, அவர்வரவுதப்பாது. (௬)

---

## ஏழாம்பாட்டு.

சுடர்வளையுங்கலையுங் கொண்டருவினையேன் தோள்துறந்த * படர்புகழான்திருமூழிக்களத்துறையும்பங்கயக்கண் * சுடர்பவளவாயனைக்கண்டொருநாளோர்தூய்மாற்றம் * படர்பொழில்வாய்க்குருகினங்காளெனக்கொன்று பணியீரே. (௭)

---

(௧) ரா கிஷ்-டு-௬௮- (௨) ரா-யு-௬௯-௯௮-

ப:—அநந்தரம், அத்யுஜ்ஜ்வலமான அவயவசோபையை யுடைய வரைக்கண்டு எனக்கொருவார்த்தை சொல்லுங்கோளென்று,சிலகுருகுகளை யபேக்ஷிக்கிருள்.

(இ - ள்.) படர் - பரந்த, பொழில்வாய் - பொழிலிடத்தேவர்த்திக்கிற, குருகினங்காள் - குருகினங்காள், சுடர் - ஒளியையுடைத்தான, வளையும் - வளையையும், கலையும் - கலையையும், கொண்டு - கைக்கொண்டு, அருவினையேன் - கடக்கவரியபாபத்தையுடையேனுடைய வென்னுடைய, தோள்துறந்த-தோளிலே யதிவ்யாமுக்தனுய்ச் சேர்ந்தவன் அத்தை யநாதரித்து, அதுதானே, படர் - லோகவ்யாப்தமான, புகழான்-புகழாகவிருக்குமவனுய், திருமூழிக்களத்துறையும் -அத்யாஸக்தியாலே ஆர்த்தியை அதிசயிக்கும்படி திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுமவனுய், பங்கயக்கண் - கலந்தபோதோடு பிரிந்தபோதோடு வாசியற செவ்வியழியாதபடி பங்கயம்போன்ற திருக்கண்களையும், சுடர் - ஒளியையுடைய, பவளம் - பவளம்போன்ற, வாயனை - திருவதரத்தையுமுடையவனை, கண்டு - கண்டு, எனக்கு-ஆர்த்திவடிவிலே தோன்றும்படியான வெனக்காக, ஒருநாள்-நித்யாக்நி ஹோத்ரம்போலே பலநாள் வேண்டாதபடி ஒருநாள், ஓர் - ஆர்த்தரக்ஷணார்த்த மாகையாலே அத்விதீயமாய், தூய்மாற்றம் - தெளிவாலே ஶ்லாக்யமான வார்த்தையை ஒன்று - பரப்பற்று ஒன்ருயிருக்கும்படி, பணியீரே - பணிக்கவேணும், ; பணியுங்கோளென்று கௌரவ்யதை தோன்றச் சொல்லுகிருள். (எ)

ஆறு:— (சுடர்வளையும்) படர்பொழில்வாய்க் குருகினங்காள், உன்னழகாலே யவளைவஶீகரித்து அவளோடேகலந்து பின்னை யவளைத்துறந்ததுவே புகழாகக்கொண்டிருக்கிற விருப்பு உனக்குப் போருமோ வென்றுசொல்லிகோளென்கிருள். (எ)

ஈடு; அவ;—சிலகுருகினங்களைக்குறித்து, சிலரோடே கலந்து அவர்களைத்துறந்து அதுவே புகழாக்கிருக்கைபோருமோ வென்று அவர்க்கறிவியுங்கோளென்கிருள்.

( சுடர்வளையுங்கலையுமித்யாதி) இத்தலையில் தனக்கு ப்ரயோஜநமான வம்ஶத்தைக்கொண்டு என்னைப் பொகட்டுப்போனுன்; தனக்கு தாரகமானவற்றைக்கொண்டு அல்லாதவற்றைப் பொகட்டுப்போனுன் ; கைக்கடங்கினத்தையுங்கொண்டு மடிச்சரக்கையுங் கொ

ண்டு போனான்; ( அருவினையேன் ) ஆதரித்துவந்து கலந்தவன், பொகட்டுப்போம்படியான பாபத்தைப்பண்ணினேன். ( தோள்துறந்த ) அந்த வ்யாமோஹமெல்லாங்கொண்டு தோளுக் கவ்வருகு போகமாட்டிற்றிலன்போலேகாணு மவன்றான்.

( படர்புகழான் ) "தன்னையல்லது செல்லாதாரை இங்ஙன் விடவல்லாரில்லை" என்று இதுவே புகழாகக் கொடியும் காளமுமெடுத்துப் புகழ்வித்துக் கொண்டிருக்கிறானாய்த்து. ( திருமூழிக்களத்துறையும் ) தூரஸ்த்தனென்றாறியிருக்கவொண்ணாதபடி திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவனை. ( பங்கயக்கண்சுடர்பவளவாயனை ) பொகட்டுப் போனானென்று பொகட்டிருக்கவொண்ணாத அவயவசோபையையுடையவனை; என்னை யிப்பாடுபடுத்துகையாலே புதுக்கணித்த அவயவசோபையை யுடையவனை யென்றுமாம். (கண்டு) அந்நோக்கையும் முறுவலையும் காண்கையாலே, உங்களுக்கு என்னிற்காட்டில் பேறு முற்பட்டதேயிருக்கிறது.

(ஒருநாள்) ஒருநாளேயமையும், பிற்றைநாள் சொல்லவேண்டுவதில்லை. இரண்டாநாள் சொல்லுமது பழியென்றிருக்குமவளிறே. (ஓர்தூய்மாற்றம்) அத்விதீயமான நல்லவார்த்தை; முடிகிறாளைப் பலே யுஜ்ஜீவிக்கச் சொல்லுகிற வார்த்தையிறே. (படர்பொழில்வாய் குருகினங்காள்) பரந்தபொழிலிடத்தே வர்த்திக்கிற குருகினங்காள். நான் * உபவாஸ க்ருஶையாயிருக்க, நீங்கள் ஜீவித்துக் களித்திருக்கை போருமோ; நான் முடிந்தால் உங்களுக் கிந்தச்சோலைப் பரப்பெல்லாம் நோக்கித்தருவாரார்.

(எனக்கு) என்வடிவிருக்கிறபடி கண்டீகோளிறே. (ஒன்றுபணியீரே) இரண்டாம்வார்த்தை சொல்லவேண்டா. ( பணியீரே ) தான் ஜநககுலத்திலேபிறக்கவுமாம்; எதிர்த்தலை திர்யக்குக்களாகவுமாம், பகவத்விஷயத்தில் கடகரைச் சொல்லும்படியிதேயிது. (எ)

## எட்டாம்பாட்டு.

எனக்கொன்றுபணியீர்களிரும்பொழில்வாயிரைதேர்ந்து* மனக்கின்பம்படமேவும் வண்டினங்காள்தும்பிகாள்* கனக்கொள் திண்மதிள்புடைசூழ்திருமூழிக்களத்துறையும் * புனக்கொள்காயாமேனிப்பூந்துழாய்முடியார்க்கே. (அ)

ப:—அநந்தரம், வடிவழகையு மொப்பனையையு முடையரா யிருக்கிறவர்க்கு எனக்கொருவார்த்தை சொல்லவேணுமென்று சிலவண்டுகளையும் தும்பிகளையும் பார்த்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) இரு - பெரிய, பொழில்வாய் - பொழிலிடத்தே, இரைதேர்ந்து - போக்யமான மதுவைத் தேடாநின்றுகொண்டு, மனக்கு - மாநஸஸுக்கு, இன்பம்பட - இனிமையுண்டாம்படி, மேவும்-ஸம்ஶ்லேஷித்து வர்த்திக்கிற, வண்டினங்காள் தும்பிகாள்-வண்டினங்காள் தும்பிகாள், கனக்கொள் - கனத்தையுடைத்தாய், திண் - சிக்கென, மதிள்-மதிளாலே புடை - சுற்றும், சூழ் - சூழப்பட்ட, திருமூழிக்களத்து-திருமூழிக்களத்திலே, உறையும்-நித்யவாஸம்பண்ணுமவராய், புனக்கொள்-தன்னிலத்தில் நிலையையுடைத்தான, காயாமேனி-காயாம்பூவின் நிறத்தையுடையராய், பூந்துழாய்முடியார்க்கு - தர்ஶநீயமான திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையவர்க்கு, எனக்கு - எனக்காக, ஒன்று - ஒருவார்த்தை, பணியீர் - சொல்லவேணும். (அ)

ஆறு ;—(எனக்கொன்று) வண்டினங்காள் தும்பிகாள், உன்னழகைக்காணப்பெறாதே அவளிழந்துபோ மித்தனையோ வென்று சொல்லிகோளென்கிறாள். (அ)

ஈடு; அவ;—சிலவண்டுகளையும் தும்பிகளையும் குறித்து, அங்குத்தைக்குபயப்படவேண்டாதபடி ஸுரக்ஷிதமான தேசத்திலேயிருக்கப்பெற்றீரும், இனி யென்னார்த்தியை யறிவியுங்கோளென்கிறாள்.

(எனக்கொன்று பணியீர்கள்) நீங்க ளொருவார்த்தை சொல்லாவிடில் முடியும் தசையாயன்றோ என்தசையிருக்கிறது. (இரும்பொழில்வாயிரைதேர்ந்து) பரந்தசோலை யிடமெங்கும்புக் கிரைதேடி. (மனக்கின்பம்படமேவும்) மநஸ்ஸிலே இனிமை பிறக்கும்படியன்றோ நீங்கள் கலக்கிறபடி, விரஹத்தால் வரும் க்லேசம் பவியாதபடியாகக் கலவாநின்றதாய்த்து - பிரிவிலும் வற்றாத ஆநந்தமுண்டாம்படி கலவாநின்றதாய்த்து.

(கனக்கொளித்யாதி) கனத்துத் திண்ணிதான மதிள் சுற்றும் சூழ்ந்திருந்துள்ள திருமூழிக்களத்திலே நித்யவாஸம்பண்ணுகிறவர்க்கு. அத்தலையில் ஸௌந்தர்யத்தை யநுஸந்தித்தால், ரக்ஷை தேட்டமாயன்றேயிருப்பது. அவனோடே கிட்டிக் கலக்கப் பெறாமையா

லே வருவதும் ஓராற்றாமையுண்டு, அவனுக்கெங்கே யென்னதிங்கு வருகிறதென்று மோராற்றாமையுண்டு; அதிலேயொன்று தீரப் பெற்றது மூன்றுறமுன்னம்.

(புனக்கோள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே) தன்னிலத்திற் காயாவின் நிறம்போலேயாய்த்து நிறமிருப்பது; அவ்வடிவழகுக்குமேலே ஒப்பனையழகையுமுடையவர்க்கு; வடிவழகது, ஒப்பனையழகது. அவ்வடிவழகையு மொப்பனையழகையு மநுபவித்துப் பிரிந்தவெனக்கு ஒருவார்த்தை சொல்லுங்கோள். (அ)

## ஒன்பதாம்பாட்டு,

பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையார்க்கு * ஏந்துநீரிளங்குருகேதிருமூழிக்களத்தார்க்கு * ஏந்துபூண்முலைபயந்தென்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப* தாந்தம்மைக்கொண்டகல்தல்தகவன்றென்றுரையீரே. (கூ)

ப:—அநந்தரம், அஸாதாரண சேஷித்வ சிஹ்நத்தையுடையரானவர்க்கு, தம்மைக்கொண்டு தாம்போதல் தகுதியல்லவென்று சொல்லவேணுமென்று, ஒருகுருகைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

(இ - ள்.) ஏந்துநீர் - நீருக்கஞ்சவேண்டாதபடி யதுதானேதரிக்கும்படியாய், இளம் - கமநஸாமர்த்யத்துக்குறுப்பான விளமையையுடைய, குருகே-குருகே, பூந்துழாய்முடியார்க்கு-ஸர்வசேஷித்வ ஸூசகமாம்படி தர்சநீயமான திருத்துழாயை முடியிலேயுடையராய், பொன் - ஸ்ப்ருஹணீயமான, ஆழி - திருவாழியை, கையார்க்கு - கையிலேயுடையராய், திருமூழிக்களத்தார்க்கு - திருமூழிக்களத்திலே ஆஸந்நமாகநிற்கிறவர்க்கு, பூண் - ஆபரணத்தை, ஏந்து - ஏந்தின, முலை-முலையானது, பயந்து - பயற்பையுடைத்தாய், என் இணைமலர்க்கண் இணைமலர்போலே தன்னைக்கண்டபோதே விகஸிதமாம்படியானவென்கண்கள், நீர்ததும்ப - விரஹத்தாலே சோகாஸ்ருநிரம்பும்படியாக, தாம் - சேஷித்வத்தையும் போக்யத்வத்தையும் சீலத்தையுமுடையதாம், தம்மைக்கொண்டு - தம்மையறிந்துவைத்துக்கொண்டு, அகல்தல் - அகலப்போகை, தகவன்றென்று - தம்முடையதயைக்குப்போராதென்று, உரையீரே - சொல்லீரென்று உபசரித்துச் சொல்லுகிறாள். (கூ)

ஆறு:—(பூந்துழாய்) ஏந்துநீரிளங்குருகே, ஏந்துபூண்முலைபயந் தென்னிணைமலர்க்கண் நீர்ததும்பத் தாம் தம்மைக்கொண்டகலுகை தம்முடைய க்ருபைக்குப் போராதென்று சொல்லிகோளென்கிறாள்·

ஈடு; அவ:—ஒருகுருகைக்குறித்து, நிரதிசயபோக்யரான தாம் போம்போது தம்மைக்கொண்டுபோகை தம்முடைய தகவுக்குப் போருமோவென்று விண்ணப்பஞ் செய்யென்கிறாள்.

(பூந்துழாய்முடியார்க்கு) திருமுடிக்கு ஒப்பனையானவளையமி ருக்கிறபடி. (பொன்னாழிக்கையார்க்கு) திருக்கைக்கு வளையமிருக் கிறபடி. (ஏந்துநீரிளங்குருகே) மிக்கபுனலிலே, தரையிலே நடப்பா ரைப்போலே நடக்கவல்ல விளங்குருகே. உன்கமநஸாமர்த்யத்தாலு ண்டானபலம் நான்பெறவிறே புகுகிறது; நடுவே நீரிடைச்சுவரா லும் தேங்கவேண்டாவிறேயுனக்கு. (திருமூழிக்களத்தார்க்கு) வளை யம்போலேயு மாபரணம்போலேயும் அவ்வூரில் நிலையுமழகுக்குடலா யிருக்கும்படி. அவை விக்ரஹத்துக்காபரண மானாப்போலே, ஶீலம் ஸ்வரூபத்துக்காபரணமிறே. அழகும் குணங்களு மொருதலைத்த விஷயமிறே.

(ஏந்துபூண்முலைபயந்து) ஆபரணங்களை தரிக்கக்கடவமுலை வைவர்ண்யத்தைதரித்து. ஆபரணங்கள் ஸம்ஶ்லேஷார்த்தமாகக் கழற்றுமவை, இது ஸம்ஶ்லேஷத்தாலல்லது கழலாதிறே; வ்யதிரே கத்திலிப்படி யிருக்கையிறே ஸ்த்ரீத்வமாவது; இங்ஙனிராதவன்று பும்ஸத்வாத் வ்யாவ்ருத்திகூடாதிறே. (என்னிணைமலர்க்கண்ணீர் ததும்ப) இணைமலர்போலே யிருக்கிறவென்கண். தம்மழகையே யிலக்காக வுடையகண், ஶோகாஶ்ருவுக்கிலக்காம்படி. அவன்சொல் லும்படி யறிந்திருக்கையாலே சொல்லுக்குளித்தனைபோக்கி அல் லது தன்கண்ணை யிப்படி சொல்லக்கூடாதிறே. (ததும்ப) ஆநந்தாஶ் ருவுக்கர்ஹமானகண் ஶோகாஶ்ருவாலே நிறையும்படி.

(தாம்) "பூந்துழாய்முடியார், பொன்னாழிக்கையார், திருமூழிக் களத்தார்" என்றுவைத்து, "தாம்" என்கிறாளிறே. "பூந்துழாய் முடியார்க்குப்பொன்னாழிக்கையார்க்கு" என்கையாலே - வடிவழ கைச்சொல்லிற்று; "திருமூழிக்களத்தார்க்கு" என்கையாலே-குணஞ் சொல்லிற்று; இப்படிப்பட்ட வடிவழகையும் குணங்களையுமுடைய தாம். (தம்மைக்கொண்டகல்தல்) தமக்ககலவேண்டினால் "—வ்வ

டிவைப்பிரிந்தார்பிழையார்'' என்றத்தை வைத்தன்றேபோவது-தம்மைக்கண்ணுடிப் புறத்திலேகண்டறிவரே. தம்மைப்பிரிந்ததசைக்கு உதவுகைக்கன்றே தம்மைக்கண்டது; (க) '' ஐசோவேஷாசோவ ஸொசெநஹவஸாஸிராவவஃ - இமாமவஸ்த்தாமாபந்நோ நேஹ பஶ்யாமிராகவம் '' என்கிறபடியே. ஆற்றாமை எல்லாம் சொல்லுவிக்குமிறே. எனக்கோராற்றாமைக ளுண்டானவளவில் கிட்டிநின்று முகங்காட்டி ஈரக்கையாலேதடவி நோக்குகைக்கன்றே தம்மைப் பெற்றது. தம்மைப்பிரிந்து நோவுபடுகிற விற்றைக்குமேற்பட ஆற்றாமையில்லையிறே யெனக்கு. இவ்வளவில் நான்பெருமாளைக் காண்கிறிலேன் என்றாளிறே.

அதவா, (தாந்தம்மைக்கோண்டகல்தல்) தாமென்னைக்கொண்டகலுமதொழிய தம்மைக்கொண் டகலக்கடவரோ; தம்மைக் கொண்டகலவேண்டிஞல் தமக்கு ஶேஷமானத்தைப் பொகட்டுப் பிறர்க்கு ஶேஷமானத்தையோ கொடுபோவது. (உ) '' ஸ்வத்தா நாஃ-பக்தாநாம் '' என்றிறே அவனுடம்பிருப்பது. * ''தனக்கேயாக வெனைக்கொள்ளவேணும்'' என்றிறே இத்தலையிருப்பது.(தகவன்றேன்றுரையீரே) ப்ரணயித்வமும் மென்மையுமெல்லாங்கிடக்கச்செய்தே இது நிர்த்தயர்செய்யும் செயலென்றுசொல்லுங்கோள். ஸ்த்ரீவதத்துக்கஞ்சாதார் செய்யவற்றைச் செய்தீரென்று சொல்லுங்கோள்.

## பத்தாம்பாட்டு.

தகவன்றேன்றுரையீர்கள்தடம்புனல்வாயிரைதேர்ந்து * மிகவின்பம் படமேவு மென்னடையவன்னங்காள் * மிகமேனிமெலிவெய்தி மேகலையுமீடழிந்து* என்னகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே. (க0)

ப:—அநந்தரம், திருமூழிக்களத்திலாஸக்தியாலே நிரவதிகதயாவானென்னும்படியிருக்கிறவர்க்கு, என்ஸத்தையழிவதற்குமுன்னே ''இது தம்முடையதயாநுரூபமல்ல'' என்று சொல்லுங்கோளென்று, சிலவன்னங்களைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

---

(க) ரா-அயோ-நிகூ-உகூ- (உ) ஜிதந்தை-க-டு

(இ - ள்.) தடம் - பெரிய, பொழில்வாய்-பொழிலிடத்தில், இரை-இரையை, தேர்ந்து - ஸம்பாதித்து, மிக - மிகவும், இன்பம் - ஆனந்தம், பட - உண்டாம்படி, மேவும் - சேர்ந்துவர்த்திக்கிற, மெல்நடைய-மெலிய நடையையுடைய, அன்னங்காள் - அன்னங்காள், மேனி - சரீரம் மிக - மிகவும், மெலிவெய்தி - மெலிவையெய்தி, அத்தாலே, மேகலையும் - பரிவட்டமும், ஈடழிந்து - கட்டுக்குலைந்து, அதுக்குமேலே, என் அகமேனி - அகவாயில் ஸ்வரூபமும், ஒழியாமே - குலையாதபடி, திருமூழிக்களத்தார்க்கு-ஆஶ்ரிதாநுக்ரஹார்த்தமாகத் திருமூழிக்களத்திலே நிற்கிறவர்க்கு, தகவன்றென்று - இந்நிலையின் ப்ரயோஜநம் பெருமையாலே இது தமையின் கார்யமல்லவென்று, உரையீர்கள் - சொல்லுங்கோளென்கிறாள். (கo)

ஆறு:—(தகவன்றென்று) மென்னடைய வன்னங்காள், தாந் தம்மைக் கொண்டகல்தல் தகவன்றென்று நீங்கள் சொல்லவேணும்; சொல்லுமிடத்தில், என்னுடைய மேனியும் மிக மெலிவெய்தி மேகலையு மீடழிந்து என்னாத்மாவும் முடிவதற்குமுன்னே சென்று சொல்லவேணுமென்கிறாள். (கo)

ஈடு; அவ:—சில வன்னங்களைக் குறித்து, நான் முடிவதற்கு முன்னே அவனுக்கென்தசையை யறிவியுங்கோளென்கிறாள்.

(தகவன்றென்றுரையீர்கள்) அவனுடைய ஸத்தை யழிக்கைக்குத் தகவில்லை யென்னுங்கோள். அதாவது - நிர்த்தயனென்கை. அவனுக்கு நிரூபகம் தயை யாகையாலே, அவனுடைய மர்ம மறியுமவளாகையாலே, அத்தை யில்லையென்கிறாள், (தடம்புனல்வாயிரைதேர்ந்து) மிக்கநீர்வெள்ளத்தையுடைத்தான பொய்கைகளிலே யிரைதேடி. கலவிக்குறுப்பான வ்யாபாரமேயாயிருக்கிறபடி.

(மிகவின்பம் படமேவும்) ஸுகம்கரைபுரளும்படியன்றோ நீங்கள் ஸம்ஶ்லேஷிக்கிறபடி, பிரிவுதேட்டமாய் உங்மஸ்தகராய்ச் செல்லுகிறபடி. விஶ்லேஷியாவிடி லிரண்டாஶ்ரயமு மழியும்படியாய்த்து இவைபரிமாறுகிறபடி. (மென்னடையவன்னங்காள்) கலவியின்மிகுதி நடையிலே தொடைகொள்ளலாம்படி ஸஞ்சரியாநின்றனவாய்த்து,

(மிகமேனிமெலிவெய்தி) ஸரஸஸஞ்சாரமெல்லாம்குலைந்ததிறேயுங்களுக்கு; கண்டிகோளிறே நானிருக்கிறபடி; என்தசையைக் கண்

டால் தரித்திருக்கலாயிருந்ததோ; உங்கள் கலவியின்மிகுதியோபாதி போரும் என்னுடம்பின் மெலிவும். (மேகலையுமீட்டழிந்து) பரியட்டமும் கட்டுக்குலைந்து; மேகலை தொங்கும்போது ஆஸ்ரயம்வேணுமே.

(என்னகமேனியொழியாமே) புறம்புள்ள தடையக் கழன்றது; இனி அகவாயில் ஸ்வரூபம் கழல்வதற்குமுன்னே; நான்முடிவதற்கு முன்னேயென்கை. (திருமூழிக்களத்தார்க்கு) தம்மையொழியச் செல்லாதார் ஸத்தைநோக்குகைக்காகவந்து கிடக்கிறவர்க்கு. (திருமூழிக்களத்தார்க்கு - தகவன்றென்றுரையீர்கள்) பொரிபுறந்தடவி அத்தலையைப்பேணியுண்டாகையும், இனி அவர்படியை நேராகச் சொல்லிப் போருவதோள்.

அப்படி முன்புபேணினாளோ இவளென்னில்; "எனதகவளவண்ணர்தகவுகள்" என்று திருத்தாயார்சொல்லிற்றுப் பொறாமல, "தகவுடையவனே" என்று, "கெடுவாய் ஆகாத்தில் தகவுமறுக்குமோ" என்றாளிறே; அத்தைச் சொல்லுகிறாள். (கo)

---

## பதினொன்றாம்பாட்டு.

ஒழிவின்றித்திருமூழிக்களத்துறையு மொண்சுடரை * ஒழிவில்லாவணிமழலைக் கிளிமொழியாளலற்றியசோல் * வழுவில்லா வண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த * அழிவில்லாவாயிரத்திப்பத்து நோயறுக்குமே. (கக)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, பகவத்விஸ்லேஷ ரூபமான வ்யாதியினுடைய ஶாந்தியை யருளிச்செய்கிறார்.

(இ - ள்) ஒழிவின்றி - ஒருக்காலும் விஸ்லேஷமில்லாதபடி, திருமூழிக்களத்து - திருமூழிக்களத்திலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுகையாலே, ஒண்சுடரை - விலக்ஷணமான தேஜஸ்ஸையுடையவனை. ஒழிவில்லா - பிரியில்தரியாதபடியாய், அணி - அழகிய, மழலை - முக்தோக்தியையுடைத்தான, கிளிமொழியாள் - கிளியோடொத்த பேச்சையுடையவள், அலற்றிய - தன்னார்த்தியாலே அக்ரமமாகச் சொன்ன, சொல் - பாசுரத்தை. வழுவில்லா - அந்த ப்ரேமத்தில் குறைவில்லாதபடியாய், வண்குருகூர் - விலக்ஷணமான நிருகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், வாய்ந்துரைத்த - அவனுடைய ஸ்வபாவங்களைக்கிட்டியநுபவித்துரைத்ததாய், அழிவில்லா - போக்தாக்கள் நெஞ்சில்நின்றும்போகாத

ஆயிரத்திப்பத்தும்-ஆயிரத்திப்பத்தும், நோய்-பகவத்விஶ்லேஷஹேது வான் ஸம்ஸாரவ்யாதியை, அறுக்கும் - தீர்த்துக் கொடுக்கும்.

இது நாலடித்தாழிசை. கலிவிருத்தமென்பாருமுளர். (கக)

ஆறு;—(ஒழிவின்றி) எம்பெருமானைப் பிரியில் தரிக்கமாட்டாத ஸ்வபாவையா யிருப்பா ளொருபிராட்டி அவனைப்பிரிந்தலற்றின பாசுரத்தாலே, தத்ஸத்ருஶ ஸ்வபாவரான வண்குருகூர்ச்சடகோபன் எம்பெருமானைப்பிரிந்தலற்றின விப்பத்து, தத்விஶ்லேஷரூப வ்யாதியைப் போக்குமென்கிறார். (கக)

ஈடு; அவ;—நிகமத்தில், இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்கு, பிரிவுக்கடியான ஸம்ஸாரதுரிதத்தை இதுதானே யறுத்துக் கொடுக்குமென்கிறார்.

(ஒழிவின்றித் திருமூழிக்களத்துறையும்) ஒருநாளும் விடநினையாதே அவ்வூரில் நித்யவாஸம்பண்ணுமவனை. (ஒண்சுடர்) (க) "பின்னானார்வணங்குஞ்சோதி" என்கிறபடியே, அவ்வூரில் நிலையால் வந்தபுகரிருக்கிறபடி;—அவ்வூரில் போக்யதையால் வந்த புகர்; பிற்பாடர்க்கு முகங்கொடுக்கும் நீர்மையால்வந்த புகர்.

(ஒழிவில்லா) அவனவ்வூரையொழியில் தரிக்கமாட்டாதாப்போலே, அவனையொழியில் தரிக்கமாட்டாதவளென்கை; (உ) "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" என்னுமவளிறே. (அணிமழலைக்கிளிமொழியாள்) அழகிய முக்தமான, கிளியின் பேச்சுப்போலே யிருக்கிற பேச்சையுடையவள். (அலற்றியசொல்) தன்னாற்றாமையாலே யக்ரமமாகச் சொன்ன பாசுரத்தை.

(வழுவில்லாவண்குருகூர்ச்சடகோபன்) பிராட்டிபடியி லொன்றும் குறைவற்றிருக்கிறவாழ்வார். (வாய்ந்துரைத்த) கிட்டியுரைத்த; பாவபந்தத்தாலே சொன்னவென்றபடி.

(அழிவில்லாவாயிரத்திப்பத்து) கேட்டவர்கள் நெஞ்சை யொருநாளும் விடாதே வர்த்திக்கிற விப்பத்து. இப்பாசுரத்தைக் கேட்டார்க்கு, ஸமகாலத்திற்போலே ஸர்வகாலமும் ரஸம்பிறக்கும்படி யாய்த்திருப்பது. (நோயறுக்குமே) பகவத்விஶ்லேஷமாகிற நோயையறுக்கும்;—கலந்து பிரிந்து திர்யக்குக்களின் காலிலேவிழுந்து க்லேஶிக்க வேண்டா, விஶ்லேஷமில்லாத தேசத்திலே புகப்பெறுவர். (கக)

ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) திருநெ-க௦ (உ) ரா-அயோ-ருக-நக.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

## ஒன்பதாம்பத்து.

## எட்டாந்திருவாய்மொழி.

### அறுக்கும்வினை - ப்ரவேஶங்கள்.

ஆறு;—(அறுக்கும்வினை) இப்படி தூதப்ரேஷணம்பண்ண பின்னையுமெம்பெருமானை வரக்காணாமையாலே அவஸந்நராய்.

ப:—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி கடகமுகத்தாலே ப்ராபிக்க வபிநிவேஶிததவர், ப்ராப்யத்வராதிஶயத்தாலே, அவன்பரிபூர்ணனாய்க்கொண்டு திருநாவாயிலே எழுந்தருளியிருக்கிறபடியை ப்ரகாசிப்பிக்கக்கண்டு; அவனுடைய அநுபவவிரோதி நிராஸக தேஶவர்த்தித்வத்தையும், அநுபாவ்யத்வ வைபவத்தையும், அஸாதாரண ஸம்பந்தத்தையும் நித்யகைங்கர்யவிஷயத்வத்தையும், பத்நீபரிஜநஸ்த்தாநாதி பூர்த்தியையும், ஆஶ்ரிதபவ்யதையையும், ஶேஷித்வரக்ஷகத்வாத்யாகார பூர்ணதையையும், அநுபவஜ்ஞாந ப்ரதத்வத்தையும், தாரகம ஸர்வேஶ்வரத்வத்தையும், அதிரமணீயவிக்ரஹயோகத்தையு மநுஸந்தித்து, ஏவம்ப்காரனனஸர்வேஶ்வரனெழுந்தருளியிருக்கிற தேசத்தைக்கிட்டி யநுபவிப்பதொருநாளே என்று பஹுமுகமாக மநோரதிக்கிறார்.

ஈடு;—திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்டவநந்தரம் பெருமாளைக்கிட்டுவதற்குமுன்பு பிராட்டிக்குப்பிறந்த மநோரதம்போலே, கீழ்விட்டதூதர் அத்தலைப்பட்டு அவனைக்கொண்டு வருவதற்குமுன்னே நடுவிவர்க்குப்பிறந்த மநோரதத்தைச் சொல்லுகிறது.

இப்படி தம்முடையவார்த்தியறிவிக்கச்செய்தேயும் அப்போதே வரக்காணாமையாலே அவஸந்நரானவர், தூதப்ரேஷணத்தாலும் அவன்குணாநுஸந்தாநத்தாலும் மந:ப்ரஸாதத்தாலும் "அவன்வந்து நம்மைவிஷயீகரித்து அமர்ந்தநிலமான திருநாவாயிலே கொடுபோகைநிஶ்சிதம்'' என்று அத்யவஸித்து, க்ரமத்தால் போகப்பறாமையாலே பதறி, "அங்கேபுகவல்லேனே, புகும்நாளென்றோ, அங்கேபுக்கு என் கண்ணாரக்கண்டமைசெய்யவல்லேனே" என்று இப்படியநேகமநோரதங்களைப் பண்ணுகிறார்.

"உபாயோபேயங்களிரண்டு மீஶ்வரனே" என்றத்யவஸித்தார்க்கு, ப்ராப்யருசி கண்ணழிவற்றால் விளம்ப ஹேதுவில்லாமையாலே, ப்ராப்யஸித்தியளவும் மநோரதம் செல்லாநிற்குமிறே. இம்மநோரதந்தான் இவனுக்குத் தவிராததுமாய், அதுதானினியதுமாய், இவனுடைய ஸ்வரூபத்தோடு சேர்ந்திருப்பது மொன்றிறே.

பெரியமுதலியார், ப்ராப்யஸித்தியில் த்வரையாலே எப்போதுமித்திருவாய்மொழியை யநுஸந்தியாநிற்பர்; ஆகையாலே, இத்தை "பெரியமுதலியார் திருவாய்மொழி" என்றாய்த்துச்சொல்லுவது. அதவா, "விட்டதூதர்கள் தாழ்த்தார்களென்று தாமே அவன்வர்த்திக்கிற தேசத்தேறப்போக வொருப்படுகிறார்" என்பாருமுண்டு.

---

# முதற்பாட்டு.

அறுக்கும்வினையாயினவாகத்தவனை * நிறுத்தும் மனத்தொன்றியசிந்தையினார்க்கு*வெறித்தண்மலர்ச் சோலைகள்சூழ்திருநாவாய்* குறுக்கும்வகையுண்டுகொலோ கொடியேற்கே. (க)

ப:—முதற்பாட்டில், ஆஶ்ரிதாநுபவவிரோதிநிரஸகமாய் நிரதிசயபோக்யமான திருநாவாய் எனக்குக்கிட்டும் வகையுண்டோவென்கிறார்

(இ - ள்.) ஆகத்து - தங்களகவாயிலே, அவனை - ஸமஸ்தவிரோதிநிவர்த்தகனாய் நிரதிஶயபோக்யனான ஸர்வேஶ்வரனானவனை, நிறுத்தும் - நிறுத்தவேணுமென்கிற, மனத்து - நெஞ்சிலே, ஒன்றிய - ஒருமைப்பட்ட, சிந்தையினார்க்கு - மநோரதத்தையுடையவர்களுக்கு, வினையாயின - அவித்யாகர்ம வாஸநாருசிகளான அநுபவவிரோதிகளையடைய, அறுக்கும் - போக்குவதாய், வெறி - பரிமளப்ரசுரமான, தண் - ஶ்ரமஹரமாய், மலர் - புஷ்போத்தரமான, சோலைகள்சூழ் - சோலைகளையுடைய, திருநாவாய் - திருநாவாயானது, கொடியேற்கு - அநுபவாபிநிவேஶாநுரூபமாகக் கிட்டப்பெறாதகொடுமையையுடையவெனக்கு, குறுக்கும்வகையுண்டுகொலோ - கிட்டும்விரகுண்டாமோ. (க)

ஆறா:—பகவத்தர்ஶநாபேக்ஷராயிருப்பாருடைய துக்கங்களைப்போக்கும் திருநாவாயைநமக்கு மொருக்கால் குறுகுகைக்கு உபாயமுண்டேயோவென்கிறார். (க)

ஈடு; அவ:—எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ வென்கிறார்.

(அறுக்கும்வினையாயின) வினையென்று பேர்பெற்றவை யடங்கலும்போக்கும்;—ருசிவிரோதி, உபாயவிரோதி, ப்ராப்யத்தை ப்ராபிக்குமிடத்தில் வரும்விரோதிகள், வர்த்தமாநதேஹத்தளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே ப்ராரப்தஶேஷமாய்நின்று அவ்வருகேயும் போம்படி விளம்பிக்கக்கடவவை. நின்றநின்றநிலைகள்தோறு மூண்டாயிருக்குமிறே விரோதிகள்.

புதுப்புடவை யழுக்குகழற்றுமாபோலே க்ரமத்தாலேபோக்க வேண்டுவது தான்போக்குமன்றிறே; பகவத்ப்ரஸாதத்தாலே போமன்று ஒருக்காலேபோமிறே; (௧) "ஶைநஶ்ஶநைஶ்ஶத்ராவி - மேருமந்தரமாத்ரோபி" (௨) "ஸவெ-லோஹா நஃஷூ-ஊஷிஸகெஷ- ஸர்வேபாப்மாந: ப்ரதூயந்தே" (௩) "ஸவ-ஹொவெஹ்ரா ஜா க்ஷயிஷ்ராமி - ஸர்வேபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிறபடியே யாகக்கடவதிறே. ப்ரஹ்மஹத்யைக்கு ப்ராயஶ்சித்தம் பண்ணில், கோ[illegible] ப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டி வருமிறே; அங்ஙன்வேண்டாவிறே பகவதநுக்ரஹங்கொண்டு கார்யங்கொள்ளுமிடத்தில்.

ஆர்க்குத்தானிப்படி செய்வதென்னில் (ஆகத்தித்யாதி) ஹ்ருதயத்திலே அவனைநிறுத்த வேணுமென்னு மத்யவஸாயத்திலே யொருமைப்பட்ட மநோரதத்தையுடையார்க்கு. (வெறியித்யாதி) வினையைப்போக்காதே வர்த்திப்பிக்கிலும் விடவொண்ணாதபடியாய்த்து தேசமிருப்பது. பரிமளத்தையுடைத்தாய் ஶ்ரமஹரமாய் நித்யவஸந்தமான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாய்.

(குறுக்கும்வகையுண்டுகொலோ) குறுகப்பண்ணும்வகை யேதோவென்னுதல்; குறுகும் விரகேதோவென்னுதல்; குறுக்குமென்று-அத்தேசபாஷை. எம்பெருமானார் திருவடித்தொழ வெழுந்தருளாநிற்க, "திருநாவாயெத்தனையிடம்போரும்" என்று எதிரேவருகிறார் சிலரைக்கேட்டருள, "குறுக்கும்" என்றார்களாய், அத்தைக் கேட்டு "இப்பாஷையாலே யருளிச்செய்வதே ஆழ்வார்!" என்று போரவித்தராயருளினார். (கோடியேற்று) கொடியேனுக்கு. ஆசாலேசமுடையார்க்கு ப்ராபிக்கலாம் தேசமாயிருக்க ஆசையும் கண்

(௧) விஷ்ணுதர்ம-௭௮- (௨) சாந்தோ-௫-௨௪-
(௩) கீதை-௧௮-௬௬-

ணழிவற்றிருக்க புகப்பெறாதே நோவுபடுகைக்கடியான பாபத்தைப் பண்ணினவெனக்கு.

[ஆகத்தவனைநிறுத்தும் மனத்தொன்றியசிந்தையினார்க்கு-வினையாயின-அறுக்கும் - வெறித்தண்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய்-கொடியேற்கு - குறுக்கும் வகையுண்டுகொலோ.] (க)

---

## இரண்டாம்பாட்டு.

கோடியேரிடைக்கோகனகத்தவள்கேள்வன் * வடிவேல்தடங்கண்மடப்பின்னைமணாளன்* நெடியானுறைச்சோலைகள் சூழ்திருநாவாய் * அடியேனணுகப் பெறுநாளெவைகொலோ. (உ)

ப:—அநந்தரம், மஹிஷ்யாதிபோக்யதாவைபவத்தை யுடையவன் வர்த்திக்கிற திருநாவாயை நான்கிட்டும் நாள்க ளெவையென்கிறார்.

(இ - ள்.) கொடியேரிடை - கொடிபோலழகிய இடையையுடையளாய், கோகனகத்தவள் - தாமரைப்பூவிற் பிறப்பாலே நிரதிசயபோக்யையானலக்ஷ்மிக்கு, கேள்வன் - ஸத்ருசனாய், வடிவேல் வடித்தவேல்போலே யொளியையும் கூர்மையையுமுடைத்தான, தடங்கண்-பெரிய கண்களையும், மடம் - மடப்பத்தையுமுடைய, பின்னை - நப்பின்னைப்பிராட்டிக்கு, மணாளன் - போக்தாவாய், இவ்வளவன்றியே, நெடியான் - அபர்யந்தபோக்யதாதிசயத்தையுடையவன், உறை-வர்த்திக்கிற தேசமாய், சோலைகள்-நாநாவிதமானசோலைகளாலே, சூழ் சூழப்பட்ட, திருநாவாய்-திருநாவாயை, அடியேன்-அநந்யபோக்யனானநான், அணுகப்பெறுநாள் - அணுகப்பெறுநாள்கள், எவைகொலோ - எவையோ.

வடியென்று-மாவடுவாய், மாவடுப்பிளவுபோலவும் வேல்போலவுமென்றுமாம். (உ)

ஆறு;—(கோடியேரிடை) பெரியபிராட்டியாரோடும் நப்பின்னைப்பிராட்டியாரோடுங்கூட அவன் எழுந்தருளியிருக்கிற திருநாவாயிலே போய்ப்புகுவதென்றோவென்கிறார். (உ)

ஈடு-அவ:—திருநாவாயிலே புகும்நாளென்றோ வென்கிறார்.

(கோடியேரித்யாதி) கொடிபோலே யழகிதான இடையை யுடையளாய் புஷ்பத்திற் பரிமள மூபாதாநமாகப் பிறந்த பிராட்டிக்கு

வல்லபனானவன். (க) " நகஸ்ரீர்நாவராய .....தி - நகப்ஸிங்காபராத் யதி " என்பாருமருகேயிருக்க இழக்கவோவென்கிறார். (வடிவேற்ற டங்கண்மடப்பின்னைமணாளன்) கூரிய வேல்போலே, ஓராளு மொரு நோக்கும் நேராய்போக்தாவினளவல்லாத போக்யதையை யுடைத்தான கண்ணையுடையளாய், ஆத்மகுணோபேதையான நப்பின்னைப் பிராட்டியுடைய செவ்வி புஜிக்கைக்கு இட்டுப்பிறந்தவனாய்த்து.

(நெடியான்) இப்படிப்பட்ட மஹிஷீபரிஜநாதிகளா லெல்லை காணவொண்ணாதவன். (உறையுமூர் ...) அவனுக்கும் அவன்விபூதிக்கும் குறைவற வர்த்திக்கலாம்படி இடமுடைத்தான சோலைகளாலே சூழப்பட்ட திருநாவாயை. (அடியேன்) வநவாஸத்துக்குப் பெருமாளும் பிராட்டியுமாய்க் கலக்குமிடத்தில் (உ) * ஹவாஂஸ்து-- பவாம்ஸ்துவிற்படியே எல்லாவடிமைகளும் செய்கைக்கு இளைய பெருமாள் நேர்ப்பட்டாப்போலேயாய்த்து, இங்குத்தைக் கடிமை செய்கைக்கு இவர் நேர்பட்டபடியும். இளையபெருமாளைப்போலே அடிமைசெய்வித்துக்கொள்ளுகிறவிஷயத்திற் குறையில்லையாய்த்தி வாக்கு; ஸ்ரீஜநகராஜன் திருமகளொருத்தியுமிறேயங்கு. (அணுகப் பெறுநாளெவைகொலோ) அத்தேசத்தை நான்கிட்டப் பெறும் நாளேதோ. (உ)

## மூன்றாம்பாட்டு.

எவைகொலணுகப்பெறுநாளென் றெப்போதும் * கவையின் மனமின்றிக்கண்ணீர்கள்கலுழ்வன் * நவையில் திருநாரணன்சேர் திருநாவாய் * அவையுட்புகலாவதோர்நாளறியேனே. (௩)

ப:—அநந்தரம், அஸாதாரணஸம்பந்த விஶிஷ்டனான நாராயணன் வர்த்திக்கிற திருநாவாயோலக்கத்திலே புகுவதொருநா ளறிகிறிலேனென்கிறார்.

(இ - ள்.) அணுகப்பெறுநாள் - கிட்டப்பெறுநாள், எவைகொலென்று - எவை யென்று, எப்போதும் - ஸர்வகாலத்திலும், கவையில்மனமின்றி-வேறொன்றிற் புகுரும் நெஞ்சின்றியே ஏகாக்ரசித்தனாய்க்கொண்டு, கண்ணீர்கள் - கண்ணீர்கள், கலுழ்வன் - மல்காநிற்பன்; நவை

(க) ரா-யு-கககூ-சஅ. (உ) ரா-அயோ-௩௧-உ௫

களசு திருவாய்மொழி, கூ-ப, அ-தி,ச-பா,நாளேல் வ்யாக்யாநம்.

யில்-தூர்லபத்வ ஸோபாதிகத்வாதிகளாகிற குற்றமின்றியே, திருநாரணன்-ஸுலபனுய் நிருபாதிகபந்துவாய் ஶ்ரிய:பதியானநாராயணன், சேர்-வர்த்திக்கிற, திருநாவாய் - திருநாவாயிலே, அவையுள் - அவனுடையவோலக்கத்திலே, புகலாவது - ப்ரவேசிக்கலாவது, ஓர்நாள் - ஒருநாள், அறியேனே - இன்னதென்றறிகிறிலேன்.

நவை - குற்றம், அவை - ஓலக்கம். (ங)

ஆறு;—(நவைகொல்) என்றே திருநாவாயை யணுகப் பெறுவதென்றுஎப்போதும் தநேகசித்தனுப் கண்ணீர்சோரவிருக்கிறநான் ஹேயப்ரத்யநீகனுன திருநாரணன்சேர் திருநாவாயிலே அவனுடைய திவ்யபரிஷத்திலேபோய்ப் புகுநாளென்றென்றறிகிறிலேனென்கிறார். (ங)

ஈடு; அவ;—திருநாவாயில் திருவோலக்கத்திலே புகும்நாளென்றென்றறிகிறிலேனென்கிறார்.

(யவைகோலித்யாதி) நான்வந்து கிட்டப் பெறும்நாள் யவையென்று. (எப்போதும்) ஒருக்காலித்தைச் சொல்லி, அல்லாதபோது அந்யபரதைபண்ணுகிறேனே. (கவையில்மனமின்றி) அதுதன்னிலு மிதுவும் முகாந்தரமுமாய்ச் செல்லுகிறதோ, இருதலைத்த நெஞ்சின்றிக்கே, (கண்ணீர்கள்கலுழ்வன்) கண்ணீர்கள் வெள்ளமிடவிருப்பன்.

(நவையில்திருநாரணன்) தூர்லபத்வாதி தோஷமின்றிக்கேயிருக்கிற ஶ்ரீமானுன நாராயணன்; ஸௌலப்யத்துக்கூற்றான பிராட்டியோடேகூடத்திருநாவாயிலேவந்து ஸுலபனுனவன். திருநாவாயிலே பேரோலக்கமாக விருக்க, “அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ” என்றுசைப்பட்டான் அத்திரளிலேசென்று கூடப் பெறும்நாளென்றென்றறிகிறிலேன்.

அவை - ஸபை. நவை - குற்றம். (ங)

---

## நான்காம் பாட்டு.

நாளேலறியேனெனக்குள்ளனநானும் * மீளாவடிமைப்பணி செய்யப்புகுந்தேன் * நீளார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய் * வாளேய்தடங்கண்மடப்பின்னைமணாளா. (ச)

ப:—அநந்தரம், நித்யகைங்கர்யத்திலே அந்விதனாய்ப்புகுந்தான் அந்தகைங்கர்யோபயுக்தமான நாள்க ளுளவானபடி யறிகிறிலேனென்கிறார்.

(இ - ள்.) நீள் - ஓங்கி, ஆர் - நிறைந்த, மலர் - பூவையுடைத்தான, சோலைகள் - சோலைகள், சூழ் - சூழ்ந்த, திருநாவாய் - திருநாவாயிலே, வாளேய் - வாள்போலே (நீண்ட) ஒளியையுடைத்தான, தடங்கண் - பெரியகண்ணையுடையளாய். மடப்பின்னை-ஆத்மகுணபூர்ணையான நப்பின்னைப்பிராட்டிக்கு, மணாளா-நிரதிசயபோக்தாவானவனே, ஸூரிகளைப்போலே, நானும்-நானும், மீளாவடிமைப் பணிசெய்ய-விச்சேத ரஹித நிரந்தரகைங்கர்யம் பண்ணுகைக்கு, புகுந்தேன்-அந்வயித்தேன்; அதுக்கு, எனக்கு - எனக்கு, உள்ளன-உளவாகக் கற்பித்துவைத்த, நாளேல்-நாளாகில், அறியேன் - அவைநானறிகிறிலேன். (ச)

ஆறு:—(நாளேலறியேன்) நிரவதிக ஸௌந்தர்யகுண விசிஷ்டையான நப்பின்னைப்பிராட்டிக்கு போக்யனான வுனக்கு மீளாதவடிமைப்பணிசெய்யப்புகுந்தேன், அடிமைசெய்யும்நா ளென்றென்றறிகிறிலேனென்கிறார். (ச)

ஈடு-அவ;—ஆத்மாந்ததாஸ்யம்பண்ணும்படி விஷயீக்ருதனான நான், நப்பின்னைப் பிராட்டியோடேகூட விருக்கிற விருப்பிலே யடிமைசெய்யப்பெறும் நா ளென்றென்றறிகிறிலேனென்கிறார்.

(நாளேலறியேனெனக்குள்ளன) பெறக்கடவநா ளென்றென்றறிகிறிலேனென்னுதல்; நான் பிரிந்திருக்கக்கடவ நாளெத்தனையுண்டென்றறிகிறிலேனென்னுதல். பேறு ஸித்தமானபின்பு பதறுகிறதென்னென்னில் (நானும்மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன்) நித்யஸூரிகள் பண்ணு மாத்மாந்ததாஸ்யத்திலேயன்றோ நானு மதிகரித்தது. ஒரு ப்ரயோஜநத்தைக்கொள்ளக் கிட்டினவனா யாறியிருக்கிறேனோ, தாஸ்யபரிமளத்திற் சுவடறியாதவனா யாறியிருக்கிறேனோ.

(நீளார்மலர்ச்சோலைகள்) ஓங்கிப் பரப்புமாறப்பூத்த சோலைகளையுடைத்தானதேசம். அடிமைசெய்கைக்குப் புஷ்பாத்யுபகரணங்களால் குறைவற்றதேசமென்னுதல், நப்பின்னைப்பிராட்டியும் தானுமாகப் புஷ்பாபசயம்பண்ணலாம் தேசமென்னுதல்.

(வாளேய்தடங்கண்) ஒளியையுடைத்தான பரந்தகண்ணென்னுதல்; வாள்போலேகண்டாரை யழிக்கவல்ல பரந்தகண்ணென்னுதல்: அவனை யநந்யார்ஹமாக்கவல்ல கண்ணழகையுடையவளென்கை. (மடப்பின்னைமணாளா) அழகே யன்றிக்கே ஆத்மகுணங்களாலும் துவக்கவல்லவளுக்கு வல்லபனானவனே. தேசாந்தரம் போன ப்ரஜை ஊரணித்தானவாறே தாய்மாரைப் பலகால் நினைக்குமாபோலே, ப்ராப்யதேசமணித்தானவாறே திரளவும் தனித்தனியும் பிராட்டிமாரை அநுஸந்திக்கிறார். (ச)

---

# ஐந்தாம்பாட்டு.

மணாளன்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் * கண்ணாளனுலகத்துயிர் தேவர்கட்கெல்லாம் * விண்ணாளன்விரும்பியுறையுந் திருநாவாய் * கண்ணாரக்களிக்கின்றதிங்கென்றுகொல்கண்டே. (ரு)

ப:—அநந்தரம், பத்நீபரிஜநஸ்தாநாதி பரிபூர்ணனானவன் வர்த்திக்கிற திருநாவாயை என்கண்ணானது நிறையும்படி கண்டநுபவிப்பதென்றோவென்கிறார்.

(இ - ள்.) மலர்மங்கைக்கும் - பத்மவாஸிநியானலக்ஷ்மிக்கும், மண்மடந்தைக்கும் - ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும், மணாளன் - போக்தாவாய், உலகத்து - லோகத்தில், உயிர்தேவர்கட்கெல்லாம் - ப்ராணிகள் தேவதைகள் எல்லார்க்கும், கண்ணாளன் - நிர்வாஹகனாய், விண்ணாளன் - பரமவ்யோமஶப்தவாச்யமானபரமபதத்திலுள்ளாரையும் அடிமைகொள்ளுமவன், விரும்பி - இந்தவிபூதித்வயத்திலும்விரும்பி, உறையும் - வர்த்திக்கிற, திருநாவாய் - திருநாவாயை, கண் - கண்கள், ஆர - பரிபூர்ணமம்படி, கண்டு - கண்டு, இங்கு - இங்கே, களிக்கின்றது - நிரதிஶயாநந்தியாவது, என்றுகொல் - என்றோ. (ரு)

ஆறு;—(மணாளன்) லக்ஷ்மீபூமிநீளாநாயகனாய், தேவாதிஸ்தாவராந்தநிகிலஜநநிர்வாஹகனாய், ஸ்ரீவைகுண்டநிலயனான வெம்பெருமான் விரும்பியுறையும் திருநாவாயை, இப்ப்ரக்ருதியோடே கண்ணாரக்கண்டு களிப்பதென்றோவென்கிறார். (ரு)

ஈடு-அவ:—திருநாவாயைக் கண்ணின்விடாய்தீரக் கண்டநுபவிப்பதென்றென்கிறார்.

(மணாளனித்யாதி) பெரியபிராட்டியார்க்கும் ஸ்ரீபூமிப்பிராட்டியார்க்கும் வல்லபனானவன். புருஷகாரமாவாரும் பொறைக்கு உவாத்தாவாருமுண்டாயிருக்க விழுக்கவேணுமோ. (கண்ணாளனித்யாதி) லோகத்தில் மநுஷ்யர்களென்ன, தேவர்களென்ன, எல்லார்க்கும் நிர்வாஹகனானவன். அவர்கள் படுக்கைப்பற்றுநோக்குகிறபடி.

(விண்ணாளன்) படுக்கைதானிருக்கிறபடி;-பிராட்டிமாரும்தானும் தனக்குத்தகுதியான பரமபதத்தில் திவ்யபர்யங்கத்திலேயிருந்து நித்யஸூரிகளை நிர்வஹிக்கிறவன். (விரும்பியுறையும் திருநாவாய்) உபயவிபூதிநாதன், பெறாப்பேறாக வாதரித்து வர்த்திக்கிறதேசம். அவன்விரும்புகிறதேசமல்லது ப்ராப்யமில்லையிறே.

(கண்ணார) காண்கையிலே விடாய்ப்பட்டகண், ஆர - வயிறு நிறைய. (களிக்கின்றதிங்கென்றுகோல்) (க) "ஹாஉஹாஉஹாஉ-அஹமந்நமஹமந்நம்" என்றொரு தேசவிசேஷத்தே களிக்கையொழிய, இங்கேகளிக்கப் பெறுவதென்றோ. (கண்டே) "காண்கைநிய்சிதம்" என்னும் விஸ்வாஸத்தால் களிக்கையன்றிக்கே, கண்டே களிப்பதென்றோ. (௯)

---

# ஆறாம்பாட்டு.

கண்டேகளிக்கின்றதிங்கென்றுகோல்கண்கள் * தொண்டேயனக்காடொழிந்தேன்துரிசின்றி * வண்டார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் * கொண்டேயுறைகின்ற வெங்கோவலர்கோவே, (சூ)

ப:—அநந்தரம் திருநாவாயிலேவர்த்திக்கிற வாஸ்ரிதஸுலபனானவுன்னைக்கண்டு என்கண்கள் களிப்பதென்றென்கிறார்.

(இ - ள்.) வண்டார் - வண்டுகள்நிறைந்த, மலர்ச்சோலைகள் - மலரையுடையசோலைகள், சூழ் - சூழ்ந்த, திருநாவாய் - திருநாவாயை, கொண்டு - வாஸஸ்தானமாகத் திருவுள்ளத்திலேகொண்டு, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுமவனாய், எங்கோவலர்கோவே - எனக்கும் கோபாலர்க்கும் ஸௌலப்யத்தைக்காட்டி ஸ்வாமியான க்ருஷ்ணனே, துரிசின்றி - க்ருத்ரிமமின்றியே, உனக்கே - உனக்கே, தொண்டாயொழிந்தேன் - சபலனாய்விட்டேன், கண்கள் - என்கண்கள், இங்கு -

---

க) தை-ப்ருகுவல்லி-கல

கஅ0 திருவாய்மொழி, கூ-ப, அ-தி, எ-பா, கோவாகிய வ்யாக்யாநம்.

இங்கே, கண்டேகளிக்கின்றது - நிரந்தரமாகக் கண்டேகளியாநிற்பது, என்றுகொல் - என்றாயிருக்கிறது. (கூ)

ஆறு:—(கண்டே) எனக்காகத் திருநாவாயைக் கோயிலாகக் கொண்டுறைகிற கோவலர்கோவே, உன்பக்கலிலே அநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையேனான வென்னுடையகண்கள் திருநாவாயிலே உன்னைக்கண்டு களிப்பதென்றோவென்கிறார். (கூ)

ஈடு;- அவ;— ஊரையன்றிக்கே ஊரில் நின்றருளின வுன்னைக் கண்டு களிப்பதென்றோ வென்கிறார்.

(கண்டேகளிக்கின்றதிங்கென்றுகொல்கண்கள்) நான்செய்த படிசெய்ய; கண்களின்விடாய் கெடுவதென்றோ. ஒருநாளிலேகாண்கை நிஸ்சிதம். ஆனபின்பு, இந்நிர்ப்பந்தத்துக்குப் பலமென்னென்னில் (தொண்டேயுனக்காயொழிந்தேனித்யாதி) அந்யபரதையின்றிக்கே உன் திருவடிகளிலே அதிசபலனானேன்; அரைக்ஷணமிழக்க மாட்டாதப்டியன்றோ என்சாபலமிருப்பது. துரிசாகிறது - மநஸ்ஸுக்கு ஹேயவிஷயஸ்பர்ஸம்.

(வண்டித்யாதி) பரிமளத்தோபாதி வண்டுகளும் படிந்துகிடக்கும்படி புஷ்பிதமான சோலையுடைத்தானதேசம். (க) "நவ-ந-நாவர்த்-தே-நசபுநராவர்த்ததே" என்கிறபடியே புக்காரை மீளவொட்டாதபடி நிரதிசயபோக்யமான தேசம். (கோண்டேயுறைகின்ற) "நமக்கும் நம்மையுகந்தார்க்கும் நினைத்தபடி பரிமாறியநுபவிக்கலாம் தேசம்" என்று திருவுள்ளத்தாலே யாதரித்துக்கொண்டு வர்த்திக்கிற தேசமாய்த்து. (எங்கோவலர்கோவே) க்ருஷ்ணனாய் வந்தவதரித்து இடையர்க்கு ஸுலபனானாப்போலே, திருநாவாயிலே வந்தெனக்கு ஸுலபனானவனே. (கூ)

## ஏழாம்பாட்டு.

கோவாகியமாவலியை நிலங்கொண்டாய் * தேவாசுரஞ்செற்றவனே திருமாலே* நாவாயுறைகின்ற வென்னாரணநம்பீ* ஆவாவடியானிவனென்றருளாயே. (எ)

ப:—அநந்தரம், சேஷித்வ ரக்ஷகத்வ ப்ராபயத்வ ரூபமான வாகாரபூர்த்தியையுடைய நீ, உறவைப்பார்த்து க்ருபைபண்ணவேணுமென்

(க) சாந்தோ-அ-கரு-

(இ - ள்) கோவாகிய - த்ரைலோக்யத்துக்கும் சேஷியாகத் தன்னையபிமாநித்திருந்த, மாவலியை - மஹாபலியை, நிலங்கொண்டாய் - பூமியை அபேக்ஷித்துவாங்கி அதினுடைய வந்யசேஷத்வம்போய் அநந்யார்ஹமாம்படிசேஷியானவனும், சேஷமானஜகத்துக்கு, தேவாசுரம் - தேவாஸுரவிபாகத்தால் வருகிறவிரோதத்தை, செற்றவனே - ஶமிப்பித்துத்வதேகஶரணனுக்குமவனும், நாவாயுறைகின்ற - திருநாவாயிலேநிரந்தரவாஸம்பண்ணுகிற, என், நாரணநம்பீ - ஸமஸ்தகுணவிபூதி விசிஷ்டத்வத்தால்வந்த நாராயணத்வ பூர்த்தியையுடையையாய், திருமாலே - இந்தசேஷித்வரக்ஷகத்வப்ராப்யத்வபூர்த்திக்கு அஸாதாரணமானஶ்ரிய: பதித்வத்தையுடையவனே, * காருண்யரூபையானவளோட்டைச்சேர்த்தியாலே, ஆ ஆ ஐயோ, இவன் - இவன், அடியானென்று - நமக்கு சேஷபூதனென்று, அருளாயே - * ஆகாரத்ரயவிஶிஷ்டஸம்பந்தத்தைப்பார்த்து இரங்கியருளவேணும். (எ)

ஆறு;—(கோவாகிய) ஆஶ்ரிதஜந ஸமீஹிதப்ரதனும், ஆஶ்ரிதஜநாநிஷ்ட நிவாரணஸ்வபாவனுமாய், ஆஶ்ரிதவத்ஸலனுமாய், ஆஶ்ரிதசுலபத்வார்த்தமாகத் திருநாவாயிலே யவதீர்ணனுமாயிருந்த நாராயணநம்பீ, ஆவாவடியானிவனென்றருளாயென்கிறார். (எ)

ஈடு - அவ;—ஆஶ்ரிதார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிற தேவர், அநந்யகதியென்று என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

( கோவாகியமாவலியை நிலங்கொண்டாய் ) ஸர்வேஶ்வரன் இந்த்ரனை த்ரைலோக்யாதிபதியாக்கிவைத்தான், அவனைத்தள்ளி அந்தப்பதத்தைத் தானெறட்டுக்கொண்டு " நானே அரசு " என்றிருந்தானாய்த்து. நீகொடுக்கக்கொள்கை யன்றிக்கே, அதுக்கெல்லாம்தானே நியாமகன் என்றபிமாநித்திருந்தானாய்த்து. "வெறும்புறத்திலே, தன்னதல்லாதத்தை 'தன்னது' என்றெறட்டுக்கொண்டிருக்கக்கடவ வவன்கையிலே இவ்விஷயமுங்கிடக்குமாகில் நாடுகுடிக்கிடவாது " என்றுபார்த்தருளி, இந்த்ரனதானவிபூதியை அவன்பக்கலில் நின்றும்வாங்கினன்.

(தேவாசுரஞ்செற்றவனே) தேவாஸுரஸங்க்ராமத்திலே அவர்கள் படுவது இவர்கள் படுவதாய் இங்ஙனே யுருவச்செல்லப்புக்கவாறே, ஒருதலையையழித்து தேவஜாதிக்குக்குடியிருப்புப்பண்ணிக்கொடுத்தானாய்த்து.

(திருமாலே) ஆஶ்ரிதரக்ஷணத்துக்கும் தத்ப்ரதிகூல நிரஸநத்துக்குமடி ஶ்ரிய:பதியாகை. (நாவாயுறைகின்ற) இப்படி ரக்ஷிக்குமிடத்தில் அடுத்தணித்தாக முகந்தோற்றத் திருநாவாயிலே நித்யவாஸம்பண்ணுகிற (என்னாரணநம்பீ) ஆஶ்ரிதவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே நோக்காக ஸர்வாந்தர்யாமியானவன். (நாரணநம்பீ) அதுக்குறுப்பாக ஆஶ்ரிதவத்ஸலனாய் அவர்களுக் குறுப்பாகப்பெற்றோமென்றத்தாலே பரிபூர்ணனானவனே.

(ஆவாவித்யாதி) (௧) "க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: - க்ருபாமாத்ரமநோவருத்தி:" என்கிறபடியே, ஐயோ, இவனநந்யகதி, இவனுக்கு வேறொருபுகலில்லை என்று, என்பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும். (அடியான்) அவன் அருளுகைக்கும் இவன் அருள்கொள்ளுகைக்கும் ஸம்பந்தஞ் சொல்லுகிறது, (௯)

---

## எட்டாம்பாட்டு.

அருளாதொழிவாயருள் செய்தடியேனை * பொருளாக்கியுன்
பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய்* மருளேயின்றியுன்னை யென்னெஞ்
சத்திருத்தும் * தெருளேதருதென் திருநாவாயென்தேவே. (௮)

**ப:**—அநந்தரம், நீயருளாதிருக்கவுமாம், அருளவுமாம், ஒருசலக்கமில்லாதபடி யுன்னை யென்னெஞ்சிலே வைத்தநுபவிக்கும்படியான ஜ்ஞாநத்தைத் தந்தருளவேணுமென்கிறார்.

(இ - ள்.) அருளாதொழிவாய் - இவன் செய்தபடி செய்கிறான் என்று க்ருபைபண்ணாதிருக்கிலுமிருக்கிறாய், அடியேனை-அநந்யகதியாம்படி யுனக்கேயாயிருக்கிற வென்னை அருள்செய்து - நிரவதிக க்ருபைபண்ணி, பொருளாக்கி - லப்த ஸத்தாகனாக்கி, உன் பொன்னடிக்கீழ்-உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளின்கீழே, புக - ப்ரவேஶிக்கும்படி, வைப்பாய் - வைக்கிலும் வைக்கிறாய், தென் - கட்டளைப்பட்ட திருநாவாய் - திருநாவாயிலே, என் தேவே - எனக்குப் பரமப்ராப்யபூதனாயிருக்கிறவனே. மருளேயின்றி - ஒருக்காலும் அஜ்ஞாநகந்தமில்லாதபடி, உன்னை, ஸர்வப்ரகாரபரிபூர்ணனாய் போக்யனானவுன்னை, என் நெஞ்சத்து-அத்யந்தாபி நிவிஷ்டனான வென்னெஞ்சிலே, இருத்தும் - இருத்தியநுபவிக்கும்படியான, தெருளே-தெளிந்தஅறிவை, தரு-எனக்குத் தந்தருளவேணும்.

தருவென்று - தருதியாகவேணுமென்படி. (௮)

---

(௧) வி-பு-௫-௭-௭௰

ஆறு;—(அருளாதொழிவாய்) அஜ்ஞாநகந்த மில்லாத தொரு படி உன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிவிஷய திவ்ய ஜ்ஞாநத்தை உன்க்ருபையாலே யெனக்குத் தந்தருளினநீ, இன்னமு முன்க்ருபையாலே "நம்மடியானிவன்" என்று விஷயீகரித்தருளி, அடியேனை யுன்பொன்னடிக்கீழ்ப் புகவைத்தருளுவாய், வைத்தருளாதொழிவாய், திருவுள்ளமானபடிசெய்தருள் என்றுகொண்டு எம்பெருமானை யின்னுதாகிறார். (அ)

ஈடு-அவ;—அப்போதே யபேக்ஷிதம் பெறாமையாலே, "அருளவுமாம், தவிரவுமாம், அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை யென் னெஞ்சிலே யிருத்தும்படி தெளிவைத்தரவேணும்" என்கிறார்.

( அருளாதொழிவாய் ) என்பக்கல் க்ருபைபண்ணாதே இவன் பட்டது படுகிறானென்றிருக்கிலுமிரு. (அருள்செய்து) அன்றிக்கே, என் தூர்க்கதியைக்கண்டு க்ருபைபண்ணி. ( அடியேனையித்யாதி ) அஸத்கல்பனுயிருக்கிற வென்னை, (க) "ஸந்தமேநம்-ஸ்ததோவிது:" என்கிறபடியே ஒருவஸ்துவாம்படிபண்ணி, நிரதிசயபோக்யமான உன் திருவடிகளின்கீழே வைத்துக்கொள்ளிலும் கொள். பொருளானாரை வைத்துக்கொள்ளும் ஸ்தாநம் பொன்னடிக்கீழ்போலேகாணும்.

(மருளேயின்றியித்யாதி) அடியில் * மயர்வறமதிநலமருளினபடியே, அஜ்ஞாநகந்தமில்லாதபடி உன்னை யென்மநஸ்ஸிலே யெப்போதும் வைத்துக்கொள்ளும்படி, (உ) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிற தெளிவைத் தரவேணும். "தென்திருநாவாயென் தேவே - தெருளேதரு" என்று க்ரியை;

அன்றிக்கே, "மருளேயின்றியுன்னை யென்னெஞ்சத்திருத்தும் தெருளேதருதென் திருநாவாயென்தேவே - அருளாதொழிவாய். அருள்செய்தடியேனைப் பொருளாக்கியுன்பொன்னடிக்கீழ்ப்புகவைப்பாய், திருவுள்ளமானபடிசெய்" என்றும் பிள்ளான்பணிப்பது. (அ)

(க) தைத்-ஆந- (உ) உ-கூ-ச-

# ஒன்பதாம்பாட்டு.

தேவர்முனிவர்க்கென்றுங் காண்டற்கரியன் * மூவர்முதல்வ
னொருமூவுலகாளி * தேவன்விரும்பியுறையுந்திருநாவாய் * யாவ
ரணுகப்பெறுவாரினியந்தோ. (கூ)

ப:—அநந்தரம், அறிவுடையார்க்கும் அறியவரியஸர்வாதிகன் வர்த்திக்கிற திருநாவாயை, அத்யந்தாபிநிவிஷ்டனான நான் பெற்றிலேன், இனி யார்பெறப்புகுகிறார் என்கிறார்.

(இ - ள்.) தேவர்முனிவர்க்கு - ஸமஸ்ததேவர்களுக்கும், ஸநகாதிமுனிவர்களுக்கும்ஸ்வயத்நத்தால், என்றும்-ஸர்வகாலமும், காண்டற்கு-காண, அரியன் அரியனாய், மூவர் - ப்ரஹ்மருத்ராதிகளுக்கு, முதல்வன் - ஸத்தாதிஹேதுபூதனாய், ஒரு - அத்விதீயமான, மூவுலகு - ஜகத்த்ரயத்தையும், ஆளி-தன்ஸங்கல்பத்தாலேநிர்வஹிக்குமவனாய், தேவன்-ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான வீஶ்வரன், விரும்பி - அத்யாதரம்பண்ணி, உறையும் - வர்த்திக்கிற, திருநாவாய் - திருநாவாயை, அந்தோ - ஐயோ, இனி - இனி, அணுகப்பெறுவார்யாவர்-அணுகப்பெறுவாரார்.

இவ்வபிநிவேசாதிசயத்திலும் கிட்டாதது இனிக்கிடைக்கிறதோ வென்று கருத்து (கூ)

ஆறு;—(தேவர்) ப்ரஹ்மாதிகளுடைய சக்ஷுராதி ஸர்வகரணங்களுக்கு மகோசரனாய், ப்ரஹ்மாதி ஸ்தாவராந்த ஸமஸ்தஜந்து நிர்மாணத்ராண ஸம்ஹாரணலீலனான வெம்பெருமான் விரும்பிக்கொண்டு ஸர்வஸுலபனா யுறைகிற திருநாவாயை யணுகப்பெறுமவர்கள் என்னபாக்யம் பண்ணினார்களோ, நான் பாக்யஹீனனா யிழந்தேனென்று நோகிறார். (கூ)

ஈடு-அவ;—இப்படி சொன்னவிடத்திலு மொருவிசேஷகடாக்ஷம்பண்ணாமையாலே, "நானிவ்வாசையோடே முடியாநின்றேன், என்னிமதடபெறப்புகுகிற பாக்யாதிகாரரோ" என்கிறார்.

(தேவர்முனிவர்க்கென்றும்காண்டற்கரியன்) ப்ரஹ்மாதிகளுக்கும் ஸநகாதிகளுக்கும் ஸ்வயத்நத்தாலே யென்றுமொக்கக் காணவரியனாயுள்ளவன். (மூவர்முதல்வன்) ப்ரஹ்மருத்ரர்கள் நடுவேவந்தவதரித்து அவர்களுக்கு நிர்வாஹகனென்னுதல்; ப்ரஹ்மருத்ரே

ந்த்ரர்களுக்கு நிர்வாஹகனென்னுதல் ; ( ஒருமூவுலகாளி ) இந்த்ர முகத்தாலேநின்று த்ரைலோக்யத்தையும் ரக்ஷிக்கும்படியைச் சொல்லுதல் ; அன்றிக்கே, கீழும்மேலும் நடுவுமான ஸர்வலோகத்துக்கும் அத்விதீய நாயக னென்னுதல்.

(தேவன்) ஸர்வவிஸஜாதீயன். ( விரும்பியுறையும்திருநாவாய்) இப்படி ஸர்வநிர்வாஹகனானவன், தனக்கென்ன வொருகுடி யிருப்பில்லாதானொருவன் குடியிருப்புப் பெற்றாப்போலே, "ஆஸ்ரிதாக்ஷணத்துக்குப் பாங்கானதேசம்" என்று அத்யாதரம்பண்ணி வர்த்திக்கும்தேசத்தை ( யாவரணுகப்பெறுவாரினி ) நான் முடியப்புகாநின்றேன், இனிப் பெறவிருக்கிறாரார்? (க) "நதேதேநரஷ்யா: நதேமநுஷ்யா:" என்கிறபடியே, அவர்கள் மநுஷ்யர்களுக்குக்கூட்டல்லர். (இனி) என்கிறபதத்தாலே - நான்முடிந்தே னென்கிறது ஸூசிக்கிறது. (அந்தோ) என்கிறபதத்தாலே எனக்குள்ளது அவனுக்குண்டாகப் பெறுமொழிவதே.

[நதேதேநரஷ்யா: - நதேமநுஷ்யா:] அவர்கள் செத்துப் பிறக்கிறவர்களுக்குக் கூட்டல்லர்கள். [தேவா:-தேவா:] அவர்கள் நித்யாநுபவம்பண்ணுகிறவர்களுக்குக் கூட்டாமித்தனை. [யஜத்ராஷி-யஇத்யாதி] பதினாலாண்டு மொருபடிதப்பிக்கிடந்து அவர் மீண்டுவந்தால் அவ்வொப்பித்த முகத்தைக்காணப்பெறும் பாக்யாதிகராரோ!. இங்கே, காதாசித்காநுபவம் பண்ணுமவர்கள், நித்யாநுபவம்பண்ணுமவர்களிலும் சீரியரே; (உ) "விண்ணுளாரிலும்சீரியரே." [வஷே-வஞ்சதசேவு - வர்ஷேபஞ்சதஸேபூர்ண:] பதினாலாண்டும் கழித்துப் பதினைந்தாமாண்டைக் கிருப்பாரிறே காணப்பெறுவார். காலம்முடிந்ததென்றிருக்கிறானைத்து சக்ரவர்த்தி.

---

## பத்தாம்பாட்டு.

அந்தோவணுகப்பெறுநாளென்றெப்போதும் * சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன் * கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் * வந்தேயுறைகின்ற வெம்மாமணிவண்ணா. (க0)

---

(க) ரா-அயோ-கூச-கூக- (உ) திருவி-எக

ப:—அநந்தரம், விடவொண்ணாத ரமணீயவிக்ரஹத்தையுடைய வுன்னைக்கிட்டப் பெறுநாளுண்டாவதுகாண் என்று நெஞ்சுகலங்கிக் கூப்பிடாநின்றேனென்கிறார்.

(இ - ள்.) கொந்தார் - கொத்தாகநிறைந்த, மலர்ச்சோலைகள் - பூவையுடைத்தானசோலைகள், சூழ் - சூழ்ந்த திருநாவாய் - திருநாவாயிலே, வந்தே.பரமபதாதிகளைவிட்டேவந்துநிற்குமவனாய் உறைகின்ற- நித்யவாஸம்பண்ணுகிற, எம்மாமணிவண்ணா - நிரதிசய போக்யமான நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையவனே, அந்தோ - ஐயோ!, அணுகப் பெறுநாள் என்று - உன்னை யணுகப் பெறுநாளாவதுகாண் என்று, எப்போதும் - ஸர்வகாலமும், சிந்தைகலங்கி - நெஞ்சுகலங்கி, திருமாலென்று-ஸ்ரீமானேயென்று, அழைப்பன்-கூப்பிடாநின்றேன்.

ஆறு;—(அந்தோ) இப்படி யுன்னை யாசைப்பட்டுப் பெறாதே யொழிந்தாலும் நிராஸனாய்விடமாட்டாதே, பின்னையும், என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருநாவாயிலே வந்திருந்தருளின விக்குணத்தையநுஸந்தித்து, என்றோவுன்னை நானணுகப்பெறுவதென்று எப்போதும் சிந்தைகலங்கித் திருமாலென் றழையாநிற்பனென்கிறார். (௧௦)

ஈடு; அவ;—உன்னைக் காணப்பெறாமை நெஞ்சழிந்து கூப்பிடாநின்றேனென்கிறார்.

(அந்தோவணுகப் பெறுநாளென்றெப்போதும்) சொல்லத்தொடங்கினது தலைக்கட்டமாட்டாத பலஹாநியாலே, அந்தோ! என்கிறார். "அணுகப்பெறுநாள்யவைகொல்" என்னவிறே நினைப்பது. (எப்போதும்) ஒருகால் சொல்லப்புக்கு இளைத்தால் விடுகை யன்றிக்கே, ஸர்வகாலமும். (சிந்தைகலங்கி) ஹ்ருதயங்கலங்கி, மாதாபிதாக்கள் பேரைச்சொல்லி ஆர்த்தனான ப்ரஜை கூப்பிடுமாபோலே திருமாலென்றழைப்பன்.

(கொந்தாரித்யாதி) கொத்துமிக்க மலரை யுடைத்தான சோலையாலேசூழப்பட்ட திருநாவாயிலே. நித்யவஸந்தமான சோலையை யுடைத்தாகையாலே நிரதிசயபோக்யமான தேசமென்கை. (வந்தே யுறைகின்ற) ஒரு தேசவிசேஷத்திலே சென்று காணக்கடவதான வடிவைக்கொண்டு ஆஶ்ரிதார்த்தமாகவந்து நித்யவாஸம்பண்ணுகிற

வனே. அவ்வடிவெனக்குக் காட்டாதவன்று உன்வரவு அஸத்ஸம மென்கை. (கO)

---

# பதினொன்றாம்பாட்டு.

வண்ணம்மணிமாடநன்னாவாயுள்ளானை * திண்ணம்மதிள் தென்குருகூர்ச்சடகோபன் * பண்ணார்தமிழாயிரத்திப்பத்தும் வல்லார் * மண்ணாண்டுமணங்கமழ்வர்மல்லிகையே. (கக)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக, உபயவிபூதியிலுண்டான வாதரணீயதையை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) வண்ணம்-நாநாவர்ணங்களையுடைத்தான, மணி-மாணிக்கங்களாலேசமைந்த மாடம் - மாடங்களையுடைத்தாய், நல்-நிரதிசய போக்யமான, நாவாயுள்ளானை - திருநாவாயிலேவர்த்திக்கிறவனைப்பற்றவுண்டாய், திண் - திண்ணியதாய், அம் - அழகிய, மதிள் - மதிளையுடைய, தென்குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடையதாய், பண்ஆர் - பண்நிறைந்த, தமிழாயிரத்து - தமிழானவாயிரத்து, இப்பத்தும் - இப்பத்தையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், மண் - பூமியுபலக்ஷிதமான லீலாவிபூதியை, ஆண்டு - தங்கள் நினைவின்படியே பகவத்பரமாக நிர்வஹித்து நித்யவிபூதியிலும் பகவதநுபவஜ்ஞாநத்தாலே, மல்லிகை - மல்லிகைபோலே பரிசுத்தமான, மணம்கமழ்வர் - யஶஸ்ஸௌரப்யவிகாஸத்தையுடையராவர். (கக)

இது கலிவிருத்தம்.

ஆறா:—(வண்ணம்) இத்திருவாய்மொழிவல்லார், ஐஹிகாமுஷ்மிக ஸகலபோகங்களையும் புஜிக்கப்பெறுவரென்கிறார். (கக)

ஈடு; அவ;—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார், ஐஹிகாமுஷ்மிகஸகலபோகங்களையும் புஜிக்கப்பெறுவரென்கிறார்.

(வண்ணம்மணிமாட நன்னாவாயுள்ளானை) நாநாவர்ணங்களான ரத்நங்களாலே செய்யப்பட்ட மாடங்களையுடைத்தாய், நிரதிஶயபோக்யமான திருநாவாயிலே நின்றருளினவனை.

(திண்ணமித்யாதி) திண்ணிதான மதிளையுடைத்தான திருநகரியையுடைய வாழ்வாரருளிச்செய்த, திருநாவாய்க்குரமைக்ஷ திரு

"கிட்டக்கடவோமல்லோம்" என்றிருக்கிற பெண்களுடைய காலேச் சென்று பிடியாநிற்கும் கண்களென்கை. நம்பிமூத்தபிரான் செய்வு ற்றை யடையச் செய்யாநிற்குமாய்த்து. குழலூதுகையிலே மூண்டு மீண்டு வார்த்தைசொல்லவொண்ணுமையாலே வாக்வ்யாபாரத்தை யெறட்டுக்கொள்ளாநிற்குமாய்த்து. பேச்சால் பிறக்கும் ஸ்பஷ்டதை நோக்காலே பிறக்கை. (தூமொழியிசைகள் கோண்டோன்று நோக்கி) அழகிய பேச்சோடே கூடின இசைகளாலே, கண்ணாலே நோக்கி யீடுபடுத்துமாபோலே யீடுபடுத்தி. இசையோடேகூடச் செய்தே யும் இயலும் தெரிந்திருக்கை. வாக்வ்யவஹாரமும் நேத்ரவ்ருத்தி ம்பு மாறுடினபடி.

(பேதுறுமுகஞ்செய்து நொந்துநொந்து) கேட்கிறவர்களிலும் தன் செவியணிந்தாகையாலே. "நாமீடுபடுகிறபடி கண்டால் அபலை களானவர்க ளென்படுகிறார்களோ" என்று மிகவும் நொந்து. "வன் னெஞ்சரான நம்மை வருத்தினபடி கண்டால், அபலைகளென்படுகி றார்களோ" என்று மிகவும்நோவுபட்டான். (பேதைநேஞ்சறவறப் பாடும்பாட்டை) பெண்களுடைய நெஞ்சு ஊடலை மறந்துவந்து பொருந்தும்படி பாடுகிறபாட்டை.

(ஆதுமோன்றறிகிலம்) அதுபாதகமாகிறபடி யெனக்கொன்றும் தெரிகிறதில்லை. (அம்மவம்ம) பூசல் பூசல். (மாலையும்வந்தது) மிக வும் பாதகமாம்படி ஸந்த்யையும்வந்தது. இனியிருந்து க்லேசிக்க வேண்டாதபடி இது முடித்தே விடும்போலே யிருந்தது. (மாயன் வாரான்) தன்னைப் பிரிந்தார் லஜ்ஜிக்கும்படி தானேயிழவாளனுப் வந்து கால்பிடிக்கு மாஸ்சர்யபூதன் வருகிறிலன். (சு)

---

## பத்தாம்பாட்டு.

மாலையும்வந்ததுமாயன்வாரான் மாமணிபுலம்பவல்லேறணை ந்த * கோலநன்னுகளுகளுமாலோகோடியனதுழல்களுங் குழறு மாலோ * வாலொளிவளர்முல்லைக்கருமுகை கள்மல்லிகையலம் பிவண்டாலுமாலோ * வேலையுர்விசும்பில் விண்டலறுமாலோ வென்சொல்லியுய்வனிங்கவனை விட்டே. (க0)

ப:—அநந்தரம், ஆஸ்சர்யபூதனானவன் வந்திலன், பாதகங்கள் நலி யாநின்றன, இனி யெங்ஙனே யுஜ்ஜீவிப்பேனென்கிறாள்.

(இ - ள்.) மாலையும்வந்தது - வருவதாக அவன் குறித்துப்போன மாலைக்காலமும் வந்தது. மாயன்-தன்ஸந்நிதியாலெல்லாம் அநுகூலிக்கும்படியான வாஸ்சர்யத்தையுடையவன். வாரான்-வருகிறிலன், மா மணி - பெரியமணிகள், புலம்ப - த்வநிக்கும்படி, வல் - பெருமிடுக்கனை. ஏறு - ஏறுகள். அணைந்த - அணைந்த, கோலம் - தர்ஸநீயமான வடிவையுடையவாய், நல் - ஏறுகளோடுசேர்ந்த வுகப்பையுடைத்தான, நாகுகள் - நாகுகளானவை, உகளும் - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரம ஸஞ்சாரத்தைப்பண்ணுகின்றன. குழல்களும் - பசுக்கள் குவிகைக்காகப் பலவிடத்திலுமூதின குழல்களானவை, அவன் குழலோசையை ஸ்மரிப்பித்து, கொடியன-அஸஹ்யமாம்படி. குழறும்-அக்ஷரமாக்ஷமாகத் வழியாகின்றன, வால் - வெளுத்த, ஒளி - ஒளியையுடைத்தான வளர்-கொடியானது மிகாகிற்கிற முல்லை - முல்லை, கருமுகை - கருமுகை, மல்லிகைகள் - மல்லிகைகளை. அலம்பி - அவகாஹித்து, வண்டு வண்டுகளானவை, ஆலும்-ஸ்ப்திமாகின்றன. வேலையும் - ஸமுத்ரமும்-விசும்பில்-ஆகாசத்திலே, விண்டலறும் - கிட்டி வாய்விட்டுக் கூப்பிடாநின்றது, இங்கு - இவ்வளவில், அவனை விட்டு - அவனைவிட்டு, என்சொல்லி - எத்தைச்சொல்லி, உய்வன் - உஜ்ஜீவிப்பேன். (௧௦)

ஆறு:—(மாலையும்) மாலையும்வந்தது, மாயன் வருகிறிலன், மாமணிபுலம்பவல்லேறணைந்த கோலநன்னாகுகள் களித்துக் கொடு வாராநின்றன, வண்டுவரைப்பெருமானுடைய திருத்தோழன்மார் குழல்களை யூதிக்கொடுவந்து புகுராநின்றனர், அதி தவளமான வொளிவளர்கிற முல்லை கருமுகைகள் மல்லிகைகளிலுதாத்தமான பூக்களின்மதுக்களைப்பருகி வண்டுகளாலாநின்றன, கடலும் கிளர்ந்து கொடுவாராநின்றது, இந்தசையிலவனைவிட்டு எத்தைச்சொல்லி யுய்வதென்கிறாள். (௯.)

ஈடு- அவ:—வருவதாகச்சொன்ன காலம் வந்திருக்க அவன் வருகிறிலன், பாதகங்களுடைய ஸந்நிதியிலவனை யொழியத் தரிப்பதெங்கேயென்கிறாள்.

(மாலையித்யாதி) மாலையும் பாலையும் கூடப் பிணைத்துவிட்டாற் போலேகாணும். வருவதாகக் குறித்துப்போன காலம் வந்தது, அவன்றான் வருகிறிலன். அவனைக்காணவே, ப்ரதிகூலமெல்லாமநுகூலமாய்த்தோற்றுமிறே. (மாமணிபுலம்ப) பெருத்தமணி த்வநிக்க ( வல்லேறித்யாதி ) நாகுகை புகுந்தாலல்லது மீளாதாய்த்து. அபிமதம் கைபுகுந்தாலல்லது மீளாத ஏறுகளோடே கலந்த தர்ஸநீய

மான ஸ்நேஹத்தையுடைய நாகுகள்; அந்த ஸம்ஶ்லேஷத்தாலுண்டான ஹர்ஷத்தாலே ஸஸம்ப்ரமவ்ருத்திகள் பண்ணுகின்றன. நான் ஶோகத்தோடேயிருந்தேன், இவை ஹர்ஷத்துக்குப் போக்குவிடாநின்றன. பின்னை யவன்செய்த தென்னென்னில்; அவனின்னமும் வரவுக்கு க்ருஷிபண்ணுகின்றான்.

(கோடியனவித்யாதி) தூரப்போன பசுக்களை யோரிடத்திலே திரட்டுகைக்காக அங்குமிங்கும் சிதறின விடையரடையத் திரண்டு எல்லாருமொக்கக் குழல்களைவாங்கி ஸந்த்யாஸமயத்திலே தங்கள் வரவை ஊரறியும்படியாகவும் பெண்கள்நெஞ்சில் மறமாறும்படியாகவும். எழுத்தும் சொல்லும்பொருளும் தெரியாதபடி யொன்றாக விரலியெழும்படி யூதுவதொருகுழலோசையுண்டு; அது பாதகமாகாநின்றதாய்த்து.

(வாலொளியித்யாதி) மிக்கவொளியையுடைத்தாய் கண்டவிடமெங்கும் தானேயாம்படி படர்ந்தமுல்லை, அப்படியிருக்கிற கருமுகை, மல்லிகை, இவற்றிலேபுக்கு மதுபாநம்பண்ணி, அலேகிற-ஆலிக்கிறவண்டுகளானவை ஸஸம்ப்ரம ந்ருத்தம் பண்ணுகின்றன; திர்யக்குகளானவை, ஸம்ஶ்லேஷத்தால்வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுக் களிப்பனவும், ஸஸம்ப்ரமந்ருத்தம பண்ணுவனவுமாகாநின்றன.

(வேலைப்பும்)கடலும், ஆகாஶத்திலே நின்று கூப்பிடாநின்றது. (இங்கவனைவிட்டு - என்சொல்லியுய்வன்) பாதகபதார்த்தங்களின் நடுவே, அவனையொழிய வெத்தைச்சொல்லி யுஜ்ஜீவிப்பது. இவை மேன்மேலென நலியாநின்றன, அவனோவந்திலன், நானுஜ்ஜீவிக்கவென்றொன்றுண்டோ, முடிந்தேனென்றபடி. (௧௦)

## பதினொன்றாம்பாட்டு.

அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா வணியிழையாய்ச் சியர் மாலைப்பூசல் * அவனைவிட்டகல்வதற்கேயிரங்கியணிகுருகூர்ச்சடகோபன்மாறன் * அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்தவாயிரத்துள்ளிவைபத்துங்கொண்டு * அவனியுள்ளலற்றிநின்றுய்மின் தொண்டீர்சொன்னமாலை நண்ணித்தொழுதே. (௧௧)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக பகவத்ஸம்ஶ்லே ஷத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்) அவனைவிட்டகன்று-அதிசயிதபோக்யனான க்ருஷ்ணனை விட்டகன்று, உயிராற்றகில்லா - ப்ராணதாரணம் பண்ணமாட்டாதே யிருப்பாராய், அணியிழை - அவன்வரவுக்கீடாக வணியப்பட்ட ஆபர ணங்களையுடையாரான, ஆய்ச்சியர் - கோபிமார், மாலை - மாலைக்காலத் தில், பூசல் - அவன்வரவுகாணமல் கூப்பிட்டபடியை. அவனை-அவனை, விட்டகல்வதற்கே - விட்டகன்றிருக்கைநிமித்தமாக, இரங்கி - நோவு பட்டு, அணிகுருகூர்-அழகியதிருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் மாறன்-ஆழ்வாரானவர், அவனி-பூமியை-உண்டு-ப்ரளயங்கொள்ளாமல் உண்டு, உமிழ்ந்தவன்மேல்-உமிழ்ந்த வன்விஷயமாக, உரைத்த-அருளிச் செய்த, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்துங்கொண்டு - இவைபத் தையும் ஸ்வீகரித்துக்கொண்டு, அவனியுள் - பூமிக்குள்ளே, அலற்றி நின்று-ப்ரீதியாலே திரளாகக்கூப்பிட்டுநின்று, தொண்டீர் - அநுபவசா பலத்தையுடையவர்களே, அச்சொன்னமாலை - அங்குச்சொன்ன ஆஶ்ரிதவ்யாமுக்தனான க்ருஷ்ணனை, நண்ணித்தொழுது - கிட்டித்தொ ழுது. உய்மின் - உஜ்ஜீவியுங்கோள்.

இத்திருவாய்மொழியிலிப்பத்துப்பாட்டும் - கோபிமார் தனித்தனி யேகூப்பிட்ட பாசுரமாதல், ஒருகோபிகை திரளோடேகூடியும் தனியு மாய்க்கூப்பிட்ட பாசுரமாதலாயிருக்கிறது. (௧௧)

இது எண்சீராசிரியவிருத்தம்.

ஆறு;—(அவனைவிட்டு) வண்டுவரைப் பெருமாளைப்பிரிந்து தங்களைக்கொண்டு தரிக்கமாட்டாமை * அந்தியம்போது அணியி ழையாய்ச்சியர் திரள்நின்று கூப்பிட்டாப்போலே, ஆழ்வாரும் அவ னைப்பிரிந்து தரிக்கமாட்டாமை கூப்பிட்டலற்றின வித்திருவாய் மொழியைக்கொண்டு அலற்றியுய்யலாமென்கிறார். (௧௧)

ஈடு-அவ:—நிகமத்தில், அவன்பக்கல் சாபலமுடையார், இத் திருவாய்மொழியைச்சொல்லி அவனைப்பெறுங்கோளென்கிறார்.

(அவனைவிட்டகன்று யிராற்றகில்லா வணியிழையாய்ச்சியர்) அவனைவிஶ்லேஷித்துத் தந்தாமுடைய ப்ராணன்களைக்கொண்டு தரிக்கக்ஷமைகளன்றிக்கே, அவனுடைய வரவுக்குறப்பாக வொப்

பிக்கப்பட்ட வாபரணங்களையுடைய இடைப்பெண்கள். (க) "கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப்புகுந்து" என்கிறபடியே, அவன்வரவுக்குடலாகத் தங்களையலங்கரித்து, வரும்காலத்தில் வரக்காணுமையாலே, திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம்குடியிற்பெண்கள் க்ருஷ்ணவிரஹத்திலே ஒருஸந்த்யையிற்கூப்பிட்ட கூப்பீடாய்த்து.

(அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி) (அவனுடைய பிரிவாலே நோவுபட்டு) அவர்களெல்லோரும்பட்ட க்லேசத்தை யிவளொருவரும் பட்டாரென்கை, (அவனியுண்டுமிழ்ந்தவன் மேலுரைத்த) (ஸர்வரையும்) ப்ரளயாபத்திலே ரக்ஷித்து அழிந்தவற்றையடையவுண்டாக்கின ஸர்வேஶ்வரன் திருவடிகளிலேயாய்த்துச் சொல்லிற்று. [தொண்டர்-அணிகுருகூர்ச்சடகோபன்மாறன், அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்தவாயிரத்துள்-அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி - அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா வணியிழையாய்ச்சியர் மாலைப்பூசல் - சொன்ன - இப்பத்தும்கொண்டு-அம்மாலைநண்ணித்தொழுது-அவனியுளலற்றிநின்றுய்மின்.]

இப்போதிதுசொல்லிற்று விரஹப்ரளயத்தில் நின்றும் தம்மையெடுக்கவேணுமென்கைக்காக. (அச்சொன்னமாலை நண்ணித்தொழுது - அவனியுளலற்றிநின்றுய்மின்தொண்டர்) அப்படிப்பட்ட வ்யாமோஹத்தை விளைக்கவல்லவனைக்கிட்டி, அவனைத்தொழுது, அவன்பக்கல் சாபலமுடையார், பூமியிலேநின்று அடைவுகெடக்கூப்பிட்டு உஜ்ஜீவித்துப்போகப்பாருங்கோள். இப்பாசுரத்தை யப்யஸிப்பார்க்கு என்னைப்போலேகூப்பிடவேண்டா, "என்சொல்லியுய்வன்" என்றுசைப்பட்டபேறு பெறுகையில் கண்ணழிவில்லை. (கக

ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) நாய்ச்சி-அ-எ.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஒன்பதாம்பத்து

## பத்தாந் திருவாய்மொழி

## மாலைநண்ணி – ப்ரவேசங்கள்

ஆறு;—(மாலைநண்ணி) 'என்சொல்லியுய்வ னிங்கவனை விட்டு'' என்று இடந்தலற்றுநிற்கச்செய்தே, அவனும் பசுமேய்த் துவந்துபுகுர அவர்களவனோடேகலந்து பரிமாறினாப்போலே, தம் முடைய வ்யஸநமும் தீரும்படி திருக்கண்ணபுரத்திலே அவனைக் கண்டு அவனோடேகலந்து பரிமாறி, தம்முடையபரீக்ஷையந்தாலே அநுகூல ஜநங்களைக்குறித்து. *

ப:—பத்தாந் திருவாய்மொழியில், கீழே ப்ராப்யத்வரையாலே ஆர்த்தராய்க்கூப்பிட்டவர்க்கு ஈஶ்வரன் அர்ச்சாவதாரஸுலபனாய்க் கொண்டு திருக்கண்ணபுரத்திலேநிற்கிற நிலையைக்காட்டி யிவருடைய வார்த்தியை ஶமிப்பிக்க விவ்வாபத்ஸகத்வத்திலே ஸந்துஷ்டராய்; வடதளஶாயித்வமஹோபகாரத்தையும், வஸ்தவ்யதேஶவைலக்ஷண்யத் தையும், விலக்ஷணவிபூதி யோகத்தையும், அதிஶயிதபோக்யத்வத்தை யும், பரமபதப்ரதத்வத்தையும், அநுபவவிரோதி நிராஸகத்வத்தையும், அநந்யப்ரயோஜந ஸுலபதையையும், ஸம்ஸாரநிவர்த்தகத்வத்தையும், காரணத்வத்தையும், ஶ்ரியஃபதித்வத்தையுமநுஸந்தித்து, ஏவம்ப்ரகார விஶிஷ்டனாய்க்கொண்டு ஆஶ்ரயணஸ்தலத்திலே யடிமைகொள்வதாக நிற்கிறகைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தைய மநுஸந்தித்து. அத்யந்த ஹ்ருஷ்டராய், "பக்திபரராயும் ப்ரபத்திபரராயும் உக்திபரராயுங்கொ ண்டு அவனையாஶ்ரயித்தும் அநுபவித்தும் அவன் திருவடிகளிலே கைங் கர்யம் பண்ணியும், நிவ்ருத்தஸாம்ஸாரிக ஸகலக்லேஶராய்க்கொண்டு வர்த்தியுங்கோள்". என்று, அவனுடைய கிஞ்சித்கார ப்ரதிஸம்பந்தித்வத் தால்வந்த பலரூபத்தை ப்ரதிபாதித்து நிகமிக்கிறார்

ஈடு;—* அறுக்கும் வினையாயின - அவனைப்பெறவேணுமென்று மநோரதமாய்ச்சென்றது; மநோரதமைபத்திலே அபேக்ஷிதம்படி கிடையாமையாலே மிகவும் க்லேஶப்பட்டபடி சொல்லிற்று - *மல்லி கைகமழ்தென்றலில்; அதுதான் ராத்ரி வ்யஸநமாய் நோவுபட்டபடி யிறே. இப்படி மநோரதித்துப்பெறாமையாலே நோவுபடுகிற இவ ருடைய வ்யஸாதத்தையநுஸந்தித்து, ஈஶ்வரன் "நீபோ இப்படி-

மனோரதிப்பீரும் அது கிடையாமல் க்லேசப்படுவீரும், உம்மைப் பெறவேணுமென்று மனோரதிப்போமும் நாமன்றோ, உம்மைக்கிடையாமையாவிழவுபட்டோமும் நாமன்றோ, உமக்கொரு குறையுண்டோ, * கலங்காப்பெருநகரம் கலவிருக்கையாயிருக்க அவ்விடத்தைவிட்டுத் திருக்கண்ணபுரத்திலே நாம்வந்து ஸந்நிதிபண்ணிற்றுமுமக்காகவன்றோ, சரீராவஸாநத்திலே உம்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவோம்" என்று ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராய், இவரும் ஹ்ருஷ்டராகிறார்; அவன் "ஒன்றுசெய்யக்கடவோம்" என்றால் அப்போதே பெற்றதாகநினைத்து ஹ்ருஷ்டராகலாம்படியிறே அவன்படியிருப்பது.

இப்படி ஹ்ருஷ்டராய், "அவன்படியிதுவானபின்பு, ஸர்வேச்வரன் ஸர்வஸ்மாச்ரயணீயனுய்க்கொண்டு திருக்கண்ணபுரத்திலே ஸந்நிதிபண்ணினான், எல்லாருமொக்க வவனையாச்ரயியுங்கோள், ஆச்ரயிக்குமிடத்தில் அவன்திருவடிகளிலே பக்தியைப்பண்ணுங்கோள், பக்திக்குப்பரிகரமில்லாதார் ப்ரபத்தியைப்பண்ணுங்கோள், அதுக்கீடான வத்யவஸாயமில்லாதார் உக்திமாத்ரத்தைபாகிலும் பண்ணுங்கோள், அவ்வளவேகொண்டு அவன்முன்னைவிடான், ஆனபின்பு எல்லாருமொக்க அவனை யாச்ரயியுங்கோள்" என்று பரோபதேசத்திலே ப்ரவ்ருத்தராகிறார். மோஹித்துக்கிடந்தாகில் கிடக்குமித்தனைபோக்கி, உணர்ந்தாராகில் பிறர்க்குஹிதஞ்சொல்லியல்லது நிற்கமாட்டார்.

"'சரீராவஸாநத்திலே உம்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவோம்' என்று ஈச்வரன்சொன்னவிடமும், அதுகேட்டு இவர் ஹ்ருஷ்டரானவிடமுங்கூடாது, 'ப்ராரப்தகர்மாவஸாநத்திலே மோக்ஷமாகக்கடவது' என்றன்றோ வேதாந்தங்களில்வாஸனை" என்னில்; இத்திருவாய்மொழிதன்னிலே "பக்தியைப்பண்ணுங்கோள்" என்றும், "அதுமாட்டாதார் ப்ரபத்தியைப்பண்ணுங்கோள்" என்றும், சொல்லிற்றிறே. அதில், உபாஸகனுகிற வதிகாரியைப்பற்றச்சொல்லுகிறது; இங்கு, ப்ரபந்நனுக்குச் சொல்லுகிறது,

(க) " தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யே - தஸ்ய தாவதேவசிரம்யாவந்நவிமோக்ஷ்யே" என்கிற வாக்யமன்றோ இவ்

(க) சாந்தோ. கூ-கச-

வர்த்தத்தைச் சொல்லுகிறது "'இதுதான் சரீராவஸாநத்தைப் பற்றச் சொல்லுகிறதோ, கர்மாவஸாநத்தைப் பற்றச்சொல்லுகிற தோ' என்று விசாரித்து, கர்மாவஸாநத்தைப் பற்றச்சொல்லுகிற தென்று ஸித்தாந்தித்ததில்லையோ, அத்தோடு விரோதியாதோ விது" என்னில், ந்யாயாநுக்ருஹீதமாயிறே வாக்யார்த்த ப்ரத் யாயகமாவது; உபாஸகனுக்குத் தான்பற்றினவுபாயம்முற்றி பலிக்க வேண்டுகையாலே அவ்வளவும் ந்யாயம்நடக்கும்; இவன், முதலடி யிலே, "என்னுடைய ஸர்வபாரங்களுக்கும் கடவாய்நீயே" என்று கொண்டு ஸர்வேஶ்வரன்பக்கலிலே பரந்யாஸம்பண்ணினவனிறே; "இவன்றான் செய்கிறதொன்றுண்டாய் அது பக்வமாய்ப் பெறவே ணும்" என்னும் விளம்பமேறுதுவுமில்லை, இவன்றான் பரந்யாஸம் பண்ணினவீஶ்வரனுக்கு அஶக்திபுண்டாய் அது விளம்பமேறுதுவா கிறதுமன்று. ஆகவிப்படி ந்யாயங்கள் காட்டினவாறே இவனுக்கு சரீராவஸாநத்திலே பேறுகைக்குத் தட்டில்லையிறே.

"இனித்தான், (க) ஸகுவகூஸ ஹுவஷாவஸா ஸகுவஷேவாவ ஸா-பகவந்தம் ப்ரபந்நாஸா பகவந்தமவாபஸா" என்று - மாதவி ப்ரபத்திபண்ணி அநந்தரம் பெற்றாளாகச் சொல்லாநின்றதிறே. முத்கலோபாக்யாநத்திலே வந்தவாறே "நரகாநுபவம்பண்ணுகிற வர்கள் பகவந்நாம ஶ்ரவணத்தாலே அநந்தரம் முக்தரானார்கள்" என்றதிறே; "அவதாரரஹஸ்யஜ்ஞாநமுடையவன் இச்சரீராவஸா நத்திலே பெறக்கடவன்" என்றேசொல்லாநின்றதிறே; (உ) "த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி" (ந) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றும் சொல்லாநின்றதிறே.

"ஆனால், ப்ரபத்திபண்ணினவநந்தரத்திலே பகவத்ப்ராப்தி யாகவேண்டாவோ, 'இவ்விரோதியைப்போக்கி உன்திருவடிகளைத் தரவேணும்' என்றன்றோ இவனபேக்ஷிக்கிறது, பின்னையும் அநபி மதமான சரீரத்தோடே யிருக்கிறவிருப்பு கர்மசேஷத்தாலேயாவ தோ, ஈஶ்வரன்வைக்கவிருக்கிறானவதோ" என்னில்; ஈஶ்வரன் வைக்கிறானாகில் அவனுக்குச் சிலதோஷம் ப்ரஸங்கிக்கும், அவன்

---

(க) காருடே-ஸ்ரீரங்கமாஹாத்- (உ) கீ ச-கூ-
(ந) கீ கஅ-சகூ-

றான் நம்விரோதியை நடுவே துண்டித்து அவ்வருகே கொண்டுபோகி றேன்" என்று சொன்னத்தோடும் விரோதிக்கும்; ஆனபின்பு, கர்மவச்யரோபாதி ஸுகதுஃகாத்யநுபவமிவனும் பண்ணியிருக்கையாலே கர்மத்தாலேயாயித்தனையன்றோ; இனி, கர்மம் நடையாடக்கடவதானால் அவ்வளவும் போகத்தட்டென்னென்னில்; அதுவேண்டா, அதிகாரிவிசேஷத்தாலே.

இவன் ப்ரபத்திபண்ணினவநந்தரம் முக்தனுமாகி விதுதன்னை நச்சுப்பொய்கைபோபாதியாக நினைத்தஞ்சி ஆள்பற்றாது; இனியிவனையிங்கே சிலநாளிருத்தவே, ஸ்ரீபீஷ்மரையிட்டு நாட்டுக்கு வெளிச்சிறப்பைப் பண்ணிக்கொடுத்தாப்போலே, இவன் சிலர்க்குபதேசித்தும், இவனுடைய வ்ருத்தங்கண்டு திருந்துவாருமாய், இங்ஙனே சிலநன்மைகளுக்கு முடலாயிருக்கும்; இனித்தான் "இவன்றன்னைத்தந்த சரீரமன்றோ" என்று இச்சரமசரீரத்தை ஈச்வரன் தானாக வுபேக்ஷிக்கவும்மாட்டான்.

இவன்றான் ப்ரபத்திபண்ணுகிற ஸமயத்திலே "இப்போதே விரோதிபோய் உன்திருவடிகளைப் பெறவேணும்" என்னும் த்வரையுமிவனுக்குண்டாக ஸம்பாவனையில்லை, முகம் பழகினதாகையாலே "இத்தைவிட" என்றால் கடுக இசையான்; இனியொரு சரீரபரிக்ரஹம்பண்ணுதல் கர்ப்பவாஸம்பண்ணுதல் செய்யாதொழியவேணுமென்னு மளவாய்த் திவனுக்குண்டாகிலுள்ளது; ஆகையாலே தத்க்ரதுந்யாயத்தாலே அப்படியே பேறாயிருக்கும்; இவனுடைய நினைவையும்பற்ற, "இவன்றானிதிலே சாபலம்பண்ணி யிருந்தானாகில் நாலுநாளிருந்திடுவானுக்கு" என்றிருக்குமீச்வரன்.

"ஆனால், இங்கிருக்கிறநாளுள்ளும் ஆதிவ்யாதிகளுக் கிடங்கொடாதபடி அல்லாதாரில் வ்யாவ்ருத்தி தோற்ற இவனை ஸுகோத்தரனாக வையாதொழிவானென், நாட்டாரோபாதி ஒன்றையிழந்தபோதாக சோகித்தும் ஒன்றினுடைய லாபமுண்டானபோது ஹ்ருஷ்டனைப்போலேயிருந்தும் போரும்படிக்கீடாகவைக்கிறதென்" என்னில்; இவன்றான் "இவ்விரோதியைப்போக்கி யுன்னைத்தரவேணும்" என்றே யபேக்ஷித்தது; இதுதான் தன்னிதென்றறியாதிறசச் செய்தேயும் விடாட்டாதிருக்கிறவன், இதிலே ஸுகோத்தரமாக்கிவைக்குமன்று, "இதுதானே நன்றாயிருந்ததாகில் இன்னம்

சிலநாளிருந்தானே அநுவர்த்தித்திடுக" என்றிருக்குமிறே; இவனுடைய விச்சைக்கீடாக வைக்குமன்று இன்னமுமொரு ஶரீரத்திலே யிவனுக்கு ருசியுண்டாகவுங்கூடுமே; ஆகையாலே, இவனுடையருசி தபாறுப் "இவனிருந்தபடியிருக்கிறான்" என்றிருக்கும்.

ஆகையாலே, முகம்பழகின இஶ்ஶரீரம் தன்னைடைபோகழிந்து இனி யொருசரீரத்திலே யிவனுக்கு ருசிபிறப்பதற்சமுன்னே, ஈஶ்வரனுக்கு கார்யஞ்செய்து தலைக்கட்டவாயிருக்கும். முகம்பழகினது தன்னைடைபோகழிந்துகொடுநிற்கும்; மேல் வரப்புகுகிற தறியாமையாலே அதில் ருசியில்லை; "இதுதான்றொக்லாது" என்று போகியாகவறிந்தும் வைக்குமே. இவன் முகலிலே "இத்தைத்தவிர்த்துத்தரவேணும்" என்று ஒருவார்த்தைசொல்லிலைக்கையாலே, அவனுக்கபுருஷார்த்தம் செய்தாளுகவும் வேண்டாவிறே. இனி சரமதைஶையிலே * காஷ்டபாஷாண ஸந்நிபனுயிருக்குமிறே. ஆகையாலே முதற்சொன்ன வார்த்தையைக் கொண்டு, இவன் விலக்கமாட்டாத வளவிலே ஈஶ்வரன் கார்யஞ்செய்து தலைக்கட்டும்.

"அசித்கல்பனுப்பக்கிடக்கிறவன் தலையிலே ஒருதேவையிடேன், நானே நினைக்கக்கடவேன்" என்று சொல்லிவைத்தானிறே. "இஶ்ஶ்லோகத்வயமும் எம்பெருமானுடைய ஸர்வஸ்வம்" என்றுசொல்லக்கடவதிறே. (௧) [ஸ்ரீதேநவலி-ஸ்த்திதேமநவி] * நின்றவா நில்லாநெஞ்சுமோரிடத்திலேநிற்பது. பட்டிதின்றுதிரியும் பசுவுடையவனுக்கு ஒன்றில் ப்ரவர்த்திக்கவொண்ணுதிறே; நெஞ்சைக்கொண்டு ப்ரவர்த்திக்கவேணுமிறே புருஷார்த்தம் பெறும்போது; (உ) "தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்" என்றானிறே. நாட்டார் ஊர்வஶீஸாலோச்யத்துக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுநிற்க, அவள்தான்வந்து உபஸ்த்தாநம்பண்ணுநிற்க, "நீயென்தாயன்றோ" என்று நமஸ்கரித்துக் கடக்கநிற்கவல்ல விரக்தனிறே இவ்வார்த்தை சொல்லுகிறான்.

[ஸ்வஸ்த்தேஶ்ரீரே-ஸ்வஸ்த்தேஶரீரே] பரிணுமத்ரவ்யமானஶரீரமு மொருநிலையிலேநிற்பது. [யாவத் தாதுஸாம்யே ஸ்த்திதே] அதுக்குறுப்பாக தாதுக்கள்நொ

(௧) வராஹசரமம். (உ) கீதை-௬ ௩௪.

ன்று முடங்கி ஒன்றுநிமிருகையன்றிக்கே இவையுமெல்லாம்ஸமமாய்; சரீரத்திலே பொருளாகவும்பிறந்து, ஸத்த்வம் தலையெடுத்தபோதாக நம்மையாவனொருவன் ஸ்மரிக்கிறான் - "நாமார், மரீரமாகிறவிது அசித்தாயிருந்தது, தேஹாதிரிக்தனாயிருப்பானொ ராத்மாவுளான், அவன்றானீஸ்வரனுக்கு மேஷபூதன், அவனைப்பெறுகையிவ்வாத்மாவுக்கு மோக்ஷமாகிறது" என்று ஸ்மரித்து.

[விஸ்வரூபஞ் சமாம் - விஸ்வரூபஞ் சமாம்] குடற்றுடக்காலே முட்பாய்ந்தால்வரும் வ்யஸநமாத்மாவுதாமாபோலே, இவற்றுக்கு வந்ததொன்று தனக்குவந்ததாம்படி எல்லாவற்றையும் மரீரமாகவுடையனாயிருக்கிறவனை. [அஜஃ - அஜம்] " இவனைப்போலே ஜந்மநிபந்தநமான கலக்கமின்றிக்கேயிருக்கையிறே. [ததஸ்ஸ்திதஃ - ததஸ்ஸ்தித்பாகி] நடையாடிக்கிரியுமன்று இவனுக்கு முண்டிறே யிந்நினைவு; அசித்கல்பனாய்க்கிடந்தவன்றும் "இவன்நினைத்திலன்" என்று தேவையிடாதே நானவனையெப்போதும் நினைத்தபடியே நிற்பன்.

[மத்பக்தம் - மத்பக்தம்] அடைகொடுபோம்பொகடு மவனையோவென்பற்றிற்று-நெடுநாள் பச்சையிடுவித்துக்கொண்டு கார்யகாலத்திலேவந்தவாறே பச்சையிடாதநாளையெண்ணி யகற்றுமவனையோ பற்றிற்று. [நயாமிபரமாம்கதிம் - நயாமிபரமாம்கதிம்] * கள்வன்கொல்லிற்பிராட்டியை அத்தவாளத்தலையையிட்டு மறைத்துக்கொடு போனாப்போலே, தானே கையைப் பிடித்துக்கொடு போமாய்த்து. ஆதிவாஹிகரைவரக்காட்டியாதல் பெரியதிருவடியை வரக்காட்டியாதல் கொடுபோகையன்றிக்கே, ஆதிவாஹிகரில் ப்ரதாநனான தானே கொடுபோம். *

# முதற்பாட்டு.

மாலைநண்ணித் தொழுதெழுமினோவினைகெட * காலைமாலை கமலமலரிட்டுநீர் * வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து * ஆலின்மேலாலமர்ந்தானடி யிணைகளே. (க)

ப—முதற்பாட்டில், வடதளமாயியான மஹோபகாரகன் திருவடிகளிலே ப்ரேமயுக்தராய்க்கொண்டு ஸர்வகாலங்களிலும் கைங்கர்யம் பண்ணுங்கோளென்று இத்திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யமான வர்த்தத்தை ஸங்க்ரஹித்தருளிச்செய்கிறார்.

(இ - ள்.) வேலை - திரைக்கிளப்பத்தையுடைய ஸமுத்ரத்தாலே, மோதும் - மோதப்பட்ட, மதிள்சூழ்-மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரத்து திருக்கண்ணபுரத்திலே வர்த்திக்குமவனாய், ஆலின்மேலாலமர்ந்தானடியிணைகள்-வடதளஶாயியாய்க்கொண்டு ஜகத்தைரக்ஷித்த அகடிதகடநாஸமர்த்தனானவன் திருவடிகளையுத்தேசித்து, மாலை - ப்ரேமபாரவஶ்யத்தை,நண்ணி-பெற்றுக்கொண்டு, காலைமாலை-அஹோராத்ரவிபாகமற ஆதராநுரூபமாக, கமலமலர்-விலக்ஷணமான தாமரைப்பூக்களை, இட்டு-பணிமாறி, நீர் - நீங்கள், வினை - உங்களநுபவாலாபக்லேசம், கெட - தீரும்படி, தொழுதெழுமினோ - (௧) "வஸாநுதிவஸா ஹ்ருஷ்டா: பத்தாஞ்ஜலிபுடா:" என்கிறபடியே ஶேஷத்வாநுரூபவ்ருத்தியைப் பண்ணி உஜ்ஜீவியுங்கோள்.

மேலாலென்றது-ஆலின்மேலென்றபடி. ஆல்-அசையாய்க்கிடக்கிறது. (௧)

ஆறு;—ஸர்வஸமாஶ்ரயணீயனைப்பற்றிக்கொண்டு திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளியிருந்த வெம்பெருமானை ரக்ஷகனாகப்பற்றி அவன்திருவடிகளைக் கமலமலரிட்டு நீர்வினைகெடத் தொழுதெழுமின், இதுக்கொரு காலநியமாபேக்ஷையு மில்லையென்கிறார். (௯)

ஈடு-அவ;—இத்திருவாய்மொழியிற் சொல்லுகிற வாஶ்ரயணத்தை ஸங்க்ரஹேணா வருளிச்செய்கிறார்.

(மாலைநண்ணித்தொழுதெழுமினோ) ஸர்வேஶ்வரன் திருவடிகளைக்கிட்டி யாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோள். மாலென்று - ஸ்நேஹகார்யமான வ்யாமோஹமாய், மாலையுமென்னவுமாய். பக்தியுக்தராயென்றபடி. (தொழுதெழுமினோ) என்கிறார், "தொழுதெழு" என்கிற தம்முடைய வாஸனையாலே. "அருளினன்" என்று ப்ரபத்தியைப்பற்றி யிழிந்தவராகையாலே, தம்வாஸனைதோற்றச் சொல்லுகிறார். (எழுமினோ) ஸர்வேஶ்வரனிவ்வாத்மவர்க்கத்துக்கெல்லாம் ஶேஷியாய் அவனைக் குறித்து ஶேஷத்வாகாரமெல்லார்க்குமொத்திருக்கையாலே பலர்க்குமாகச் சொல்லுகிறார். (வினைகெட) பகவத்ப்ராப்தி விரோதிவர்க்கமென்னுதல், * மல்லிகைகமழ் தென்றலில் விரஹக்லேஶந் தீரும்படியென்னுதல்.

---

(௧) பார-மோக்ஷ-௩௪௪-௫-

(காலைமாலை) ஆச்ரயணத்துக்குக் காலநியதி யில்லையென்கை (க)"ஆதிநடுவந்திவாய்" என்கிறபடியே ஸர்வகாலத்துக்கு முபலக்ஷணம். (கமலமலரிட்டு) ஸர்வபுஷ்பங்களுக்கு முபலக்ஷணம். நீங்கள் விரும்பின ப்ராச்ருக த்ரவ்யமேயமையுமென்கை. (நீர்) அதிகாரிகளும் முன்புத்தை நீங்களேயமையும். (வேலையித்யாதி) ஸமுத்ர மணித்தாரையாலே திரைகள்வந்து மோதாநின்றுள்ள மதிளாலே சூழப்பட்டிருந்துள்ள திருக்கண்ணபுரத்திலே. ப்ரமஹரமான தேசமென்கை.

(ஆலின்மேலாலமர்ந்தான்) ஸகலலோகங்களையும் வயிற்றிலே வைத்து ஒருபவனுன வாலந்தளிரின்மேலே கண்வளர்ந்தவன். உங்கள் விரோதிராஸங்கள் துர்க்கடங்களே யாகிலும் கடிப்பிக்கவல்லவனென்கை; அவனடியிணைகளை - இறைஞ்சுமின். (ஆலின்மேலாலமர்ந்தான்) ஆல் - நீரும், இடமும். நீரின்மேலா லென்றுமாம், ஆலின்மேலிடத்தென்றுமாம். ஆல் - செய்யுளின்பம். (க)

---

# இரண்டாம்பாட்டு.

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சுமின்* நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை * வெள்ளியேய்ந்தமதிள்சூழ்திருக்கண்ணபுர முள்ளி * நாளுந்தொழுதெழுமினோதொண்டரே. (உ)

ப:—அநந்தரம். அவன் வர்த்திக்கிறதேசத்தை யாராதித்து அதினுடைய க்ஷேமத்தையை யநுஸந்தித்து ஸுகிகளாய்வர்த்திக்கப் பாருங்கோளென்கிறார்.

(ப - ள்.) தொண்டர் - அநுபவசாபலமுடைய, நீர் - நீங்கள், கள் - மதுவை, அவிழும் - மலருகிற. மலரிட்டு - பூக்களைக்கொண்டு, இறைஞ்சுமின் - ஆராதியுங்கோள், போக்யஸம்ருத்தியாலே, நள்ளி - க்ஷுத்ரமான பெண்நண்டுகளகப்பட, சேரும் - சேர்ந்துவர்த்திக்கிற, வயல் - வயல்களாலே, சூழ் - சூழப்பட்ட, கிடங்கின் - அகழினுடைய, புடை - பர்ஸரத்திலே, வெள்ளி - வெள்ளியாலே, ஏய்ந்த - சமைந்த, மதிள் - மதிளாலே. சூழ் சூழப்பட்ட, திருக்கண்ணபுரம்-திருக்கண்ணபுரத்தை, ரக்ஷையுடையதேசமென்று, நாளுமுள்ளி - நித்யாநுஸந்தாநம்பண்ணி, தொழுதெழுமினோ-அநுபவஜநிதப்ரீதியாலே தொழுது கிளர்த்தியோடே வர்த்தியுங்கோள்,

---

(க) உ-திருவ-எ௬-

(இறைஞ்சுமின்) என்கிறவிடம். இதில் * அடியிணைகளோடே யந்விதமாய், தேசபரமாகவுமாம் வெள்ளியேய்ந்தவென்று - நக்ஷத்ரபதத்தோடே சேர்ந்தவென்றுமாம். அன்றியே, வெள்ளிபோன்ற நிறமுடைய மதியென்றுமாம், நள்ளி - பெண்நண்டு. (உ)

ஆறு: —(கள்ளவிழும்) அவன் திருவடிகளைக் கள்ளவிழும் மலரிட்டு நீரிறைஞ்சுமிடத்தில், அவற்றை நெஞ்சாலே நினைத்துக்கொண்டு நாளுமிறைஞ்சுமி னென்கிறார். (உ)

ஈடு-அவ;—"இவ்விஷயத்துக் கென்வருகிறதோ" என்றஞ்சும் சாபலமுடையார், ஸுரக்ஷிதமான தேசமென்று நிர்ப்பயராய் நித்யமாக வாஸ்ரயியுங்கோளென்கிறார்.

(கள்ளவிழுமித்யாதி) செவ்விப் பூவைக்கொண்டு ஆஸ்ரயியுங்கோள். ஸ்நேஹிகளாயிருப்பார், செவ்விப்பூத் தேடுவர்களிறே; (க) "கள்ளார்துழாயுங்கணவலரும்" என்கிறபடியே புஷ்பஜாதிமாத்ரமே யமையுமிறே அவன்படியைப்பார்த்தால். ஆக, த்ரவ்யதாரதம்யம்பாரான், ஆஸ்ரயிக்குமவன் ப்ரேமத்தையே பார்க்குமத்தனை. ஸ்ரீபுருஷோத்தமமுடையானுக்கு ராஜபுத்ரன் சாத்தின செண்பகப்பூ வார்த்தையை ஸ்மரிப்பது.

(நள்ளியித்யாதி) நள்ளியென்று-பெண்நண்டு. நீர்மாறுதலிடங்களிலே யாய்த்தலைவர்த்திப்பது. ஜலஸம்ருத்தியை யுடைத்தான வயலாலே சூழப்பட்ட அகழினருகே, கிடங்கு - அகழ். (வெள்ளியித்யாதி) நக்ஷத்ரபதத்தளவு மோங்கின மதிளென்னுதல், வெள்ளியாலே செய்யப்பட்ட (ததியான) மதிளென்னுதல். ப்ரத்யக்ஷிக்கிறிலோமாகிலும் ப்ரேமாதிசயத்தாலே அதிவிலக்ஷணமாய்த் தோற்றுமிறே.

(திருக்கண்ணபுரமுள்ளி) ப்ரேமத்தாலே நிர்ப்பயமான தேசமென்று அநுஸந்தித்து, இவ்விஷயத்திலே சபலராயிருப்பார், நித்யமாகத்தொழுது உஜ்ஜீவியுங்கோள். "அபர்வணிகடல் தீண்டலாகாது" என்னுமாபோலே இவ்விஷயத்தில் காலநியதியில்லை. (உ)

---

(க) தி-மொ-கக-எ-கூ.

## மூன்றும்பாட்டு.

தொண்டர்நுந்தந்துயர்போக நீரேகமாய் * விண்டுவாடாமல ரிட்டு நீரிறைஞ்சுமின் * வண்டுபாடும் பொழில்சூழ் திருக்கண்ணபு ரத் தண்டவாணன் * அமரர்பெருமானையே. (௩)

ப:—அநந்தரம், விலக்ஷணவிபூதியுக்தனுய்க்கொண்டு ஸுலபனுன ஸர்வேஶ்வரனை ஏகசுண்டரா யாராதியுங்கோளென்கிறார்.

(இ-ள்.) வண்டு - வண்டுகளானவை, பாடும்-களித்துப்பாடும், பொழில் - பொழில், சூழ் - சூழ்ந்த. திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, அண்டவாணன் - பரமபதநிலயனுய், அமரர்பெருமானை - ஸூரிபோக்யனுய்க்கொண்டு நின்றவனை, தொண்டர் - ஸகலகைங்கர்யாபிநிவேஶயுக்தரானவர்களே. நுந்தம்துயர் - உங்களநுபவாலாபக்லேசம், போக - தீரும்படி, நீர் - நீங்கள். ஏகமாய்-ஏக ஹ்ருதயராய்க்கொண்டு, விண்டு - விகாஸோந்முகமாய். வாடா - செவ்வியழியாத. மலரிட்டு-பூக்களையிட்டு. நீரிறைஞ்சுமின்-உங்கள் ஶேஷத்வாநுரூபமாக வாராதியுங்கோள். (௩)

ஆறு;— (தொண்டர்) ஸர்வலோகேஶ்வரனுப், * அயர்வறுமமரர்களதிபதியாயிருந்துவைத்து. ஸர்வஸமாஶ்ரயணீயனுகைக்காகத் திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளியிருந்தவனுக்கு அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்புங்கோளென்கிறார். (௩)

ஈடு-அவ;—திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதிநாதனுயிற்று; உங்கள் துக்கங்கெட அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

(தொண்டர்) ஆஸாலேச முடையாரான நீங்களென்னுதல், * (க) * ஸுஹ்ருஜ்ஜநவ்ருஸ்தீம் — அஹம்ஸர்வம் கரிஷ்யாமிக் கிட்டுப்பிறந்த நீங்களென்னுதல் (நுந்தம்துயர்போக) துயரும் அவர்களுக்கு வ்யாவ்ருத்தமாயிறே யிருப்பது. விஷயப்ராவண்யத்தால் வந்த துக்கமென்னுதல், இறைஞ்சப்பெறாத துக்கமென்னுதல். (நீரேகமாய் நீங்களநந்யப்ரயோஜநராயென்னுதல், நீங்களெல்லாரு மொருமிடறாயென்னுதல். "தொண்டர்" என்கையாலே எல்லாரு மொருமிடறாகலாயிறே

(க) ரா-அயோ-ங-க-நு

(விண்மேவோடாமலர்) அலரத்தொடங்கினவளவாய்க் கழிய வலர்ந்துவாடாதபூ. செவ்விப்பூவைக்கொண் டாச்ரயியுங்கோ ளென்கை. (வண்போமேமித்யாதி) வண்டுகள் மதுபானமத்தமாய்க்கொண்டு பாடாநின்றுள்ள சோலைசூழ்ந்த தேசம்; (க) "வஸந்தஸூர்ஜமாயஸ்நாஷ-ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" என்கிறபடியே. நிரதிசயபோக்யமானதேசமென்கை,

(திருக்கண்ணபுரத்தண்டவாணனமரர்பெருமானையே) திருக்கண்ணபுரத்திலேவந்து எளியனாயிருக்கிறவன் உபயவிபூதிநாதனைப்த்து; பரமபதநிலயனைப், * அயர்வறுமமரர்கள திபதியானவனென்னுதல். லீலாவிபூதிக்குநிர்வாஹகனுமாய், நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனுமானவனென்னுதல், இங்கே அப்ராப்ததா விரோதியைப்போக்கி பூர்ணாநுபவம்பண்ண ஓருதேசவிசேஷம் தேடிப்போக வேண்டா, நித்யஸூரிகளுமிங்கேவந்தநுபவிக்கும்படி ஸௌலப்யத்தை உடையனாயிருக்கிறவிங்கு; அந்தர்க்குவைக்கக்கடவதான கூல்பில் விழித்திருப்பார்க்கு உஜ்ஜீவனமில்லையே; அப்படியன்றிறே யிவ்வதுக்கை கதியில்லை. (உ) "ஸ்த்ரீபாலவ்ருத்தப-ஜாநாம்-ப்ரதிமாஸ்வ ப்ரபுத்ததாகாம்" இதுக் காளவந்தா ரருளிச்செய்யும்படி "அம்மேட்டி லோமாநிப் பாபா நின்றால் தேசிகருக்குச்சொல்லவேணுமோ" என்று. (௩)

## நான்காம்பாட்டு.

மானேநோக்கிமடப்பின்னை தன்கேள்வனைத் * தேனேவாடா மலரிட்டு நீரிறைஞ்சுமின் * வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ண புரம் * தானயந்தபெருமான் சரணாகுமே. (௪)

ப:—அநந்தரம் அதிசயிதபோக்யனான திருக்கண்ணனை. நப்பின்னைப் பிராட்டி சேர்த்தியிலே ஆராதியுங்கோளென்கிறார்.

(இ-ள்.) மான்-மானுடைய. நை-தோற்றுமையும்படியான, நோக்கி-நோக்கையுடையளாய், மடம் - ஆத்மகுணபூர்ணையான. பின்னை தன் - நப்பின்னைப்பிராட்டிக்கு கேள்வனே-வல்லபனைய். தேன்போலே போக்யபூத வெவஸ:-ரஸோவைஸ:" என்கிறபடியே தேன்போலே போக்யபூத

(க) தை-ப்ருகு-க௦ (உ) உத்தரகீதை- (௩) ஸைத-ஸூத ௭-

னைவனை, வாடா - வாடாத, மலரிட்டு - புஷ்பங்களைக்கொண்டு, நீர் - நீங்கள்; இறைஞ்சுமின் - ஆராதியுங்கோள், வானை-ஆகாசத்தை, உந்து-தள்ளும்படியோங்கின, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்தை, ''ஆச்ரிதர்க்கு முகங்கொடுக்கைக்கு யோக்யஸ்தலம். என்று, தான் நயந்த-தானேவிரும்பின, பெருமான் - ஸர்வேச்வரன், சரணுமே - அவ்வாச்ரணீயவேஷந்தன்னிலே யுங்களுடைய ஆராதநப்ரதிஸம்பந்தியாய்க்கொண்டு கர்தவ்யனுமே;

தேனை வாடாமலரென்று - பூவோடேகூட்டவுமாம். (ஈ)

ஆறு:—(மானைநோக்கி) எல்லார்க்கு மினியனாய்க்கொண்டு நப்பின்னைப் பிராட்டியோடேகூடத் திருக்கண்ணபுரத்திலே யெழுந்தருளியிருந்த வெம்பெருமானுக்கு இப்படி அநந்யப்ரயோஜநராய்க்கொண்டடிமைசெய்யவே, தன்திருவடிகளில் நித்யஸித்தமானகைங்கர்யரூப ஸம்பத்தை யுங்களுக்குத்தந்து ரக்ஷித்தருளுமென்கிறார்.

ஈடு-அவ:—ஆச்ரயிக்குமிடத்தில் நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக வாச்ரயியுங்கோள், அவனுங்களுக்கு ரக்ஷகனுமென்கிறார்.

(மானைநோக்கி) மானானது நையும்படியான நோக்கையுடையவள். மான்தோற்று நாணும்படியாய்த்து நோக்கிருப்பது. (மடப்பின்னைதன்கேள்வனை) ஸ்த்ரீத்வம் முதலான ஆத்மகுணங்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனாயுள்ளவனை. (தேனை) நிரதிசய போக்யனானவனை; இவ்வேப்பம்குடிநீரையன்றோ நானுங்களைக்குடிக்கச்சொல்லுகிறது. (வாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்) செவ்விப்பூவிட்டு நீராச்ரயியுங்கோள். தேனையும் செவ்விப்பூவையும் சேர்க்கைபோலேகாணும் ஆச்ரயணமாவது.

(வானையித்யாதி) ஆகாசத்தோடே ஸ்பர்த்தைபண்ணி அத்தைத் தள்ளுமாபோலே யிருக்கிற மதிளாலே சூழப்பட்டவூரை. துஷ்ப்ராக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி ஸுரக்ஷிதமானவூரென்கை. (தான்நயந்தபெருமான்) ''ஆச்ரிதஸம்ச்லேஷத்துக்குப் பாங்கானதேசம்'' என்று அத்தை விரும்பிவர்த்திக்கிற ஸர்வேச்வரனானவன். (சரணுமே) உங்களுக்குரக்ஷகனும்; அம்மதிளவனுக்காணுப்போலே உங்களுக்கவன்மதிளாம். (ஈ)

# ஐந்தாம்பாட்டு.

சரணமாகுந்தனதாளடைந்தார்க்கெல்லாம் * மரணமானால் வைகுந்தங்கொடுக்கும்பிரான்* அரணமைந்த மதிள்சூழ்திருக்கண்ணபுரத்தரணியாளன் * தனதன்பர்க்கன்பாகுமே. (௫)

ப:—அநந்தரம், ஆஶ்ரிதர்க்குப் பரமபதப்ரதனானவன், அவ்விஷயத்தில் கைங்கர்யாபிநிவிஷ்டரானார்க்கு, அபிநிவேஶந்தானொருவடிவு கொண்டாப்போலே யாமென்கிறார். (௫)

(இ - ள்.) தனதாளடைந்தார்க்கெல்லாம் - தன்திருவடிகளைக்குறித்து ப்ரபத்திபண்ணின ஸர்வாதிகாரிகளுக்கும், சரணமாகும் - தானேயுபாயபூதனாய்க்கொண்டு, மரணமானால் - அவர்களுடைய ம்ருதமான தசையில், வைகுந்தம் - அபுநராவ்ருத்திலக்ஷணமான தேசத்தை, கொடுக்கும் - கொடுக்கும், பிரான் - மஹோபகாரகனாய். அரணமைந்த - ரக்ஷகமாம்படி சமைந்த, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்திலே, தரணியாளன் - பூமியை ரக்ஷிக்கைக்காக வந்து நிற்கிறவன், தனதன்பர்க்கு - தன்திருவடிகளில் ப்ராவண்யமுடையார்க்கு, அன்பாகும் - ப்ராவண்யந்தானொருவடிவு கொண்டாப்போலேயாம்.

சரணமாகும் தனதாளென்று - உபாயமான திருவடிகளென்றுமாம். தரணியாளனென்று-ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபனென்றுமாம்.

ஆறு:—(சரணமாகும்) இப்படி பக்தியோகத்தாலே யவனையாஶ்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன்திருவடிகளையே யுபாயமாகப்பற்றினார்க்கு ஒருபடியாலன்றிக்கே யெல்லாப்படியாலும் ரக்ஷகனாய், அப்போதே அவர்களை யிப்ப்ரக்ருதியை விடுவித்துத் திருநாட்டிலே கொண்டுபோய் திவ்யப்ரக்ருதிகளாக்கி அவர்களோடே ஸம்ஶ்லேஷித்தல்லது தரிக்கமாட்டாதிருக்கச்செய்தே, அவர்களுக்கிப்ப்ரக்ருதிஸம்பந்தம் மஹாதிவாஸமையபாலே ஸஹ்யமாயிருக்கையாலே, அல்பகாலத்திலே யிப்ப்ரக்ருதியைவிட்டால் திருநாட்டிலேகொடுபோக்கருளி, பின்னையுமவர்கள்பக்கலுள்ள ஸ்நேஹாதிஶயத்தாலே தானொன்றும் செய்யாதானாய், இவர்களுக்கேதத்தைச் செய்வோமென்றிருக்கு மென்கிறார். (௬)

ஈடு-அவ;—இப்படி பக்தியோகத்தாலாஶ்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன்திருவடிகளையேயுபாயமாகப்பற்றினார் திறத்து அவன் செய்தருளும்படியை யருளிச்செய்கிறார்,

(சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்) ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களால் குறையநின்றாரேயாகிலும், தன் திருவடிகளையே உபாயமாகப்பற்றினார்க்கெல்லாம் ரக்ஷகனாய். கீழ் மூன்றுபாட்டாலும் சொன்ன பக்தியோகம் அதிக்ருதாதிகாரம், இதில் சொல்லுகிற ப்ரபத்தி ஸர்வாதிகாரமென்கிறது; (௧) "ஸஹோஹம்ஸவ-லை-ஞுதே ஷு-ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்னக்கடவதிறே. பகவத்விஷயந்தான் ஸ்பர்ஸவேதியாயிருக்குமிறே; கைசிகத்தில் பகவத்ஸம்பந்தமுடையானொருசண்டாளனோட்டை ஸம்பாஷணம் ப்ராஹ்மணனுடைய வாசாரவைகல்யத்துக்குப்பரிஹாரமாய்த்து; அவ்விடத்திலெல்லாம் சொல்லுகிறவர்த்தமிதுவேயாய்த்து.

(மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்) இவன்தன்பக்கலிலே பரந்யாஸம் பண்ணினவன்றுதொடங்கி இவனையொழியத் தனக்குச் செல்லாமையுண்டாயிருக்கச் செய்தேயும், இவனுடைய ருசியையநுவர்த்தித்து ஶரீரவிஶ்லேஷத்தளவும் அவஸரப்ரதீக்ஷனாய் நின்று, பின்னையதுண்டானால் பரமபதத்தைக்கொடுக்குமுபகாரகன். தன்திருவடிகளைப் பற்றினவன்றே தானிருக்கிறவிடத்திலே இவனைக்கொடுபோய்ச் சேரவைத்துக்கொள்ளவேண்டியிருக்கச்செய்தேயும், நடுவிவனிருக்கும் நாலுநாளும் அவனுக்கு "ஒருபகலாயிர மூழியாயிருக்கையாலே (மரணமானால்) என்கிறது, "மரணமானால்" என்கிறது - தனக்கசக்தியில்லை, இவனுக்குக் கர்த்தவ்யமில்லை, இவன் ருசியைக்கடாக்ஷித்து நிற்கிறவித்தனை. இப்பாட்டில் "மரணமானால்" என்றதைக் கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல்லாம்.

(அரணமைந்த) "நித்யஸூரிகள் பரியவிருக்கிறவனிங்கேநின்றான், என்வருகிறதோ" என்றஞ்சவேண்டாதிருக்கை, (தரணியாளன்) பூமிக்கு நிர்வாஹகன். ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனென்கை. (தனதன்பர்க்கன்பாகுமே) தனக்கு ஸ்நேஹிகளானார்பக்கல் அதிப்ரவணனும். (அன்பாகும்) (௨) "அன்புடையன்" என்று பிரிக்கவொண்ணாதபடி அன்புதானொருவடிவுகொண்டாப்போலேயிருக்கை. (௫)

---

(௧) கீதை-௯-௨௯. (௨) பெரியதிருவ-௩௫-

# ஆறும்பாட்டு.

அன்பனாதந் தனதாளடைந்தார்க்கெல்லாம் * செம்பொனாகத் தவுணனுடல் கீண்டவன்* நன்பொனேய்ந்த மதிள்சூழ் திருக்கண் ணபுரத்தன்பன் * நாளுந்தனமெய்யர்க்குமெய்யனே. (௬)

ப:—அநந்தரம், ப்ரஹ்லாதனுடைய ஸ்வாநுபவவிரோதியான ஹிரண்யனைப்பிளந்தவன், தன்பக்கல் பாரமார்த்திக ப்ரேமமுடையார்க்குப்பரமார்தபூதனுமென்கிறார்.

(இ - ள்) தனதாளடைந்தார்க்கெல்லாம் - தன்திருவடிகளை ஆஸ்ரயித்தார்க்கெல்லாம். அன்பனாகும்-நிரவதிகவாத்ஸல்யயுக்தனாய். செம் - சிவந்த, பொன் - பொன் போலேயிருக்கிற, ஆகத்து - வடிவையுடையனான, அவுணன் - ஹிரண்யாஸுரனுடைய, உடல் - சரீரத்தை, கீண்டவன் - அநாயாஸேந கிழித்தவனாய், அப்படி யாஸ்ரித விரோதிகளைப் போக்கி அடிமைகொள்ளுகைக்காக, நன்பொன் - நன்றான பொன்னாலே, ஏய்ந்த - சமைக்கப்பட்ட, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ண புரத்து-திருக்கண்ணபுரத்திலே, அன்பன் - விரும்பிவர்த்திக்குமவன், தனமெய்யர்க்கு-தன்பக்கல் பாரமார்த்திக ப்ரயோஜநபுக்தியுடையார்க்கு, நாளும் - என்றுமொக்க, மெய்யன்-தானுமவர்கள்பக்கலிலே பாரமார்த்திக ப்ரயோஜநபுத்தியுடையனாயிருக்கும். (௬)

ஆறு;—(அன்பனாதம்) இப்படி தன்திருவடிகளிலே யநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையாரானவர்கள் பக்கல், தானுமொன்று மநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையனாய், ஸ்வாநுபவவிரோதிகளையும் தானே போக்குமென்கிறார். (௬)

ஈடு-அவ;—தன்னையாஸ்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாமென்கிறார்.

(அன்பனித்யாதி) தன்திருவடிகளையே யுபாயமாகப்பற்றினார்க்கு, (௧) "ஸ்ரணாகதவத்ஸல:-ஸரணாகதவத்ஸல:" என்கிறபடியே அவர்கள்தோஷம் தோற்றாதபடி வ்யாமுக்தனாயிருக்கும்; (௨) "தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்-ஸதாமேதததகர்ஹிதம்" அவர்களுடைய விரோதிசெய்வதென்னென்னில்; ப்ரஹ்லாதனு

---

(௧) ரா-ஸு-௪௧-௨0- (௨) ரா-யு-௧அ-௩-

டையவிரோதி பட்டதுபடும். ஹிரண்யனாகிற வஸுரனுடைய ஶரீரத்தை யநாயாஸேந கிழித்தவன்.

(நன்பொனேய்ந்தமதிள்) நல்லபொன்னாலே செய்யப்பட்டமதிள். ஸ்ப்ருஹணீயமான மதிளென்கை. (திருக்கண்ணபுரத்தன்பன்) "ஆஶ்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கானதேசம்" என்று விரும்பிவர்த்திக்கிறவர். (நாளும்தனமெய்யர்க்குமெய்யனே) தன்பக்கலநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு, தானுமவர்கள்பக்கல் என்றுமொக்க வநந்யப்ரயோஜநனாயிருக்கும். தன்பக்கல் * மித்ரபாவமுடையார்க்கு (க) "நத்யஜேயம்-நத்யஜேயம்" என்றிருக்குமவன். (கூ)

# ஏழாம்பாட்டு.

மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம் * பொய்யனாகும்புறமே தொழுவார்க்கெல்லாம் * செய்யில்வாளையுகளுந்திருக்கண்ணபுரத்தையன் * ஆகத்தணைப்பார்கட்கணியனே (எ)

ப:—அநந்தரம், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய்க்கொண்டு ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவ்வோ ப்ரயோஜநங்களைக்கொடுத்து அகலநிற்குமென்கிறார்.

(இ-ள்.) விரும்பித்தொழுவார்க்கெல்லாம் - தன்பக்கலிலே ப்ரயோஜநபுத்திபண்ணி விரும்பி யாஶ்ரயிப்பார்க்கெல்லாம், மெய்யனாகும்-தன்னுடைய பாரமார்த்திகமான ப்ராப்யாகாரத்தை யுடையனாய்க்கொண்டு ப்ரகாசியாநிற்கும். புறமேதொழுவார்க்கெல்லாம் - புறம்பே சிலப்ரயோஜநங்களைக் கணிசித்து தகர்த்தமாக வாஶ்ரயிப்பார்க்கு. பொய்யனாகும் - அந்த ப்ரயோஜநத்தளவைக் கொடுத்துத்தன்னை மறையாநிற்கும். செய்யில் - தன்னிலமானசெய்யிலே. வாளை-வாளையானது, உகளும் - உகளாநிற்கிற, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, ஐயன் - உபயஸாதாரணமாக நிருபாதிகபந்துவாயிருக்கிறவன். ஆகத்தணைப்பார்கட்கு - தங்களாகவாயிலே தன்னை ப்ராப்யமாக ஸ்வீகரிப்பார்க்கு, அணியனே - ஸாதாரணபந்துவா யிருக்கச்செய்தே அஸாதாரணஸுலபனும் (எ)

ஆ ஈ;—(மெய்யனாகும்) இப்படி யநந்யப்ரயோஜநமாகத் தொழுவார்க்கெல்லாம் தன்னை யுள்ளபடியே காட்டிக்கொடுக்கும், அநந்ய

(க) ரா-யு-க அ-ரு-

ப்ரயோஜநமாகத் தொழுதார்க்கெல்லாம் தன்னையுள்ளபடி காட்டான். அநந்யப்ரயோஜநராக வோரஞ்ஜலிமாத்ரத்தைப்பண்ண அவனிப்படி ஸுலபனோவென்னில்; "தானே ப்ராப்யன்" என்றிருப்பார்க்கு அவன்ஸுலபனும், இவ்விடத்திலொரு ஸந்தேஹமில்லை யென்கிறார். (எ)

ஈடு-அவ;—அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய்ப் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அத்தைக்கொடுத்துத் தானகலநிற்குமென்கிறார்.

(மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்) அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு அவர்களாசைப்பட்டதிலும் மிகவதிகத்தை முடியநடத்தும்; புறம்பே ப்ரயோஜநங்களைப்பற்ற வாஞ்சையிருப்பார்க்கு புக்தகமான வப்புருஷார்த்தங்களை யங்கீகரித்துக் கொடுக்கானாய்த் தன்னைக்கொண்டகலும். (க) "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணைவயா: - க்ருஷ்ணைச்வர்யா: க்ருஷ்ணபலா:" என்றிருப்பார்க்கு மெய்யனாயிருக்கும்; படைத்துணை வேண்டிவந்த துர்யோதநனுக்கு நாராயண கோபாலர்களை யடையக் கொடுக்கானாய், தான் பாண்டவர்களுக்காக நின்று அத்தலையை யழியச்செய்கையாலே பொய்யனாகும்.

(செய்யிலித்யாதி) செய்களிலே மத்ஸ்யமானது உகளித்துவர்த்திநிற்கிற திருக்கண்ணபுரத்திலே நிற்கிறபரமபந்து. திர்யக்குகளும் களித்து வர்த்திக்கும்படியான போக்யதையையுடைய தேசமென்கை. தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருக்கும் - அநந்ய ப்ரயோஜநர்க்கு (உ) "க்ஷீராப்திவாஸே [illegible] தடாகே கிரளஸ்வரூபஸ்திதே" என்றிருக்கும். (எ)

---

## எட்டாம்பாட்டு.

அணியனாகுந்தனதாளடைந் தார்க்கெல்லாம் * பிணியுஞ்சாராப்பிறவிகெடுத்தாளும் * மணிபொன்மதிள்சூழ் திருக்கண்ணபுரம் பணிமின் * நாளும்பரமேட்டிதன்பாதமே. (அ)

ப:— அநந்தரம், தன்திருவடிகளையே ப்ராப்யமென்றடைந்தார்க்கு அத்யந்தஸுலபனாய்க்கொண்டு ஸம்ஸாரோச்சேதத்தைப் பண்ணுமென்கிறார்.

(க) பாரத-த்ரோண-கஅ௯ உ௪- (உ) ரா-யா-௯க-௪-

(இ - ள்) தனதாள் - நிரதிஶயபோக்யமான திருவடிகளை, அடைந் தார்க்கெல்லாம்-கிட்டினார்க்கு, அணியனாகும்-தானத்யந்தாஸந்நனாய்க் கொண்டு புஜியாநிற்கும், அத்தாலே, பிணியும் - ப்ரயோஜநாந்தரரூப மான வ்யாதியானவை, சாரா - கழியாநிற்கும், பிறவி-அதுக்கு ஹேது வான ஜந்மஸம்ஸர்க்கம், கெடுத்து-பிறவாதபடிகழித்து, ஆளும்-அடிமை கொள்ளாநிற்கும், ஆதலால், மணி - மணியும், பொன் - பொன்னும், ஏய்ந்த - சேர்ந்த, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கணபுரம்-திருக்கண் ணபுரத்திலே, பரமேட்டிதன் பாதம்-பரமபதத்திலே யிருக்குமாபோலே ஸந்நிஹிதனானவன் திருவடிகளை, நாளும் - நிரந்தரமாக, பணிமின் வணங்கி அநுபவிக்கும்படிப் பாருங்கோள்.

கணபுரமென்று - ஏழாம்வேற்றுமை யெஞ்சிக்கிடக்கிறது 'அ)-

ஆறு;— ( அணியன் ) இப்படி தன்திருவடிகளையே ப்ராப்ய மென்று பற்றினா ரெல்லாருடைய து:கங்களையும் து:கஹேதுவான ஸம்ஸாரத்தையும்போக்கி, அவர்களுக்கு ஸுலபனும்; ஆதலால் ஸ்ரீவைகுண்டத்தி லெழுந்தருளியிருக்குமாபோலே திருக்கண்ணபு ரத்தி லெழுந்தருளியிருந்த வெம்பெருமானைப் பெறுகைக்கு அவன் திருவடிகளையே யுபாயமாகப் பற்றுங்கோள்; இதுக்கொரு காலநியம மில்லை, வேண்டினபோ தாஶ்ரயிக்கலாமென்கிறார். (அ)

ஈடு-அவ;—அவனை யாஶ்ரயியுங்கோள், உங்களுடைய து:கத் தையும் து:கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கியருளுமென் கிறார்.

(அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்) தன்திருவடி களையாஶ்ரயித்தாரை வரையாதே அவர்களுக்குஸுலபனும், இன்று ஆஶ்ரயித்ததொரு திர்யக்கைக்குறித்து (க)"கிம் கார்யம் ஸீதயாமம" என்றாரிறே. (பிணியும் சாரா) உங்களு டைய ஸகலது:கங்களும்போம். (பிறவிகெடுத்தாளும்) அந்த து:க ஹேதுவான ஜந்மத்தைப்போக்கி அடிமைகொள்ளும்.

(மணிபொனேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம்) மணியா லும் பொன்னாலும் செய்தமதிளாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத் திலே யென்று - ஸப்தமியாக்கிக்கொள்ளுவது. (பரமேட்டிதன்பாத

(க) ரா-யு-௬க-௬-

மே-பணியின்நாளும்)பரமபதத்திலிருக்கும்படியி லொன்றும் குறை யாதபடியாய்த் திங்கிருப்பது. அவன் திருவடிகளிலே ஸ்வரூபாநு ரூபமானவ்ருத்தியைப் பண்ணுங்கோள்; அங்கு நித்யஸூரிகள் பணி யவிருக்குமவன் இங்கேவந்தபின்பு, நீங்களு மவன்திருவடிகளிலே பணியப்பாருங்கோள். (௮)

---

## ஒன்பதாம்பாட்டு.

பாதநாளும்பணியத்தணியும்பிணி* ஏதஞ்சாரா வெனக்கேலி னியென்குறை* வேதநாவர் விரும்புந்திருக்கண்ணபுரத் தாதியானை* அடைந்தார்க்கல்லலில்லையே. (௯)

*ப:—அநந்தரம், நானவனை ப்ராபித்து என்ஸகலதுக்கங்களும் தீரப் பெற்றேன்; காரணபூதனானவனைக் கிட்டினார்க்கு துக்கமுண்டோவென் கிறார்.*

(இ-ள்.) பாதம் - அவன்திருவடிகளை, நாளும்-நாடோறும், பணிய - அநுபவிக்க, பிணி - முன்புண்டான துக்கங்களெல்லாம், தணியும்- போம், ஏதம் - மேலுமொருதுக்கங்களும், சாரா - வாராதுகள், இனி - ஆதலால், எனக்கு - எனக்கு, என்குறை - என்னகுறையுண்டு, வேதநாவர் - வேதோச்சாரணத்தை நாக்குக்கு நிரூபகமாகவுடையவர்கள், விரும்பும்-(க) "வேதவேத்யே-வேதவேத்யே" என்று வர்த்திக்கையாலே விரும்பும்படியான, திருக்கணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, ஆதியானை - வேதைகஸமதிகம்யனான பரமகாரணபூதனை, அடைந்தார்க்கு - ப்ராபித்தார்க்கு, அல்லல் - துக்கம், இல்லையே - இல்லையாகாதே.

" பிணி - ஏதம், என்று - பூர்வாகோத்தராகங்களுமாகவுமாம். (௯)

ஆறு;—(பாதநாளும்) இப்படி யவன்திருவடிகளை யாஶ்ரயிக்கவே, பகவதநுபவவிரோதியான உத்தரபூர்வாகங்களெல்லாம் போம்; இதிலொரு ஸம்ஶயமில்லையென்றுசொல்லி, அவன்திருவடிகளையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் பற்றப்பெற்றேன், எனக்கினியென்னகுறையுண்டு என்றுகொண்டு ஸ்வலாபத்தைச் சொல்லுகிறார். (௯)

ஈடு; அவ;—உபதேஶநிரபேக்ஷமாக நான்முன்ன மவனையாஶ்ரயித்து ஸுகியாகப் பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

(பாதநாளும் பணியத்தணியும்பிணி) அவன்திருவடிகளை யா ஶ்ரயிக்கவே, அநாதிகாலார்ஜிதமான பூர்வாகம் நசிக்கும், இனியது செய்ய, விரோதியானபாபம்போமென்கை. (ஏதஞ்சார்ரா) உத்தராகமானது சேஷியாது. (எனக்கேலினியென்குறை) அவன்திருவடிகளிலே தலைசாய்க்க என் ஸகலதுரிதங்களும் போவதானபின்பு, எனக்கொருகுறையுண்டோ.

(வேதநாவரித்யாதி) வேதார்த்தவித்துக்கள் விரும்பிவர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனான ஜகத்காரணபூதனை. வேதநாவரென்கிறது - திருமங்கையாழ்வார்போல்வாரை. விரும்புகையாவது (க) "கண்ணபுரமொன்றுடையானுக் கடியேனொருவர்க்குரியேனோ" என்கை. ப்ரமாணம் வேதமாய், ப்ரமேயம் ஜகத்காரணமாயிறே யிருப்பது, (௨) "காரணந்து த்யேய:- காரணந்துத்யேய:" என்று ஜகத்காரணவஸ்துவிறேத்யேயம். ( ஆதியானையடைந்தார்க்கல்லலில்லையே ) தாய்மடியிலே சாய்ந்தார்க்கு க்லேஶமில்லையென்னுமிடம் நிஸ்ஸிதம். (௯)

---

# பத்தாம்பாட்டு.

இல்லையல்லலெனக்கேலினி யென்குறை* அல்லிமாதரமருந்திருமார்பினன்* கல்லிலேய்ந்மதிள்சூழ் திருக்கண்ணபுரஞ்சொல்ல* நாளுந்துயர்பாடுசோராவே. (௧௦)

*ப:—அநந்தரம், ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனுடைய திருக்கண்ணபுரத்தைச்சொன்னவளவிலே து:க்கங்கள்வாராதபடியாயிருந்தது; எனக்கினி யென்னகுறையுண்டென்கிறார்.*

*(இ - ள்.) அல்லி - தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடையளாய், மாதர் - ஸ்த்ரீகளுள்உத்தமையான லக்ஷ்மி. அமரும் - நித்யவாஸமபண்ணுகிற, திருமார்பினன்-திருமார்பையுடையவனாய் கல்லிலேய்ந்த-கல்லாலேசெறிந்த மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரம்-திருக்கண்ணபுரத்தை, சொல்ல-சொன்னவளவிலே நாளும்-ஸர்வகாலமும். துயர் - துக்கங்கள், பாடு - அருகு சாரா-வாராதனவாயிருந்தன, ஆனபின்பு; எனக்கு - எனக்கு, அல்லல்-அநுபவாலாபது:கம், இல்லை-உண்*

---

(க) தி-மொ-அ-௬-௩- (௨) அதர்வஶிரஸ்-

டாகாதாயிருந்தது, இனி-இப்படியானபின்பு, என்குறை-என்னகுறை யுண்டு.

அநுபவமவிச்சிந்நமன்றோ வென்றுகருத்து. ௧௦)

ஆறு;—( இல்லையல்லல் ) அவன்திருவடிகளை யாஸ்ரயித்து நிரஸ்தஸகலதுஃகனானேன், எனக்கினியென்னகுறை யுண்டென்று, ப்ரீத்யதிசயத்தாலே பின்னையும் தம்முடையலாபத்தைச் சொல்லி, "அவனோரக்ஷகன்" என்று விஸ்வஸிக்கமாட்டீராகில் திருக்கண்ணபுரமென்று சொல்லுங்கோள், சொல்லவே ஒருநாளும் துஃகங்கள் வாராவென்கிறார். (௧௦)

ஈடு-அவ;—ப்ரீத்யதிசயத்தாலே ஸ்வலாபத்தைச்சொல்லி, பக்திப்ரபத்த்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார் திருக்கண்ணபுரமென்கிற வு[illegible]யைச் சொல்லவே ஸமஸ்தது:கங்களும் போமென்கிறார்.

( இல்லையல்லல் ) ஸகலதுஃகங்களும்போம், ( எனக்கேலினி யென்குறை ) இனி யெனக்கென்னகுறையுண்டு. பகவதநுபவவிரோதியான துரிதங்களும்போனபின்பு, எனக்கநுபவத்துக் கொருதேசவிசேஷம் தேடிப்போகவேண்டியிருந்ததோ.

(அல்லியித்யாதி) பெரியபிராட்டியார் நித்யவாஸம் பண்ணுகிற திருமார்வையுடையவன். ஆஸ்ரயணத்தில்குறைபார்த்து அவன்நாதரியாதபடி (க) "நகஸ்த்ரீணாவாராய்தி-நகஸ்சிந்நாபராத்யதி" என்பாருமருகேயுண்டு, திண்ணிதான மதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலேசொல்ல. பக்தியிலிழிகைக்குப் பரிகரமின்றியே ப்ரபத்திக்கு வ்யவஸாயமின்றிக்கே யிருக்குமவர்கள், "திருக்கண்ணபுரம்" என்று வாயாலேசொல்லவே, ஸமஸ்ததுஃகங்களும்போம்.

## பதினொன்றாம்பாட்டு.

பாடேசாராவினைபற்றறவேண்டுவீர் * மாடநீடுகுருகூர்ச் சடகோபன்சொல் * பாடலானதமிழாயிரத்துளிப்பத்தும் பாடியாடி * பணிமினவன்தாள்களே, (௧௧)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவதநுபவத்தை யருளிச்செய்கிறார்;

(க) ராயு-௧௧௯-௪௪-

(இ - ன்) வினை - ஸாம்ஸாரிக ஸகலது:கங்களும், பாடசாரா-உங்கள் பரிஸரத்திலேயன்றியே, பற்றறவேண்டுவீர் - ஸவாஸநமாகப்போக வேண்டியிருந்திகோளாகில், மாடம் - மாடங்கள், நீடு - உயர்ந்த, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்ததாய், பாடலான - கானரூபமான, தமிழ் - த்ராமிடமாயிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, இப்பத்தும் - இப்பத்தையும், பாடி - ப்ரீதியுக்தராய்க்கொண்டுபாடி, ஆடி - ஹர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி, அவன்தாள்கள் - அந்தஸௌலபனான ஸர்வேஶ்வரன் திருவடிகளை, பணிமின் - வணங்கி அநுபவிக்கும்படி பாருங்கோள்.

இத்திருவாய்மொழி முகத்தாலே, பகவதநுபவம்பண்ணவே ஸமஸ்த துரிதமும் ஸவாஸநமாகப் போமென்றுகருத்து.

இது கலிவிருத்தம். (கக)

ஆறு;—(பாடசாரா) ஸௌகரூபமான வுபாயத்தாலே நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகராய்க்கொண்டு எம்பெருமானைப்பெறவேண்டுவீர், திருவாய்மொழியைப் பாடுங்கோளென்கிறார். (கக)

ஈடு-அவ:—நிகமத்தில், ப்ரதிபந்தகங்கள் ஸவாஸநமாகப் போக வேண்டியிருக்கில், இத்திருவாய்மொழியை ப்ரீதிபூர்வகமாகச்சொல்லிக்கொண்டு அவன் திருவடிகளை யாஶ்ரயியுங்கோளென்கிறார்.

(பாடசாராவினைபற்றறவேண்டுவீர்) வினை உங்கள் பார்ஶ்வத்திலேவந்துகிட்டாதபடி ஸவாஸநமாகப்போகவேண்டி யிருந்திகோளாகில். (மாடநீடித்யாதி) நித்யமானமாடங்களையுடைத்தான திருநகரியையுடைத்தான வாழ்வாரருளிச்செய்த. ஆப்தோபதேசமாகையாலே, திருவாய்மொழியிற்பிறந்தவற்றிலர்த்தவாதமில்லை.

(பாடலித்யாதி) அநாப்தர் சொல்லிலும் விடவொண்ணாத போக்யதையையுடைத்தானபத்து. புஷ்பம் பரிமளத்தோடே யலருமாபோலே, இசையோடேகூடப்பாடினதமிழ். (பாடியாடிப்பணிமினவன்தாள்களையே) ப்ரீதிபூர்வகமாகப்பாடி, இருந்தவிடத்திலிராதே யாடி ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு அவன் திருவடிகளிலே விழுங்கோள். இதன்றோ நாளுங்களைக்குடிக்கச் சொல்லுகிற வேப்பங்குடிநீர். * தேனேமலரும் திருப்பாதத்தைநயிறே சேரச்சொல்லுகிறது. (கக)

திருவாய்மொழி ஒன்பதாம்பத்து முற்றிற்று.

---